உ

திருச்சிற்றம்பலம் **1945**

# எட்டாந் திருமுறை

---

## மாணிக்கவாசகர்

அருளிச்செய்த

# திருவாசகம்

# திருக்கோவையார்

---

காவேரிபாக்கம்

நமச்சிவாய முதலியார்

பதிப்பித்தது

# பொருளடக்கம்



# முன்னுரை

திருவாசகம் என்னுந் தெய்வத் தமிழ்மறை நூலைச் செய்தருளிய பெரியார் மாணிக்கவாசகர் ஆவர். 'மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே என்பது திண்ணம்' என்பர் இலக்கணக்கொத்து இயற்றிய ஈசான தேசிகர். 'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பது ஒருண்மைப் பழமொழியன்றோ!

திருவாசகத்தின் அமைப்பு பலதிறப்பட்டுக் காண்கின்றது: திருவாசகம் அச்சிடப்பட்ட முறை ஒன்று; மாணிக்க வாசகர் வரலாற்றை உரைக்குந் திருவாதவூரர் புராணத்துக் காணப்படும் முறை யொன்று; திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் உரைக்கும் முறை அவ்விரண்டற்கும் வேறானது. இவற்றுள் அச்சிடப்பட்டுள்ள முறை மற்றையவற்றோடு ஒருவாற்றானும் ஒற்றுமை யுடையதாகக் காணவில்லை. அது, திருவாசகத்தை மணிவாசகனார் கூற, அம்பலவாணர் எழுதிய அம்முறையாக இருத்தலாமோ வெனின், உற்று நோக்குங்கால் அதுதானும் பொருத்தமுடையதாகக் காணவில்லை. அகவல் மூன்றினையும் கலி வெண்பாவோடு சேர்த்து முதற்கண் அமைத்தது ஒருவாறு பொருத்தமுடையதாயினும் மற்றைத் தலங்களைக் குறிக்கும் பதிகங்கள் வேறு வேறான இடங்களில் அமைந்ததற்கு இயைபு ஏதும் புலப்படவில்லை.

திருவாதவூரர் முதற்கண் திருப்பெருந்துறையில் திருவாசகம் பாடத் தொடங்கினர். அக்காலத்தே அவர்க்குக் குருமூர்த்-

தியால் இடப்பட்ட பெயர் **மாணிக்க வாசகர்** என்பது. பின்னர், அவர் மதுரைக்குப் போந்த வரலாறுகளும், அதன்பின் திருவுத்தர-கோசமங்கை, திருவாரூர், திருத்தோணிபுரம் (சீர்காழி), திருவண்ணா-மலை, திருக்காஞ்சி, திருக்கழுக்குன்றம் ஆகிய தலங்களுக்குச் சென்று, இறுதியில் திருத்தில்லையை யடைந்து, புத்தரை வாதில் வென்று, முத்தி யடைந்தனர் என்பதே அவருடைய வரலாறாக முடிந்தது. திருவாதவூரார்புராணமட்டும், மணிவாசகனார் மதுரைக்கு வந்து, குருமூர்த்தியைக் குதிரை வணிகனாக வரச்செய் சொக்கரை மண் சுமக்கப் புரிந்து, அரசனிடம் விடைபெற்று திரும்பவும் திருப்பெருந்துறையை அடைந்து திருவாசகம் ஓதின என்று கூறுகின்றது. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புரா-ணம், மணிவாசகனார் மதுரையினின்றும் நேரே உத்தரகோசமங்கை முதலிய தலங்கட்குச் சென்றதாகக் கூறும். பரஞ்சோதி முனிவர் செய்த திருவிளையாடல் பதிக அடைவுகளைப்பற்றி எதுங்கூறவில்லை.

**'நமச்சிவாய வாஅழ்க'** என்னும் அகவலைத் திருப்பெருந்-துறையில் முதற்கண் உரைத்ததாகக் கூறும் வாதவூரார் புராணம்; திருவாலவா யுடையார் திருவிளையாடலோ, மாணிக்கவாசகர் முடிவில் மதுரையி னின்றும் பாண்டியனிடம் விடைபெற்றுச் செல்லுங்காலத்து, **'நமச்சிவாய வாஅழ்க'** என்று பாடிக்கொண்டே சொக்கர் ஆலயத்துக்குட் சென்றனர் என்னும். இவ்வகையில் ஆராய்ந்தால் திருவாசக அமைப்பில் பெரிதும் இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. (திருவாசக அமைப்பு மாறுபடுவதை 10-ஆம் பக்கத்திற் காணும் அட்டவணையிற் காண்க.)

பதிகங்கள் முன் பின்னாக மாறியிருப்பினும், அவை பாடப்-பெற்ற தலங்கள் பெரும்பாலும் ஒத்திருக்கின்றன: ஆயினும், சிற்சில இடங்களில் மாறுபாடுகள் காண்கின்றன. அவை வருமாறு:

அச்சிடப்பெற்ற திருவாசகத்திற் பதிகங்கள் முறை பிறழ்வு தவிர, தலங்களின் அமைப்பில் அது திருவாதவூரார் புராணத்தோடு ஒற்றுமையுடைய தாகவே காண்கின்றது; ஆயினும், அச்சிடப்-பெற்ற திருவாசகத்தில் காணப்படும் இரண்டு பதிகங்கள் திரு-வாதவூரார் புராணத்துக் காணவில்லை. அவை **'திருவெண்பா'** **'பண்டாய நான்மறை'** என்பனவாம். இவ்விரண்டிற்கும் மாறாக,

தீதறச் சிறந்த வெண்பாத் திகழெழு நான்கு மோதி' எனத் திருவாதவூரர் புராணம் திருவம்பலச்சருக்கம் 14-ஆஞ் செய்யுளின் ஈற்றடியாகக் காணப்படுகிறது. 'திருவெண்பா', 'பண்டாய நான்மறை' இரண்டும் வெண்பாக்களால் இயன்றுள்ளவை. திருவெண்பாவில் 11 செய்யுளும், பண்டாய நான்மறையில் 7 செய்யுளும் ஆக 18 வெண்பாக்கள் காண்கின்றன. பண்டாய நான்மறை என்பது, செய்யுளின் முதற்குறிப்பாற் பெற்ற பெயர். அவ்வாறு பெயர் பெற்ற பதிகம் திருவாசகத்தில் வேறு யாண்டும் காணப்படவில்லை. ஆகவே திருவெண்பா என்பதே 28 வெண்பாக்களாக இருத்தல் வேண்டு மென்றும் அவற்றுள் 10 வெண்பாக்கள் இறந்துபட் டிருத்தல் வேண்டு மென்றும் ஊகிக்கலாம். திருத்தசாங்கம் என்பதும் பத்து வெண்பாக்களை யுடையது. அதனை மேற்கூறிய பதினெட்டுச் செய்யுட்களோடு சேர்ப்பின் இருபத்தெட்டு வெண்பாக்களாகும்; ஆயினும், திருத்தசாங்கமென ஒரு தனிப்பதிகம் வகுக்கப்பட்டிருத்தலின் அதனை ஈண்டுச் சேர்த்தல் முறையன்றெனத் தோற்றுகிறது.

இனி, திருவாலவா யுடையார் புராணம் பதிக அடைவுகளைப பற்றிக் கூறும் முறையை ஆராய்வோம். திருவாதவூரர் வரலாற்றைக் கூறும் பல நூல்களில் திருவாலவா யுடையார் புராணம் காலத்தால் முற்பட்ட தென்பது நினைவில் வைக்கத் தகுந்தது. அப் புராணத்துள் வாதவூரர் குதிரை வாங்க, அவை வந்து இறங்குமிடத்துக்குச் செல்லும்பொழுது இடையே திருப்பெருந்துறையை அடைய அங்குத் தம் மனம் பரவசப்படுதலை உணர்ந்து இங்கு ஏதோ அற்புதம் இருத்தல் வேண்டும் எனச் சிந்தித்தவராய், அங்ஙனம் தங்கிக் கோயிலுக்குள் சென்ற அளவில் அங்கே சிவபெருமான் குருமூர்த்தியாக எழுந்தருளி யிருப்பவும், சிவகணங்கள் அடியார்களாக அமர்ந்திருப்பவும் வாதவூரர் கண்டு மெய்ம்மறந்து அடியில் விழுந்து வணங்கி நின்றார். அப்போது குருமூர்த்தி அவருக்கு உபதேசம் செய்தனர். பின்னர்க் குருமூர்த்தி வாதவூரரை நோக்கி, "மாணிக்கவாசக, எம்மைப் பாடுவாயாக" எனப் பணிப்பவும், வாதவூரர் திருவாசகம் பாடத் தொடங்கி,

1. அற்புதப்பத்து,
2. சென்னிப்பத்து,

3. அச்சோப்பத்து

என்னும் திருவாசகங்களை ஓதினார். பின்னர்க் குருமூர்த்தி, வாதவூரரை அழைத்து அவருக்கு அருகே கூடியிருந்த அடியார்களை எல்லாம் சுட்டிக் காட்ட உடனே வாதவூரர்

4. அதிசயப்பத்து,

பாடி அருளினர்.

சிவபெருமானாகிய குருமூர்த்தி தம் அடியாரோடு உடனே மறைந்தருளினதைக் கண்ட வாதவூரர் பெரிதும் கவலையுற்று,

5. கோயிற்பத்து,
6. புணர்ச்சிப்பத்து,
7. செத்திலாப்பத்து,
8. பிரார்த்தனைப்பத்து,
9. ஆசைப்பத்து,
10. உயிருண்ணிப்பத்து,
11. திருப்புலம்பல்,
12. வாழாப்பத்து,
13. எண்ணப்பத்து

என்னும் பதிகங்களை வழங்கி அருளினர்.

அதன் பின்னர் வாதவூரர், திருப்பெருந்துறை நகருட்சென்று பார்க்குமளவில் அங்கே நடந்த செய்திகளை அமைத்து,

* 14. திருவம்மானை,

* இத் திருவாசகத்தில்,

"பந்தம் பரியப் பரிமேற்கொண்டான்" எனவும்,

"கொற்றக் குதிரையின் மேல் வந்தருளி" எனவும்,

நரியைப் பரியாக்கிய திருவிளையாடல் கூறப்படுகிறது; அன்றியும்,

"......... ......................... .......மதுரை,
மண் சுமந்து கூலி கொண்டக் கோவான் மொத்துண்டு,
புண் சுமந்த பொன் மேனி..............."

என மண் சுமந்த திருவிளையாடலும் பின்னே நடக்கின்றமையால் இங்கே கூறுவது பொருத்தமுடையதாகக் காணவில்லை. இதனை யான் எழுதிவரும் ஆராய்ச்சிக் குறிப்பிற்கண்டு கொள்க.

15. திருப்பொற் சுண்ணம்,
16. திருக்கோத்தும்பி,
17. திருத்தெள்ளேணம்,
* 18. திருப்பூவல்லி,
19. திருவுந்தியார்,
20. திருத்தோணோக்கம்,
21. திருவெம்பாவை,
22. திருச்சதகம்

என்னும் வாசகங்களை அருளிச் செய்தனர்.

பாண்டியன் "உடனே குதிரைகொண்டு வருக" என ஓர் ஓலை எழுதி விடுதலும், அதனைக்கண்ட வாதவூரர் தாம் செய்த குற்றத்தை உணர்ந்து கோயிலுட் சென்று பெருமானிடத்து முறையிடும்போது,

23. திருப்பள்ளி யெழுச்சி

ஓதினார்.

பாண்டியன் திருவாதவூரரை மதுரையில் சிறைக்கண் வைத்ததைப் பொறுதவராகி,

24. குழைத்த பத்தும்,
25. அருட்பத்தும்,

பாடி அருளினர்.

சிவபெருமான் குறிப்பினால் குதிரை **குறித்த வேளையில்** வாராதொழிந்ததைக் கண்ட பாண்டியன் ஒற்றரை விடுத்துத் திருவாதவூரரை ஒறுக்கும்படி கட்டளை யிட்டபோது அவர் மனம் வருந்தி,

26. அடைக்கலப்பத்து

என்னும் திருவாசகத்தை ஓதினர். பின்னர் அங்கு ஒரு மரத்தில் தங்கியிருந்த குயிலைப் பார்த்து,

27. குயிற்பத்து

கூறினர்.

---

* **இத் திருவாசகத்தில், "மதுரையிற் பட்டமுது செய்தருளி" என வருதலால் இது இங்கே கூறப்படுதல் பொருத்த முடையதன்றாம்.**

சிவபெருமான் குதிரை ஏறிப் பாண்டியன் முன் வருவதைப் பார்த்திருந்த மதுரைநகரத்துப் பெண்கள் கூறியவற்றை அமைத்து,

28. அன்னைப்பத்து

என்னும் திருவாசகத்தை அருளினர்.

பாண்டியன் குதிரைச் சாத்தவர்க்குப் பரிசுகள் கொடுத்த பொழுது வாதவூரர்,

29. பிடித்தபத்து

என்னும் வாசகத்தை ஓதினர்.

பரிகளெல்லாம் நரிகளாகி ஓடிச் சென்ற பொழுது பாண்டியன் மிக்க சினமுடையவனாய், வாதவூரரைச் சிறையில் வைத்துத் தக்கவாறு தண்டிக்கும்படி ஒற்றரை ஏவினன். அவ்வொற்றர் வாதவூரரைத் தண்டிக்க மனமில்லாதவராகிக் கொண்டு போய்ச் சிறையில் வைத்தனர். அப்போது வாதவூரர்,

30. திருவேசறவு,

பாடி அருளினர்.

ஈற்றிற்பிட்டு வாணிச்சியின் பொருட்டுச் சொக்கர் மண்சுமந்த திருவிளையாடலைச் செய்ய, அது வாதவூரரைச் சிறையில் வைத்த குற்றத்தால், வைகையின் பெருக்கு மிக்கது என்று உணர்ந்த பாண்டியன், அவரைச் சிறையினின்று விடுவித்து வணங்கி வாழ்த்த, வாதவூரர் பாண்டியனிடம் விடைபெற்று,

31. நமச்சிவாய வாஅழ்க

என்னும் திருவாசகத்தை ஓதிக்கொண்டே சொக்கர் ஆலயத்துட் சென்று வணங்கிக்கொண்டு வெளிப்போந்து, திருவுத்தரகோசமங்கை, திருக்கழுக்குன்றம் என்னும் தலங்களுக்குச் சென்று, ஈற்றில் தில்லைப்பதியை அடைந்து புத்தரைவென்று, பதிகங்கள் பாடித் திருக்கோவையார் என்னும் செந்தமிழ் நூலையும் செய்தருளி, முத்தி அடைந்தனர்.

இந்நூலில், அற்புதப்பத்து முதலாக, திருப்பள்ளி யெழுச்சி ஈறாக, 23 பதிகங்களும், திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டதாகக் காணவும், திருவாதவூரர் புராணம், அவற்றுள்,

3. அச்சோப்பதிகம்,
5. கோயிற்றிருப்பதிகம்,
13. எண்ணப்பதிகம்,
15. திருப்பொற்சுண்ணம்,
16. திருக்கோத்தும்பி,
17. திருத்தெள்ளேணம்,
18. திருப்பூவல்லி,
19. திருவுந்தியார்,
20. திருத்தோணோக்கம்,

திருத்தில்லையிலும்,

திருவம்மானை,
திருவெம்பாவை,

இவை இரண்டும் திருவண்ணாமலையிலும்,

திருப்புலம்பல்

திருவாரூரிலும் அருளிச்செய்ததாகக் கூறுகின்றது.

1. குழைத்தபத்து,
2. அருட்பத்து,
3. அடைக்கலப்பத்து,
4. குயிற்பத்து,
5. அன்னைப்பத்து,
6. பிடித்தபத்து,
7. திருவேசறவு,
8. நமச்சிவாய வாஅழ்க,

இந்த எட்டும் மதுரைமா நகரத்தில் தமக்கு இடுக்கண் நேர்ந்த காலத்தும், அரசனிடம் விடைபெற்ற காலத்தும் பாடியனவாகத் திருவாலவா யுடையார் புராணம் கூறுகின்றது. இவற்றுள்

குழைத்தபத்து,
அருட்பத்து,
அடைக்கலப்பத்து,
திருவேசறவு,
நமச்சிவாய வாஅழ்க,

இவ்வைந்தும் திருப்பெருந்துறையிலும்,

குயிற்பத்து,
அன்னைப்பத்து,
இவை இரண்டும் திருத்தில்லையிலும்,

பிடித்தபத்து,
சீர்காழியிலும் பாடி யருளியதாகத் திருவாதவூரர் புராணம் கூறுகின்றது.

மதுரையில் மணிவாசகனா பாடியதாக ஒருபதிகமும், திருவாதவூரர் புராணத்துள் காணப்படாமை வியப்பினும் வியப்பே. அவர் ஆங்கு அமைச்சராக இருந்த காலத்தும், சொக்கரை யிடைவிடாது வழிபட்டு வந்ததேயன்றி அவர் திருப்பெருந்துறையினின்றும் வந்து பட்டபாடுகளனைத்தும் மதுரையம் பதியிலே நிகழ்ந்தன வன்றே. அவ்வாறிருப்பவும் மதுரையைச் சுட்டி ஒரு பதிகமும் பாடா திருந்திருப்பர் என்று கூறுவது சிறிதும் பொருத்தமுடைய தன்றாம்.

திருவாலவாயுடையார்புராண முடையார், வாதவூரர் உத்தரகோசமங்கைக்குச்சென்று அங்குநின்றும் திருக்கழுக்குன்றம் சென்று தரிசித்து முடிவில் திருத்தில்லைக்கு வந்தார் என்கின்றார். திருவாதவூரர் புராணமுடையார், மேற்கூறிய தலங்களோடு, திருவாரூர், திருத்தோணிபுரம், திருவண்ணாமலை, திருக்காஞ்சி ஆகிய தலங்களுக்குச் சென்றார் என்று கூறி, திருவாரூருக்கு ஒரு பதிகமும் திருத்தோணி புரத்திற்கு ஒரு பதிகமும் திருவண்ணாமலைக்கு இரண்டு பதிகங்களும், வகுத்துக் காட்டுகின்றனர்; இது அறிஞர் ஆராயத்தக்கது. இனி, திருவாசகமுறை அடியில் வருமாறு:

| | |
|---|---|
| திருப்பெருந்துறையில் பாடியவை அற்புதப்பத்து முதலாகத் திருப்பள்ளியெழுச்சி ஈறாகப் பதிகங்கள். | 23 |
| மதுரையில் பாடியவை குழைத்தபத்து முதலாக நமச்சிவாயவாஅழ்க ஈறாக. | 8 |
| திருவுத்தரகோசமங்கை | 1 |
| திருக்கழுக்குன்றப்பதிகம் | 1 |
| ஆகப் பதிகங்கள். | 33 |
| இவை போகத் திருத்தில்லையில் அருளிச்செய்யப்பட்டன. | 18 |
| | . 51. |

மேற்கண்ட முறையுள்ளும் சில இடர்ப்பாடுகள் காண்கின்றன. அவற்றை யான் எழுதிவரும் **திருவாசக ஆராய்ச்சியுள்** கண்டு கொள்க.

இவ்வாராய்ச்சிக்கு முதற்காரணமாயிருந்தது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம். இதனைப் பலதிறப்பட்ட ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு அச்சிட்டு உதவிய பிரம்மஸ்ரீ மகா மகோபாத்தியாய வே. சாமிநாத ஐயர் அவர்கட்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

இத்தகைய நூல்களை யான் விரும்புமாறே அச்சிட்டு வெளியிடும், சென்னை வி. குமாரசாமி நாயுடு சன்ஸ் என்னும் கம்பெனியின் தலைவரும் தமிழ் மொழியின்கண் தணவாத ஆர்வமுடையவரும் ஆகிய வி. ஜெயராம் நாயுடு அவர்கட்குத் தணிகை முருகன் எல்லா நலன்களையும் அருளுவானாக.

இம்முயற்சிக்கண் என்னுடனிருந்து உழைத்துவரும் செல்வச்சிரஞ்சீவி மு. எதிராஜுலு நாயுடு அவர்கட்கு இறைவன் இன்னருள் பாலிப்பானாக.

ஏதும் அறியாத இச் சிறியேனை இந் நன்முயற்சிக்கண் புகுத்தித் தோன்றாத் துணையாக விருந்து அருள்புரிந்து வரும் முழுமுதற் கடவுளாகிய தணிகைப் பெருமானை என் மனமொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

'கடலகம்'
மயிலை, சென்னை.
**13-9-1927.**

கா. நமச்சிவாயன்.

# திருவாசகப்பதிக அட்டவணை

| எண் | திருவாசகம் பதிப்பித்துள்ள முறை | தலங்கள் |
|---|---|---|
| க. | நமச்சிவாய வாஅழ்க | திருப்பெருந்துறை |
| உ. | கீர்த்தித் திருவகவல் | திருத்தில்லை |
| ங. | திருவண்டப் பகுதி | திருத்தில்லை |
| ச. | போற்றித் திருவகவல் | திருத்தில்லை |
| ரு. | திருச்சதகம் | திருப்பெருந்துறை |
| சு. | நீத்தல் விண்ணப்பம் | திருவுத்தரகோசமங்கை |
| எ. | திருவெம்பாவை | திருவண்ணாமலை |
| அ. | திருவம்மானை | திருவண்ணாமலை |
| கூ. | திருப்பொற் சுண்ணம் | திருத்தில்லை |
| கO. | திருக்கோத்தும்பி | திருத்தில்லை |
| கக. | திருத்தெள்ளேணம் | திருத்தில்லை |
| கஉ. | திருச்சாழல் | திருத்தில்லை |
| கங. | திருப்பூவல்லி | திருத்தில்லை |
| கச. | திருவுந்தியார் | திருத்தில்லை |
| கரு. | திருத்தோணோக்கம் | திருத்தில்லை |
| கசு. | திருப்பொன்னூசல் | திருத்தில்லை |
| கஎ. | அன்னைப்பத்து | திருத்தில்லை |
| கஅ. | குயிற்பத்து | திருத்தில்லை |
| ககூ. | திருத்தசாங்கம் | திருத்தில்லை |
| உO. | திருப்பள்ளியெழுச்சி | திருப்பெருந்துறை |
| உக. | கோயின் மூத்ததிருப்பதிகம் | திருத்தில்லை |
| உஉ. | கோயிற்றிருப்பதிகம் | திருத்தில்லை |
| உங. | செத்திலாப்பத்து | திருப்பெருந்துறை |
| உச. | அடைக்கலப்பத்து | திருப்பெருந்துறை |
| உரு. | ஆசைப்பத்து | திருப்பெருந்துறை |
| உசு. | அதிசயப்பத்து | திருப்பெருந்துறை |
| உஎ. | புணர்ச்சிப்பத்து | திருப்பெருந்துறை |
| உஅ. | வாழாப்பத்து | திருப்பெருந்துறை |
| உகூ. | அருட்பத்து | திருப்பெருந்துறை |
| ஙO. | திருக்கழுக்குன்றப்பதிகம் | திருக்கழுக்குன்றம் |
| ஙக. | கண்டபத்து | திருத்தில்லை |
| ஙஉ. | பிரார்த்தனைப்பத்து | திருப்பெருந்துறை |

| எண் | திருவாசகம் பதிப்பித்துள்ள முறை | தலங்கள் |
|---|---|---|
| ௩௩. | குழைத்தபத்து | திருப்பெருந்துறை |
| ௩௪. | உயிருண்ணிப்பத்து | திருப்பெருந்துறை |
| ௩௫. | அச்சப்பத்து | திருத்தில்லை |
| ௩௬. | திருப்பாண்டிப்பதிகம் | திருப்பெருந்துறை |
| ௩௭. | பிடித்தபத்து | திருத்தோணிபுரம் |
| ௩௮. | திருவேசறவு | திருப்பெருந்துறை |
| ௩௯. | திருப்புலம்பல் | திருவாரூர் |
| ௪௦. | குலாப்பத்து | திருத்தில்லை |
| ௪௧. | அற்புதப்பத்து | திருப்பெருந்துறை |
| ௪௨. | சென்னிப்பத்து | திருப்பெருந்துறை |
| ௪௩. | திருவார்த்தை | திருப்பெருந்துறை |
| ௪௪. | எண்ணப்பதிகம் | திருத்தில்லை |
| ௪௫. | யாத்திரைப்பத்து | திருத்தில்லை |
| ௪௬. | திருப்படை யெழுச்சி | திருத்தில்லை |
| ௪௭. | திருவெண்பா | திருப்பெருந்துறை |
| ௪௮. | பண்டாய நான்மறை | திருப்பெருந்துறை |
| ௪௯. | திருப்படையாட்சி | திருத்தில்லை |
| ௫௦. | ஆனந்தமாலை | திருத்தில்லை |
| ௫௧. | அச்சோப்பதிகம் | திருத்தில்லை |

| திருவாதவூரர் புராணத்துக் காணும் முறை | திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்துக் காணும் முறை |
|---|---|

## திருப்பெருந்துறை

க. நமச்சிவாய வாஅழ்க
உ. அற்புதப்பத்து
ங. அதிசயப்பத்து
ச. குழைத்தபத்து
ரு. சென்னிப்பத்து
சா. ஆசைப்பத்து
எ. வாழாப்பத்து
அ. அடைக்கலப்பத்து
கூ. செத்திலாப்பத்து
கO. புணர்ச்சிப்பத்து
கக. அருட்பத்து
கஉ. திருவார்த்தை
கங. எண்ணப்பதிகம்
கச. *வெண்பா இருபத்தெட்டு
கரு. திருப்பள்ளியெழுச்சி
கசா. திருவேசறவு
கஎ. ஆனந்தமாலை
கஅ. உயிருண்ணிப்பத்து
ககூ. பிரார்த்தனைப்பத்து
உO. திருப்பாண்டி விருத்தம்
உக. திருச்சதகம்

## திருவுத்தரகோசமங்கை

உஉ. நீத்தல் விண்ணப்பம்

## திருவாரூர்

உங. திருப்புலம்பல்

## சீர்காழி

உச. பிடித்தபத்து

## திருவண்ணாமலை

உரு. திருவெம்பாவை
உசா. திருவம்மானை

## திருப்பெருந்துறை

1. அற்புதப்பத்து
2. சென்னிப்பத்து.
3. அச்சோப்பத்து

இவை குருமூர்த்தி தம்மைப் பாடும்படி சொன்னபோது செய்தவை.

4. அதிசயப்பத்து

இது குருமூர்த்தி சுட்டிக் காட்டிய மாணக்கர்களை நோக்கிச் செய்தது.

5. கோயிற்பத்து
6. புணர்ச்சிப்பத்து
7. செத்திலாப்பத்து
8. பிரார்த்தனைப்பத்து
9. ஆசைப்பத்து
10. உயிருண்ணிப்பத்து
11. திருப்புலம்பல்
12. வாழாப்பத்து
13. எண்ணப்பத்து

இவை குருமூர்த்தி மறைந்தருளிய பொழுதும், பிறகும் செய்தவை.

14. திருவம்மானை
15. திருப்பொற் சுண்ணம்
16. திருக்கோத்தும்பி
17. திருத்தெள்ளேணம்
18. திருப்பூவல்லி
19. திருவுந்தியார்
20. திருத்தோணோக்கம்
21. திருவெம்பாவை
22. திருச்சதகம்

இவை திருப்பெருந்துறை நகருட் சென்று அங்கு நிகழ்ந்த செய்திகளைக் கண்டபோது செய்தவை.

23. திருப்பள்ளியெழுச்சி

இது பாண்டியனிடமிருந்து திருமுகம் வந்தபோது கோயிலுட் சென்று முறையிடுங் காலத்துச் செய்தது.

* பண்டாய நான்மறை திருவாதவூரர் புராணத்துள் இல்லை

### திருவாதவூரர் புராணத்துக்காணும் முறை

**திருக்கழுக்குன்றம்**

௨௭. திருக்கழுக்குன்றப்பதிகம்

**திருத்தில்லை**

௨௮. கண்டபத்து
௨௯. குலாப்பத்து
௩௦. கோயிற்றிருப்பதிகம்
௩௧. கோயின் மூத்த திருப்பதிகம்
௩௨. கீர்த்தித் திருவகவல்
௩௩. திருவண்டப் பகுதி
௩௪. போற்றித் திருவகவல்
௩௫. திருப்பொற்சுண்ணம்
௩௬. திருத்தெள்ளேணம்
௩௭. திருவுந்தியார்
௩௮. திருத்தோணோக்கம்
௩௯. திருப்பூவல்லி
௪௦. திருப்பொன்னூசல்
௪௧. அன்னைப்பத்து
௪௨. திருக்கோத்தும்பி
௪௩. குயிற்பத்து
௪௪. திருத்தசாங்கம்
௪௫. அச்சப்பத்து
௪௬. திருச்சாழல்
௪௭. திருப்படையாட்சி
௪௮. திருப்படையெழுச்சி
௪௯. அச்சோப்பத்து
௫௦. யாத்திரைப்பத்து

### திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்துக் காணும் முறை

**மதுரை**

24. குழைத்தபத்து
25. அருட்பத்து

இவை குறித்த நாளில் குதிரை வாராதபோது செய்தவை.

26. அடைக்கலப்பத்து

இது குதிரை வாராமையால் சிறையிலிட்டபோது செய்தது.

27. குயிற்பத்து

இது சிறையினருகே ஒரு மரத்திலிருந்த குயிலைப் பார்த்துச் செய்தது.

28. அன்னைப்பத்து

இது குதிரைமீது வரக்கண்ட வணிகரைப் பார்த்து மதுரைமாநகரத்து மகளிர் கூறியதாகச் செய்தது.

29. பிடித்தபத்து

இது குதிரைப்பாகர்க்குப் பாண்டியன் பரிசளித்தபோது செய்தது.

30. திருவேசறவு

இது பரிகளெல்லாம் நரிகளான போது செய்தது.

31. நமச்சிவாய வாஅழ்க

இது பாண்டியன் தம்மைச் செல்லும்படி விட்டபோது செய்தது.

**திருவுத்தரகோசமங்கை**

32. நீத்தல்விண்ணப்பம்

**திருக்கழுக்குன்றம்**

33. திருக்கழுக்குன்றப்பதிகம்

(மற்ற 18 பதிகங்கள் தில்லையில் பாடியனவாதல் வேண்டும்.)



திருச்சிற்றம்பலம்

# திருவாதவூரர் வரலாறு

மாணிக்கவாசகர் என்னுங் காரணப் பெயர் பூண்டு விளங்குந் * திருவாதவூரர், வையையாறு பாயும் பாண்டிவள நாட்டில் திருவாதவூரில் அந்தணர் குலத்தில் அமாத்தியர் மரபில் அவதரித்தனர். இவர் பதினாறாண்டு நிறையுமுன்னரே கல்வி கேள்விகளில் வல்லுநராய் விளங்கினர். இவரது கல்விப் பெருக்கையும் ஒழுக்கச் சிறப்பையும் கேள்வியுற்ற †பாண்டியன் இவரை அன்புடனேற்றுத் தன் அண்மையிலிருத்தி அமைச்சராகச் செய்து, தென்னவன் பிரமராயன் என்னும் பட்டப் பெயரும் வழங்கினன்.

திருவாதவூரர் அமைச்சராக விளங்கிய காலத்தும், சிவபெருமான் திருவடிகளில் நீங்காத மெய்யன்புடையராய், உலக வாழ்க்கையில் ஒட்டியும் ஒட்டாதும் இருந்தனர். ஆயினும், இவருடைய ஆட்சியின் சிறப்பினால் அரசனுக்குப் பெருஞ் செல்வமும் அருஞ் சீர்த்தியும் மலிந்தன.

இவ்வாறு இருக்கும் நாளில் ஒருநாள் ஒற்றர்[1] சிலர் வந்து, 'அரசர்பெரும, ஆரிய தேசத்தார் அரிய குதிரைகளைக் கொண்டு-

* இவர் தந்தையார் பெயர் சம்புபாதாசிரிதர் என்றும், தாயார் பெயர் சிவஞானவதி யென்றும் திருப்பெருந்துறைப் புராணம் கூறும்.

† இவனே அரிமர்த்தன பாண்டியன் என்னும், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம்.

1. அரசன் குதிரைக்காவலர் வந்து, 'பற்பல நோய்களால் குதிரைகளின் பெரும்பான்மைய இறந்துபட்டன ; எஞ்சியவைகளும் நோயுற்றுப் பிழைக்குமோ பிழையாவோ என்று எண்ணும்படி யிருக்கின்றன ; ஆதலால் புதிய குதிரைகள் வாங்கவேண்டும்; பூமண்டலாதிபதியாகிய அரசர் பந்தியில் ஓரிலட்சங் குதிரைகளாவது இருத்தல் வேண்டாவோ ?' என, அரசன் திருவாதவூரரைப் பொன்கொடுத்து அனுப்பினன் - திருவாலவாயுடையார் திருவிளையாடல்.

வந்து சோழ நாட்டின் கடற்கரையில் இறங்கி யிருக்கின்றனர்: யாங்கள் கண்ணாரக் கண்டோம்' என்று பாண்டியனைப் பணிந்து கூறினர். அது கேட்ட பாண்டியன் வாதவூரரைநோக்கி, 'அமைச்சர் பெரும, ஆரிய தேசத்து அரிய குதிரைகள் [2]சோழ நாட்டின் கடற்கரையில் வந்து இறங்கியுள்ளனவாம்; அவற்றுட் சிறந்தனவற்றைப் பொன் கொடுத்துப் பெற்றுவருக' என்றான். உடனே வாதவூரர் பொன்னறையுட் புகுந்து, நாற்பத்தொன்பதி-னாயிரம் பொன்னைப் பாண்டியன் எடுத்துக்கொடுக்கப் பெற்றுக்-கொண்டு, சென்று, [3]சொக்கரை வணங்கிப் படைகள் புடைசூழப் புறப்பட்டனர்.

பின்னர்த் திருவாதவூர் செல்லும் வழியில் [4]திருப்பெருந் துறையைக் குறுகினர். ஆண்டுச் சிவபெருமான் குருவுருக்கொண்டு, அடியார்கள் புடைசூழ, ஒரு [5]சோலையின்கண் குருந்தமரத்தின் நீழலில் விளங்க வீற்றிருந்தனர். திருவாதவூரர் அப் பெரியார் திருவுருவப் பொலிவைக்கண்டு வியந்து மகிழ்ந்து, அவரை நோக்கி, 'ஐயரே, தமது [6]திருக்கையிலுள்ள சுவடியின் பெயர் யாது?' என, அவ்வையர், 'இது சிவஞானபோதம்' என்றனர். அதுகேட்ட வாத-வூரர், 'சிவஞானபோதம் என்றால் என்னை? அதனை விளங்க உரைத்தல் வேண்டும்' என, ஐயரும், 'சிவம் என்பது மெய்ப் பொருள்; ஞானம் என்பது அறிதல்; போதம் என்பது தெளிதல்; ஆக, உண்மைப் பொருளாகிய சிவபெருமானை அறிந்து தெளிதல் என்பது திரண்ட பொருள்' என்றனர். அதனைக் கேட்டலும் வாதவூரர், 'இங்ஙனம் குருமூர்த்தியாக எழுந்தருளியவர் எம்மை யாட்கொள்ளவந்த இறைவரே யாவர்' என்று துணிந்து, அவரடி-

2. குதிரைகள் வந்திறங்கும் பட்டினத்திற்குச் சென்று நல்ல குதிரைகள் வாங்கி வருக - திருவாலவா.

3. விநாயகரையும் அங்கயற்கண்ணம்மையையும் - திருவாலவா.

4. காளையார் கோயிலின் சிவபெருமானை வணங்கிக்கொண்டு - திரு வாலவா.

5. கோயிலுக்குள் - திருவாலவா.

6 சுவடியாது எனக் கேட்டதும் அதற்கு விடை சொன்னதும் திரு வாலவாயுடையார் புராணத்துக் காணப்படவில்லை.

களில் வீழ்ந்து, 'அடியேனை இன்னே ஆட்கொளல் வேண்டும்' என்று இரந்து வேண்டினர். அதுகண்ட குருமூர்த்தி அவரை யெடுத்து நிறுத்தி, 'உன்னை யாட்கொள்ளும்பொருட்டே இங்குப் போந்தோம், நீ அஞ்சாதை' என்று தேற்றிய பின்னர், அன்று நள்ளிரவில் குருமூர்த்தி தென்முகமாக இருந்து திருவாதவூரர்மேல் திருவருள் நோக்கம் வைத்து, பஞ்சாக்கரவுபதேசஞ் செய்தனர் ;[7] பின்னர், தமது திருவடி தீட்சையும் செய்தருளினர். வாதவூரர் அத் திருவடிகளைத் தமது கண்களில் ஒற்றிக்கொண்டு, மாதவராகி விளங்கினர். பொழுது புலர்தலும் குருமூர்த்தி வாதவூரரை ஒரு தனியிடத்திலிருத்தி, ஆகமசாரங்கள் அனைத்தையும் விளங்க வுரைத்தருளினர். திருவாதவூரர் அவ்வுபதேசத்தைக் கேட்டுக் குருமூர்த்தியை வணங்கி வழிபட்டனர்.[8]

குதிரைவாங்கக் கொண்டுவந்த பொன் அனைத்தையும், திருவாதவூரர், குருகாணிக்கையாகக் குருமூர்த்தியின் திருவடிகளில் வைத்து வணங்க, அவர் அதனை அன்புடன் ஏற்று, 'சிவாலயத் திருப்பணி முதலியவற்றிற்கு இதனைச் செலவிடுக' என்று பழவடியார் ஒருவரிடம் ஒப்பித்தனர்.[9]

---

7. செய்தவளவில் வாக்கில் கலைமகள் வந்து தங்கினள்; குரு மூர்த்தி வாதவூரரை நோக்கி, 'நம்மைப் பாடுவாய்' என்றார் ; வாதவூரர், அற்புதப் பத்து முதலிய பதிகங்களைச் செய்தருளினர்-திருவாலவா. இவர் பதிகங்கள் செய்த முறையினை முன்னுரையிற் காட்டிய அட்டவணையிற் காண்க.

8. பின்பு, குருமூர்த்தி அங்கு வேதபாராயணஞ் செய்யும் பிரமசாரிகளைத் திருவாதவூரருக்குக் காட்டியருள, அவர் அவர்களைக்கண்டு, 'நீவிர் என்ன புண்ணியஞ் செய்தீர் ; இக்குருமூர்த்தியை யடைந்து அன்பு பூண்டு அவரருகிலிருக்கும் பேறு பெற்றீர்களே' என்று வியந்துகூறி, அதிசயப்பத்துப் பாடியருளினர். குருமூர்த்தி வாதவூரரைப்பார்த்து, 'மாணிக்கவாசக, நீ இங்குநில்' என்று பணித்தருளி அப்புதல்வர்களோடும் மறைந்தருளினர் ; பின்பு, கோயிற்பத்து முதலிய பதிகங்களைப் பாடியருளினர். அதன் பின்னர் நகருட்புகுந்து, திருவம்மானை முதலிய பதிகங்களைப் பாடியருளினர் - திருவாலவா.

9. குதிரை வாங்கக்கொண்டுவந்த பொன்னையெல்லாம் திருவாதவூரர் தாமே தம் மனம் போனவாறு வாரிவாரிப் பலர்க்குங் கொடுத்தனர்- திருவாலவா.

அமைச்சராக வந்த வாதவூரர் அருந்தவ முனிவராகி உலகத்தை அறவே மறந்து, மோனநிலையை யெய்தியிருந்தனர். அது கண்ட படைத்தலைவர் முதலாயினோர் வாதவூரரை யணுகி, 'அமைச்சர் பெரும, குதிரைவாங்கக் கொண்டுவந்த பொன்னை யெல்லாம் குருமூர்த்திக்குக் கொடுத்துவிட்டீரே, இனி நாம் வந்த காரியம் என்னுவது?' எனத் தெரிவித்துக் கொண்டனர். அவர்களை அவர், 'நீவிர் யாவிர்? அப்புறம் போமின்' என அகற்றிவிட்டு, மோனநிலையிலிருந்தனர்.

படைத்தலைவர் முதலாயினோர் உடனே புறப்பட்டுப் பாண்டி-யனை யடைந்து, திருப்பெருந்துறையில் நடந்த செய்தியனைத்தும் அவனுக்குத் தெரியவுரைத்தனர். அதுகேட்ட மன்னன் மனம் வருந்தி, ஓலையொன்று எழுதிக்கொடுத்து, 'நீவிர் இவ்வோலையை அவ்வமைச்சருக்குக் காட்டி, அவரைப் பிடித்த பிடியாய் இங்கு அழைத்து வருக' எனக் கட்டளையிட, அன்னோர் அவ்வாறே சென்று, அவ்வோலையை அமைச்சரிடம் நீட்டினர். வாதவூரர், 'அஃது யாது?' என, அவர்கள், 'இது பாண்டியன் தமக்கு வரவிடுத்த திருமுகம்' என்றனர். வாதவூரர், 'யாம் பரமசிவத்தின் திருமுகத்தையன்றிப் பாண்டியன் திருமுகத்தைப் பார்க்கப் பொரோம்' என்று கூறினர். கூறவே, ஒருவன் அதில் எழுதி-யிருந்த செய்தியை முறையே படித்து நின்றான். அது கேட்ட வாதவூரர், இவ்வுலகஞானம் சிறிதுண்டாக, குருமூர்த்தியை யடைந்து, அரசன் ஓலையெழுதி விடுத்தமையை அவருக்கு விண்ணப்பஞ் செய்தனர். குருமூர்த்தி அதுகேட்டு, 'யாமே குதிரைகளைக்கொண்டு வருவேம்; நீ போய்ப் பாண்டியனைப் பார்த்து ஆவணிமாதம் மூலநாளில் குதிரைகள் வந்து சேரும் என்று கூறுவாய்;[10] இதோ 'இம்மாணிக்கத்தைக் கையுறையாகக்

10. வாதவூரர் திருப்பெருந்துறையை அடைந்ததும் தமக்கு அங்கு உண்டாகிய இன்பநிலையை உன்னி, அத்தலத்தில் தங்கியிருக்க எண்ணி, படைத்தலைவர் முதலாயினரை நோக்கி, 'ஆடிமாதத்தில் குதிரைகள் வாரா; ஆவணி மாதத்தில்தான் அவை வந்திறங்கும்; அப்போது இப் பொன்னைக்கொண்டு நல்ல குதிரைகளை நானே வாங்கிவருவேன்; இதனை அரசனுக்கு அறிவியுங்கள்' என்றுகூறி விடுத்தனர் - திருவாலவா.

கொடு' என்று, உயர்ந்ததோர் மாணிக்கமணியைக் கொடுத்தனுப்பினர்.[11]

முழு நீறு பூசிய முனிவராய் விளங்கிய வாதவூரர், முன் போல் அமைச்சர் கோலம் பூண்டு, திரும்பிச் சென்று, மதுரையில் பாண்டியனைக் கண்டனர். கண்டு, மாணிக்கத்தைக் கையுறையாகத் தந்தனர். பாண்டியன் அதுகண்டு மகிழ்ந்து, அவரைத் தன்னருகி விருக்கச்செய்து, 'அமைச்சர் பெரும, தாம் சென்ற திக்கில் நடந்த செய்தி யாது?' எனக் கேட்க, வாதவூரர், 'குதிரைகளெல்லாம் நல்லனவாயுள்ளன; ஆவணி மாதம் மூல நாளில் அவை யிங்கே வரும்; அந்நாள் வரும் வரையில் திருப்பெருந்துறையில் தங்கியிருக்க நினைந்தேன்; தாம் சினமிக்கு எழுதிய ஓலை கண்டு உடனே ஈண்டடைந்தேன்' என்றனர். அதுகேட்டு மனம் வருந்திய பாண்டியன், 'ஏதோ எழுதி விட்டேன்; அதைப் பாராட்டுதல் வேண்டா' என்று உரைத்து அவர் உள்ளத்தில் உவகையை யெழுப்பினன்.

வாதவூரர் சொல்லியவாறே ஆவணி மூலநாள் என்று அணையும் என எதிர்பார்த்திருந்த அரசனை, அந்நாளுக்கு இரண்டு நாள் முன்னதாகவே[12] அமைச்ச னொருவன் அணுகி, 'வாதவூரர் சொன்னவெல்லாம் வாய்மையல்ல; அவர் குதிரைகளைக் கண்ணுற் கண்டதுமில்லை; பொன் கொடுத்து அவற்றைப் பெற்றதுமில்லை; கொண்டு சென்ற பொன்னை யெல்லாம் திருப்பெருந்துறையில் சிவனடியார் ஒருவருக்குக் காணிக்கையாகக் கொடுத்து விட்டனர்' என்று கூறினன். உடனே பாண்டியன் சில ஒற்றரை

---

11. மாணிக்கம் கொடுத்ததாகத் திருவாலவாயுடையார் திருவிளையாடல் கூறவில்லை. பாண்டியன் பொருளைத் தம்மனம் போனவாறு செலவிட்டதை யுன்னிவருந்தி ஆலயத்துட் புகுந்தனர்; அங்குப் பாண்டியனுக்கு ஐந்தாறு நாட்களில் குதிரைவரும் என்று ஓலையெழுதி விடுக என்று ஓர் அசரீரி தோன்றிற்று. அவ்வாறே வாதவூரர் ஓலையெழுதியனுப்பினர் - திருவாலவா.

12. குறித்த நாளிற் குதிரை வாராமையால் அரசன் சினமிக்கவனாய், ஏவலரை அனுப்பிக்கேட்க, வாதவூரர் முன்போலவே குதிரை வரும் என்றனர் - திருவாலவா.

ஏவி, 'திருப்பெருந்துறையில் குதிரைகள் உள்ளனவா?' என்று பார்த்து வரும்படி சொல்ல, அவர்கள் சென்று ஆராய்ந்து பார்த்து வந்து, 'அங்குக் குதிரைகள் இல்லை' எனக் கூறினர். மன்னன் அது கேட்டுச் சீற்றம் மிக்கவனாய்த் தண்டலாளரை நோக்கி, 'நீங்கள் வாதவூரரிடஞ் சென்று, குதிரை வாங்கக் கொண்டுபோன பொன்னை யெல்லாம் கொடுக்கும்படி வற்புறுத்திக் கேளுங்கள்; இன்றேல், வன்சிறையி லிடுங்கள்' என்றான். தண்டலாளர் சென்று வாதவூரரைக் கண்டு, அரசன் கட்டளையை யறிவிக்க, அவர் ஏதுஞ் சொல்லுதற்கின்றி வாளாவிருந்தனர்; ஏவலர் அவரைப் பிடித்துக் கடுஞ்சிறையி லிட்டனர். பொழுது புலர்ந்ததும் தண்டலாளர் வாதவூரரை வெளியே கொண்டுவந்து, வெயிலில் நிறுத்தி வருத்தினர். அப்பொழுது திருவாதவூரர் தம் குருமூர்த்தியை நினைத்து, 'இவ்வாறு யான் துன்புறுதல் உமக்கு ஏச்சன்றோ! தேவரீர் சொல்லியவெல்லாம் பொய்யோ! இனி என்னால் ஆவதும் ஒன்றுண்டோ!' என்று கூறி, தண்டலாளர் செய்த தண்டங்கள் அனைத்தையும் பொறுத்துக்கொண்டு வருத்தமுற்றிருந்தனர்.[13]

இஃது இவ்வாறிருக்க, குருமூர்த்தியாகிய சிவபெருமான் திருவாதவூரர் சிந்தை மெலிவைத் தீர்த்தற்கெண்ணி, [14]நரிகளைப் பரிகளாக மாற்றி, தேவர்களைப் பாகர்களாக்கி அவற்றின்மீது ஏற்றி, தாம் குதிரை வணிகர்போல் உருக்கொண்டு, வேதமே குதிரையாகத் தாம் அதன்மேற்கொண்டு, பாகர் தம்மைச் சூழ்ந்து வர, மதுரையம்பதியை நோக்கிச் செல்லுவாராயினர்; அது கண்ட ஒற்றர் ஓடிச் சென்று, 'குதிரை வருகிறது' என்று அரசனுக்கு அறிவித்தனர். அரசனும் அகமிக மகிழ்ந்து, வெளிப்போந்து, வாதவூரரை வரவழைத்து, அவருடன் கூடி, [15]வையாளி வெளியை அடைந்து, அங்கே அப்போது அமைத்திருந்த ஆதனத்தில் அமர்ந்தான்; வாதவூரரும் அரசனருகில் அமர்ந்தனர்; மற்றை-யோரும் மகிழ்ந்து பக்கலில் வதிந்தனர்.

---

13. இங்கே, குழைத்தபத்தும் அருட்பத்தும் பாடினார் - திருவாலவா.

14. மிழலைநாட்டுக் காட்டிலுள்ள நரிகளை - திருவாலவா.

15. சித்திரமண்டபத்திலிருக்க, அப்போது சிவபெருமான் திருக்குறிப்பினால் குதிரைவரக் காலந்தாழ்க்க - திருவாலவா.

குதிரைகள் வரும் [16]வேகத்தால் தூசிப்படலம் வானிற் பரந்தது; கடலலைகள் பரந்து வருவதுபோலக் குதிரைகள் வருந் தோற்றத்தைக்கண்ட அரசன், கரைகடந்த களிப்புக்கடலில் மூழ்கினன்; வாதவூரார் மனத்தில் வியப்புத் ததும்பியது. குதிரைக் கூட்டம் வையாளி வெளியைக் குறுகின. குதிரைப்பாகர் நடுவிற் குருமூர்த்தியாகிய சிவபெருமான் குதிரை வணிகர்போல் குலவிவந்தனர். மன்னன் விருப்பத்தை வாதவூரரால் அறிந்த வணிகர், பரிமாவைப் பற்பல விதமாக நடத்திக்காட்டி, முடிவில் அப் பரி ஆடிக்கொண்டுவர அரசனை அணுகினர். அது கண்ட அரசன் ஆனந்தம் மிக்குடையனாய், அரிய பட்டாடை ஒன்றைப் பரிசிலாக நீட்டினன். அதனை, அவ் வணிகர் புன்னகை புரிந்து, தம் செண்டில் ஏற்றனர். அதுகண்ட பாண்டியன், 'யாம் மகிழ்ந்தளிக்கும் இப் பரிசிலை இவர் இவ்வாறு ஏற்றல் என்னே!' எனச் சினந்து நோக்குதலும், வாதவூரார், 'அஃது அவர் நாட்டு வழக்கு; அசட்டையன்று' எனக் கூற, மன்னன் சினந்தணிந்து மனமகிழ்ந்தான். பின்னர்ப் பரிநூல் வல்ல பண்டிதர் அக் குதிரைகளை ஆராய்ந்து நோக்கி, 'இவை நன்னிறமுள்ளன; நற்சுழியுள்ளன; நன்னடையுள்ளன' என்று கூற, அரசனும், 'ஆம், ஆம்; இக் குதிரைகள் அரியவை; கொடுத்த பொன்னுக்கு எட்டிப்பங்கு மிகுதியாகப் பெறும்' என்றான்.

குதிரை வணிகராகிய குருமூர்த்தி அக்குதிரைகளனைத்தையும் கயிறுமாற்றிக் கொடுத்துவிட்டு, அரசனிடம் விடைபெற்றுச் சென்றனர்[17]. மன்னன் வாதவூரரை வாயார வாழ்த்தி, தான் இயற்றிய தண்டனைகளை மனத்தில் வையாது மன்னிக்குமாறு வேண்டியபின், தன் மாளிகையை அடைந்தான். வாதவூரரும் அரசனுடன் அரண்மனைக்குச் சென்று, பின்னர், தம் இருக்கைக்கு ஏகினர்.

---

16. அரசன் ஏவலரை நோக்கி, குதிரை வருகின்றனவா பாருங்கள் என, அவர்கள் பார்த்து இல்லை என்றனர்; அதன்மேல் அரசன் கடுஞ் சினங்கொண்டு வாதவூரரைத் தண்டிக்கச் செய்தான்-ஏவலர் வாதவூரரைத் தண்டிக்கையில், அவர் அடைக்கலப்பத்துப் பாடினர் - திருவாலவா.

17. இங்கே பிடித்தபத்துப் பாடினர் - திருவாலவா.

மறுநாட் காலையில் அப்பரிகளெல்லாம் நரிகளாக உருமாறி, அங்கிருந்த உண்மைக் குதிரைகளையும் கொன்று, ஊரார் அஞ்சும்படி ஊளையிட்டு ஓட்டெடுத்தன; அது கண்ட குதிரைப்பாகர் மனம் கொதிக்க, உடல் பதைக்க ஓடிச்சென்று, அச்செய்தியை அரசனிடம் முறையிட்டனர்; அம்முறைப்பாட்டைக் கேட்ட மன்னன் அடங்காச் சீற்றமுடையவனாகி, வாதவூரரை வரவழைத்து, 'நீர் இவ்வாறு செய்தது என்னே! இது நெறியோ? பரிகளெல்லாம் நரிகளாயினவே!" என்று பரிகசித்து, தண்டலாளரை நோக்கி, 'நீவிர் இவரை அழைத்துக் கொண்டுபோய், என் பொன் முழுதும் இவரிடத்துப் பெறுக' எனக் கட்டளையிட்டான். தண்டலாளர் அவரை அழைத்துக்கொண்டு போய், பொன்னைக் கொடுக்கும்படி கேட்டனர்; அவர் வாளாவிருக்க, சேவகர் அவரைக் கடுவெயிலில் நிறுத்தி வருத்தினர். திருவாதவூரார் திருவருளை நினைந்து, 'இதுவும் உன் செயலோ! உன்னை நம்பின எனக்கு இத்துன்பமும் வருதல் நேரிதோ!"[18] என்று ஏங்கி யிருந்தனர்.

ஏங்கியிருந்த வாதவூரர் கொண்ட துன்பத்தைத் தீர்த்தருள எண்ணிய இறைவன், [19]கங்கையை நினைத்து, 'நீ வாதவூரன் அடைந்துள்ள துன்பத்தைத் தொலைக்க வழி தேடு' எனலும், கங்கை விரைந்து வந்து வைகையிற் கலந்து பெருவெள்ளமாகி மதுரையம்பதிமேற்[20] பரந்துநின்றது. அதனையறிந்த ஊர்க்குடிகள், 'ஊழிவெள்ளம் உருத்து வந்ததோ! ஒன்றுந் தெரியவில்லையே!" எனத்திகைத்து, ஓடிச்சென்று பாண்டியனிடம் முறையிட்டனர். பாண்டியன் அது கேட்டுப் பயந்து, பொன்னும் துகிலும் பூவும் மணியுங் கொண்டுபோய்ப் பலியாக ஆற்றில்விட்டு, அதன் சினத்தைத் தணிக்க முயன்றான்; முயன்றும், ஆறு மும்முரமாக வீறுவதாயிற்று. 'இஃது என்னே! ஆறு வீறுகிறதே! என்ன செய்தும் வெள்ளம் தணியவில்லையே!" என்று அடுத்து நின்ற அமைச்சரைக் கேட்டான். அமைச்சர் பெரிதும் எண்ணிப்

---

18. திருவேசறவு பாடினர் - திருவாலவா.

19. வருணனை நினைத்தார் - திருவாலவா.

20. மேகங்கள் காலூன்றிப் பெய்தன.

பார்த்து, 'ஒருகால் வாதவூரரை வருத்தியதனால் வந்த கேடாக இருக்கலாமோ, இது, என்று கூறினர்; அது கேட்ட அரசன், 'ஆம், ஆம்! இருக்கலாம், இருக்கலாம்' என்று சொல்லி, உடனே வாதவூரரை வரவழைத்து, அன்பு செய்து, 'அமைச்சர் பெரும, யான் அறியாமற் செய்த தீத்தண்டம் பொறுத்திர்; நீவிர் கொண்டு சென்ற பொருளனைத்தும் சிவனடியார் திறத்துச் செலவிட்டிருப்பீராயின், அதனால் எய்தும் அறப்பயன் அடியேனைச் சேரற்பாலதன்றோ? அதனை யுணராது உம்மை வீணே ஒறுத்தேனே! என்று இரங்கி, 'பெரியீர், இவ்வையைப் பெருக்கு இவ்வூரின்மீது செல்லாதபடி அடக்குதல் வேண்டும்' என்று வேண்டினன். வாதவூரர் திருவருளை உன்னினர்; வையை வேகங் குறைவதாயிற்று. அது கண்ட வாதவூரர் தம் அருகில் நின்ற காவலரை நோக்கி, 'நீங்கள் சென்று பறையறைந்து ஊராரைக் கூட்டிவந்து இவ்வாற்றுக்கு அணையிடச் செய்யுங்கள்; அவரவருக்கு இடம் அளவிட்டுக் கொடுங்கள்' என்றனர். காவலர் அக்கட்டளையை அறிவித்துப் பறையறையவே, ஊரிலுள்ளார் ஏருக்கு ஒருவராகக் கூடி வையைக் கரையில் வந்து சேர்ந்தனர். அவரவர்க்குரிய இடங்களைக் காவலர் அளந்து காட்ட, அவரவர் தத்தம் பங்கை மண் வெட்டிக்கொட்டி அடைக்கலாயினர். பின்னர், அரசன் முதலாயினோர் அரண்மனையை அடைந்தனர்.

மதுரையம்பதியில் பிட்டு வாணிச்சி ஒருத்தி யிருந்தாள்; அவள் பழுத்து நரைத்த கிழவி; சொக்கர் அடியிற் சோராத அன்புடையவள்; தான் சுடும் பிட்டை முதற்கண் அப் பெருமானுக்குப் படைத்து, பிறகு விலைக்கு விற்பவள்; அவள் பெயர் **செம்மனச் செல்வி**[21] என்பது. அக் கிழவியின் பங்கை அடைத்தற்கு ஆளில்லாமையால் அவள் பெரிதும் அச்சுற்று, சொக்கர் ஆலயத்துட் புகுந்து, தன் குறையை அப்பெருமானிடம் சொல்லி முறையிட்டாள். சொக்கர் அவ் வேழைக்கு இரங்கி ஒரு கூலியாள் போல் அவள்முன் தோன்றினர். அவள் கூலியாளைக் கண்டதும் தன் குறை தீர்ந்தவளாய், 'அப்பா, வேலை செய்து கூலி வாங்கிக்

---

21. இப்பெயர் திருவாலவாயுடையார் புராணத்தில் காணப்படவில்லை; பரஞ்சோதி முனிவருடைய திருவிளையாடலில் வந்தி என்னும் பெயர் காணப்படுகிறது. வந்தி - பிள்ளையில்லா மலடி.

கொள்ளுவையோ?' என்று கேட்டாள். 'கூலிக்கு வேலை செய்பவன்-தான் நான்; முன்பு கூலி கொடுத்தால், பின்பு வேலை செய்வேன்' என்றார். 'ஆனால் சரி, முன்பு கொஞ்சம் பிட்டுத் தருகிறேன்: மாலையானதும் பிட்டு விற்றுக் கூலி கொடுப்பேன்' என்றாள். சொக்கர் அவ்வேற்பாட்டிற்கு உடன்பட்டு, செல்வி கொடுத்த பிட்டை வாங்கி மடியிற் கட்டிக்கொண்டு, சிறிது வாயிற் போட்டு மென்று தின்றுகொண்டே நடந்தார். 'ஆகா, இந்தப் பிட்டுப் பெருஞ்சுவை யுடையது! நறுமணம் உடையது! நன்று, நன்று!' என்று சொல்லிக்கொண்டே, அக்கிழவியுடன் வையைக் கரையை அடைந்தனர். செல்வி தன் பங்குக்குரிய பாகத்தைக் காட்ட; 'சரி, இதோ ஒரு நொடிப்போதில் இதனை அடைத்து வருகிறேன், அஞ்ச வேண்டா' என்று தேற்றினர். செம்மனச்செல்வியும் சிந்தை மகிழ்ந்தாள்.

பின்னர், வேலையாளாகிய சொக்கர் மண்ணை வாரிக் கொட்டு-வார்போல் திருவிளையாடல் புரிவாராயினர். மண்ணை வெட்டுவார், கரையிற் கொட்டுவார்; சிறிது நின்று சும்மாடு கோலுவார்; பசிப்பவர்போல் பிட்டை யெடுத்து வாயிற் போட்டுக் கொள்வார், இருபுறங்களிலும் ஒதுக்கி மெல்லுவார்; நாவினால் சுவைப்பர்; 'நறுவிது, நறுவிது' என்று தம் தலையை அசைப்பர்; 'திண்ணப்ப-னாகிய கண்ணப்பன் படைத்த கறியினும் சால நறுவிது இது' என்பர்; பிறகு ஒரு கூடை மண்ணை வாரிக் கொட்டிவிட்டுக் கூத்தாடுவார். இந்தக் கூத்துக்களை யெல்லாம் கண்டாள் செம்மனச் செல்வி. 'என்னே இக்கூத்து! என்னே இவ்வாட்டம்! மண் எடுத்தபாடில்லையே! கொட்டியபாடில்லையே! கரையை அடைத்தபாடில்லையே! என்ன செய்வேன்! காவலர் கண்டால் கடுகுவரே!' என்று கன்றி நின்றாள். அது கண்ட சொக்கர், 'அம்மே, இனி என் பாடு, உனக்கேன் கவலை; நீ வீடுபோய்ச் சேர்' என்றார். கிழவி எதுவும் சொல்வதற்கின்றி மனம் வாடி, தன் மனையை அடைந்தாள். செம்மனச் செல்வி சென்றவுடன், சொக்கராகிய கூலியாள், கூடை-யைத் தலைக்கணையாக வைத்துக்கொண்டு ஒரு கொன்றை மரத்தின் நீழலில் படுத்துக்கொண்டனர்.

திருவாதவூரர் காவலரை நோக்கி, 'நீவிர் சென்று அவரவர் தத்தம் பங்கை அடைத்தாயிற்றோ, பார்த்து வாருங்கள்' என்று பணித்தனர். அவர்கள் அவ்வாறே சென்று பார்த்து வருகையில்

பிட்டு வாணிச்சியின் பங்குமட்டும் அடைபடாமையின், மற்றை-யோர் அடைத்த கரையும் அறுத்துக்கொண்டு போவதை யுணர்ந்து, அதனை அடைக்க வந்தவனைத் தேடி அழைத்துக்கொண்டு வந்து தம் தலைவன்முன் நிறுத்தினர். அத் தலைவன், 'இவனை உதிரம் ஒழுகு-மாறு பிரம்புகொண்டு புடைக்க' எனலும், ஒருவன் அவரைத் தன் பிரம்பால் ஓங்கிஅடித்தனன்; [22] அடிக்கவே, சொக்கர், அங்கிருந்தார் அனைவரும் துணுக்குற மறைந்தருளினர். ஆயினும் அப் பிரம்படி அரசன், அரசி, அமைச்சர், காவலர் முதல் அனைவர்-மீதும் பட்டது; வாதவூரர்மீதும் பட்டது. அவ்வடியைப் படாதவர் தாம் யாவர்! அனைவரும் திடுக்கிட்டனர்; என்னே என்னே என்று இறும்பூதெய்தினர். அரசன் முதலியோர் இது தெய்வத் திருவருளே என்று வியந்தனர். திருவாதவூரர், சொக்கரே இவ்வாறு கூலியா-ளாக வந்தனர் என்றுணர்ந்து அன்புற்று அவர் படுத்திருந்த இடத்-தை அணுகிப் பார்த்துப் பார்த்து ஏங்கினர். காவலர், சொக்கர் பிட்டுக்கு மண்சுமந்த வரலாற்றை விவரமாக வெளியிட்டனர். அது கேட்டு வாதவூரர் அழுது புலம்பினர். வையையும் வற்றியது.

இத்திருவிளையாடல் அனைத்தும் திருவருட் செயலால் உண்-டானது என்று உணர்ந்த பாண்டியன் வாதவூரரைக் கண்டு வணங்கி, 'மெய்யன் புடையீர், தமது உயர்வை யுணராது காவல-ரைக்கொண்டு கடுந்தண்டம் செய்வித்தேன்; அடியேன் ஆராயாது செய்த குற்றத்தை மன்னித்தருளல் வேண்டும்; அன்றியும், தாம் அரசராகவும் அடியேன் அமைச்சனாகவும் இருந்து ஆட்சிபுரிதல் வேண்டும்; இதுவே என் விருப்பம்' என்றான். திருவாதவூரர் 'எமக்கு அது வேண்டா; யாம் திருப்பெருந்துறைக்குச் செல்லு-மாறு செய்வதே எமக்கு ஆட்சி; இன்னே செலவிடுக' என்றார். அதன்மேல் பாண்டியன் அவர் விரும்பியவாறே அவரைத் திருப்-பெருந்துறைக்குச் செலவிடுத்தான்.[23]

22. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல், அரிமர்த்தன பாண்டி-யன் அடித்தான் என்னும்

23. 'இங்கு நின்றும் 'நமச்சிவாய வாஅழ்க' வென்னும் கலிவெண்-பாவைப் பாடிக்கொண்டே சொக்கர் ஆலயத்துக்குச் சென்று இறைவனை வணங்கிக்கொண்டு, நேரே திருவுத்தர கோசமங்கைக்குச் சென்றார்' — திருவாலவாயுடையார்.

திருவாதவூரர் பாண்டியனை விட்டுப்பிரிந்து, பரிந்து சென்று, திருப்பெருந்துறையில் தேசிகமணியைத் தரிசித்து, வணங்கினர். குருமூர்த்தி அவருக்குத் திருநீறு சாத்தி, அவர்மீது அருட்கண் வைத்தனர். திருவாதவூரர் அடியார்கூட்டத்தில் கலந்திருந்தனர்.

குருமூர்த்தி தம் அடியாரை நோக்கி, 'அன்பர்காள், யாம் கயிலாயஞ் செல்லவேண்டும்; நீவிர் ஈண்டு இன்புற்று வாழ்ந்திருங்கள்' என்று பணித்தனர். அடியார் அக் குருமூர்த்தியைப் பிரிந்திருக்க மனமில்லாராய், பெரிதும் வாடிப் புலம்பினர்; அதன்மேல் குருமூர்த்தி, 'இக்குருந்த மரத்தின் நீழலில் பீடம் ஒன்று அமைத்து, அதன்மீது எம் திருவடிகளை வைத்துப் பூசித்துக்கொண்டிருங்கள்; ஒருநாள் இப்பொய்கையில் தீப்பிழம்பு தோன்றும்; அதனில் நீவிர் அனைவரும் மூழ்கி எம்பதியை யடைவீர்,' என்று கூறியருளிக் கயிலையங்கிரியை அடைந்தனர். திருவாதவூரர்மட்டுங் குருமணியைப் பின் தொடர்ந்தனர். அவர் அங்கு ஒரு கொன்றை மரத்தின்கீழ் நின்று, வாதவூரரை அருகில் இருத்திக்கொண்டு, 'அன்ப, யாம் எங்கும் இருப்போம்; ஆயினும் இக்குருந்த மரத்தின் நீழலில் அடியார் வினையை நீக்குதற் பொருட்டு என்றும் இருப்போம்; நீ இவ்விடத்திலேயே இரு; பொய்கையில் தீப்பிழம்பு தோன்றுங்கால், அனைவரும் அதனில் மூழ்குவார்கள்; நீமட்டும் இங்கு இருந்து, உத்தரகோசமங்கை என்னும் தலத்தையடைந்து, அங்கு அட்டமா சித்திகளையும் பெற்று, மற்றத் திருப்பதிகளையுந் தரிசித்து, முடிவில் சிதம்பரத்தை யடைந்து, புத்தரை வாதில் வென்று, ஈற்றில் எம்மை யடையக் கடவாய்' என்று அருளிச்செய்து மறைந்தருளினர். அதுகண்ட திருவாதவூரர் குருமூர்த்தியை மனத்தால் தியானித்துக்கொண்டே அடியார் கூட்டத்தை அடைந்து, குருந்த மரத்தின் நீழலில் தெய்வப்பீடம் ஒன்று அமைத்து, அதனில் குருமூர்த்தியின் திருவடிகளை இருத்தி முப்போதும் எப்போதும் பூசித்து வருவாராயினர்.[24]

---

24 இச்செய்திகளை யெல்லாம் வாதவூரருக்குக் குருமூர்த்தி, அவர் முதலில் வந்தபோதே அருளிச் செய்ததாகக் கூறும் திருவாலவாயுடையார் திருவிளையாடல்.

இவ்வாறு நிகழ்ந்துவரும் நாட்களில், வாதவூரர்,

1. நமச்சிவாய வாஅழ்க எனத் திருவாசகத்தைச் சொல்லத் தொடங்கினர்;[25] பின்னர்,

2. அற்புதப்பத்து,
3. அதிசயப்பத்து,
4. குழைத்தபத்து,
5. சென்னிப்பத்து,
6. ஆசைப்பத்து,
7. வாழாப்பத்து,
8. அடைக்கலப்பத்து,
9. செத்திலாப்பத்து,
10. புணர்ச்சிப்பத்து,
11. அருட்பத்து என்னும் பதிகங்களைப் பாடி யருளினர். பின்னர்,

12. திருவார்த்தை,
13. எண்ணப்பதிகம்,
14. வெண்பா இருபத்தெட்டு,
15. திருப்பள்ளியெழுச்சி,
16. திருவேசறவு,
17. ஆனந்தமாலை,
18. உயிருண்ணிப்பத்து,
19. பிரார்த்தனைப்பத்து,

---

25 இக் கலிவெண்பாவை வாதவூரர் பாண்டியனிடம் மதுரையில் இறுதியாக விடை பெற்று, உத்தர கோசமங்கைக்குச் செல்லுமுன் பாடியருளியதாகத் திருவாலவாயுடையார் புராணம் கூறும்.

* இது, அச்சிட்ட திருவாசகத்தில் திருவெண்பா, பண்டாயநான்மறை என இரண்டாக அமைக்கப்பெற்றுள்ளது. திருவெண்பா பதினொரு செய்யுட்களும், பண்டாயநான்மறை எழு செய்யுட்களும் ஆகப் பதினெட்டுச் செய்யுட்களே காண்கின்றன.

20. **திருப்பாண்டிவிருத்தம்** ஆகிய திருப்பதிகங்களையும் இசைத்தருளினர்.

இங்ஙனமிருப்ப, ஒரு நாள் பொய்கையில் தீப்பிழம்பு தோன்றிற்று; தோன்றக்கண்ட அடியார் அனைவரும் பஞ்சாட்சரத்தை ஓதிக்கொண்டே மூழ்கினர். சிவபெருமான் பார்வதி சமேதராய் இடப வாகனத்தின் மீதிருந்து காட்சி தந்தருளினர். அடியார்கள் சிவகண நாதராய்த் திருவுருத்தாங்கிச் சிவபெருமான் முன்பு நின்றனர். சிவபெருமான் அவர்களோடு மறைந்தருளினர். இந்த நிகழ்ச்சி நிகழுங்காலத்தில் வாதவூரர் ஒரு கொன்றை மரத்தின் நீழலில் தங்கி, சிவயோகு செய்திருந்தனர். அவ் யோகத்தில் இந் நிகழ்ச்சிகளைக் கண்ட அவர், தாம் தனியே நின்றதை எண்ணித் தயங்கி வருந்தி எழுந்து குருந்தமரத்தின் நீழலில் வந்து, குருமணியின் பாதத்தைப் பற்றிக்கொண்டு அழுது,

21. **திருச்சதகம்** என்னும் பாமாலையைப் பாடியருளினர். பின்னர்க் குருமூர்த்தியின் கட்டளையை நினைந்து, திருவுத்தரகோசமங்கைக்குச் சென்று, குருமூர்த்தியின் வடிவத்தைக் காணாராய் மூர்ச்சையுற்று, 'என்னை நீத்தனையோ!' என்று,

22. **நீத்தல்விண்ணப்பம்** செய்தனர்.

உடனே அக் குருவுருவந் தோன்ற அதனை அன்புடன் தரிசித்து வணங்கினர். பின்னர்ப் பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவிடைமருதூரை யடைந்து பெருமானை வணங்கிக்கொண்டு திருவாரூருக்குச் சென்று புற்றிடங்கொண்ட நாதரைத் தரிசித்து,

23. **திருப்புலம்பல்** என்னும் பதிகத்தை அருளிச்செய்தனர்.

அதன் பின்னர், சீர்காழிக்குச் சென்று தோணியப்பரை வணங்கி,

24. **பிடித்தபத்து** என்னும் பதிகத்தைப் பாடினர். அங்கு நின்றும் தில்லையைத் திக்குநோக்கி வணங்கித் திருமுதுகுன்று, திருவெண்ணெய்நல்லூர் என்னுந் தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவண்ணாமலையை அடைந்து, அங்கே குருமூர்த்தியின் கோலத்-

தைக் கண்டு துதித்துக்கொண்டு இருக்கும் நாட்களில், மார்கழி மாதம் வர, மாதர்கள் மார்கழி நீராடுதற்பொருட்டுச் செல்லும் முறையை நோக்கி, அவர்கள் கூறும் வாக்காக,

25. திருவெம்பாவை என்னும் திருப்பாடலைச் செய்தருளி-ஞர். பின்னர் அந் நகரில் அம்மானையாடும் பெண்டிரைப் பார்த்து, அவர்கள் கூறும் கூற்ருக,

26. **திருவம்மானை** என்னும் செய்யுளைப் பாடினர். பின்னர்க் காஞ்சியம்பதியைக் கண்டருளி, கழுக்குன்றத்தை யடைந்து,

27. திருக்கழுக்குன்றப் பதிகம் பாடிச் சில பகல் அங்குத் தங்கி யிருந்தனர். முடிவில் சிதம்பரத்திற்குச் செல்லுமாறு எண்-ணம் எழ, அங்குப் போய், குருமூர்த்தியின் திருவுருவந் தோன்ற அதனைக் கண்டு ஆநந்தக் கண்ணீர் பெருக,

28. **கண்டபத்து** என்னும் பதிகம் பாடியருளினர். பின்னர்த் திருப்புலீச்சரம், திருநாகேச்சரம் என்னுந் தலங்களைத் தரிசிக்கை-யில் குருவுருவந்தோன்ற அதனை வணங்கிக்கொண்டு திரும்பி, தில்லைமூவாயிரவர் வாழும் தெருக்களிற் போகும்போது,

29. குலாப்பத்து,
30. கோயிற்றிருப்பதிகம்,
31. கோயின்மூத்ததிருப்பதிகம்,
32. கீர்த்தித்திருவகவல்,
33. திருவண்டப்பகுதி,
34. போற்றித் திருவகவல் என்னும் பாடல்களை அருளினர். பின்னர், பெண்டிர் பொற்சுண்ணம் இடிக்கலைக் கண்டு, அன்னோர் கூறியதாக,

35. திருப்பொற்சுண்ணம் பாடியருளினர். அதன்பின்,
36. திருத்தெள்ளேணம்,
37. திருவுந்தியார்,
38. திருத்தோணோக்கம்,
39. திருப்பூவல்லி,

40. திருப்பொன்னூசல்,
41. அன்னைப்பத்து,
42. திருக்கோத்தும்பி,
43. குயிற்பத்து,
44. திருத்தசாங்கம்,
45. அச்சப்பத்து என்பனவற்றை அருளிச் செய்தனர்.

அவர் தில்லையில் ஒரு பன்னசாலை அமைத்துக்கொண்டு நாடோறும் நடராசரைத் தரிசித்து வரும் நியமம் பூண்டிருந்தனர்.

இஃது இங்ஙனமாக, சிவபக்தியிற் சிறந்து விளங்கிய தவசி யொருவர் தலயாத்திரை செய்வதிற் பெரிதும் விருப்புடையவராய், அங்கங்கே சென்று, சிவதலங்களைத் தரிசித்துக்கொண்டு சோணாட்டை யடைந்து, தில்லையம்பதியில் பொன்னம்பலத்தை வணங்கியபின், ஈழ நாட்டிற்குச் சென்றனர். அவர் உட்காரும்போதும் எழும்போதும் **பொன்னம்பலம், பொன்னம்பலம்** என்று சொல்வது வழக்கம். ஈழநாட்டில் அரசனிருக்கு மிடத்தும் அப்படியே சொல்லினர். அதனைக் கேட்ட புத்தர்கள் அதிசயித்துச் சென்று தம் அரசனுக்கு அறிவித்தனர். அவன், 'அவரை இங்கே அழைத்துவருக' என்றான். புத்தர் வந்து அப்பெரியாருக்கு அரசனது ஆணையைக்கூறி, அவரை அவனிடம் அழைத்துச் சென்றனர். சென்ற தவசியார், அரசன் முன்பும் **பொன்னம்பலம்** என்று சொல்லிக் கொண்டே உட்கார்ந்தனர். அரசன் அதனைக் கேட்டு, 'என்ன அது ?' என்றான். அதன்மேல் அப்பெரியார் பொன்னம்பலத்தின் சிறப்புக்களை எடுத்துரைத்து, 'பொன்னம்பலம் என்று ஒரு முறை உள்ளன்போடு ஓதுபவர் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத்து அறுநூறு முறை ஓதிய பலனை அடைவர்' என்று சொல்லினர். அங்கிருந்த புத்தகுரு அதனைக் கேட்டுச் சினமிக்கவனாய், 'திரிபிடகத்தை யருளிய தேவனையன்றிப் பிறிதோர் தெய்வமும் உண்டோ ? உண்டாயின் காண்போம் புறப்படும் தில்லைக்கு; அங்குச் சென்று வாது செய்து உம்மை வென்று எம்முடைய புத்தரை, அப் பொன்னம்பலத்தில் அமைப்போம்' என்று சபதங்கூறி, பௌத்தர்கள் தன்னைப் புடைசூழ்ந்துவர, சிவிகையேறிப் புறப்பட்டான். அரசனும் ஊமையாகிய தன் பெண்-

ணைக் கூட்டிக்கொண்டு சிவிகையில் புறப்பட்டனன். நால்வகைச் சேனைகளும் அமைச்சர் முதலாயினோரும் புறப்பட்டனர். அனைவருங்கூடித் தில்லைப்பதியின் எல்லையை அடைந்தனர். பின்னர்ப் புத்தகுரு கோயிலுட் புகுந்து பொன்செய் மண்டபத்தில் உட்கார்ந்தான்; அரசன் முதலாயினோரும் அவ்வாறே சென்று அமர்ந்தனர்.

அவர்களைக் கண்ட கோயிற் காப்பாளர் நெஞ்சந் திடுக்கிட்டு, புத்த குருவை நோக்கி, 'ஆலயத்தைவிட்டு அப்புறம்போம்' என்று கூறினர். அவன், 'யான் உங்கள் சைவசமயம் தாழ்ந்தது, புத்த சமயமே உயர்ந்தது என்பதைச் சோழன் முன்னிலையில் நிலை நிறுத்தி, புத்த பகவானை இப் பொன்னம்பலத்தில் இருத்திய பின்பே அப்புறம் போவேன்' என்றான். அது கேட்ட காப்பாளர் சென்று தில்லை மூவாயிரவருக்குச் செய்தி தெரிவிக்க அவர்களும் உடனே திரண்டு கோயிலை அடைந்தனர்; அடைந்தபோதும் புத்த குரு ஆடாமல் அசையாமல் இறுமாந்திருந்தான். 'உனக்கு இவ்வளவு இறுமாப்பு எப்படி உண்டாயிற்று?' என்றனர் தில்லை மூவாயிரவர். அதற்கு அப் புத்தகுரு, 'நீங்கள் உங்கள் சிவமே உண்மைக் கடவுள் என்று நாட்டுவீராயின், யாம் எம் புத்த பகவானே உண்மைக் கடவுள் என்று காட்டுவோம்!' என்றான். மூவாயிரவர் இனி இவனோடு பேசுவது சேற்றில் கல்லெறிதலை யொக்கும், நியாய வாயிலாக இவனை வெல்லுதல்வேண்டும்' என்று தீர்மானித்து, இது செய்தியை ஓலை யெழுதிச் சோழற்குத் தெரிவித்ததுமன்றி, மற்றைத் தவசிகளுக்கும் ஓலை போக்கினர். அன்று இரவு தில்லை மூவாயிரவர், 'இந்த இடுக்கணுக்கு என்ன செய்வது! இறைவர் கைவிடமாட்டார்' என்று சொல்லிக்கொண்டு கண்ணுறங்கினர். கடை யாமத்தில் நடராசமூர்த்தி அவர்களுக்குத் தனித் தனியே கனவில் தோன்றி, 'அன்பர்களே, உங்கள் கவலையை விட்டொழியுங்கள்; இத் தில்லைத்தலத்தில் திருவாதவூரன் என்பான் வந்திருக்கின்றான்; அவன் நம்மிடத்து நீங்காத பேரன்புடையவன், வல்லவன்; அவனை அழைத்து வருங்கள்; அவன் ஒருநொடிப் போதில் இப் புத்தரை வென்றிடுவான்' என்றனர். அதுகேட்டு அனைவரும் எழுந்து சபையில் வந்துகூடி, கண்டகனவை ஒருவர்க் கொருவர் சொல்லினர். பின்னர் அனைவரும் சென்று திருவாத-

ஊரர் தங்கியிருந்த பன்னசாலையைத் தேடி யடைந்து அவரிடம் இச் செய்தியைத் தெரிவித்து, நடராசர் தம் கனவில் தோன்றி உரைத்ததையும் உணர்த்தினர். அதனைக் கேட்ட வாதவூரர், குருமூர்த்தி திருப்பெருந்துறையில் தமக்கு உணர்த்தியருளிய செய்தியை உய்த்துணர்ந்து, அம்மூவாயிரவருடன் கூடிச்சென்று, நடராசப் பெருமானை வணங்கி வாழ்த்தி, அவரது திருவருள் பெற்று, புத்தரிருந்த மண்டபத்தை யடைந்தனர். அதற்குள் சோழன் முதலியோரும் வந்து சேர்ந்தனர்.

வாதவூரர் புத்தர் முகத்தைப் பார்க்க மனம் பொறாதவராய், இடையே திரையிடுவித்து, அதன் மறைவில் அமர்ந்தனர். சோழனும் வந்து, வாதவூரரை வணங்கி, அவர் பக்கலில் இருந்தான். ஈழநாட்டரசன் சோழனைக் கண்டு திறை கொடுத்து வணங்கினான். எல்லோரும் குழுமிய அக் கூட்டத்துள் சோழன் வாதவூரரை வணங்கி வாழ்த்தி, 'அடிகேள், சைவசமயத்தை நிலை நிறுத்துவது தங்கள் கடமை; பௌத்தரைப் பங்கப்படுத்துவது என் கடமை' என்றான். அதன்மேல் திருவாதவூரர் பௌத்த குருவைப் பார்த்து, 'நீர் இங்கு வருவதற்குற்ற காரணம் யாது?' என்று கேட்க, புத்தன், 'எங்கள் புத்தபகவானே உண்மைக் கடவுள் என்பதை எவரும் உணரக் காட்டி இப் பொன்னம்பலத்தில் அவரைப் பிரதிஷ்டை செய்ய வந்துள்ளேன்; இதுதான் காரணம்' என்றான். வாதவூரர் அதுகேட்டுப் புன்னகை புரிந்து, 'ஆயின் உமது கடவுளின் உண்மையுருவும் முத்திலட்சணமும் இன்னவென விவரிப்பீர்' என, அவன் திரிபிடகத்தில் கூறியபடியே கூறி விளக்கினான். அவற்றையெல்லாம் வாதவூரர் அளவுநூல் முறைப்படி மறுத்து ஒதுக்கினர். அதுகண்டு வெட்கிய புத்தகுரு, 'சிவபெருமான் கையில் செபமாலை வைத்திருப்பது எதற்கு? சிற்சபையில் நடிப்பது எதன் பொருட்டு? உடல் முழுதும் திருநீறு அணிவது ஏன்? செபமாலை வைத்திருப்பது அவரினும் வேறொரு கடவுள் உண்டென்று உணர்த்தவில்லையா? நடிப்பது, பிறர்கண்டு மெச்சிப் புகழவேண்டுமென்பதைக் குறிக்கவில்லையா? திருநீறணிவது தூய்மையற்றதைத் தூய்மையுள்ளதாக நினைப்பதனாலன்றோ?' என்று பெருமிதத்துடன் குதர்க்கமாகக் கேட்டான். திருவாதவூரர், 'நீர் கேட்ட கேள்விகளும், அவற்றிற்கு நீரே கூறிய அமைவுகளும்

வெகு நன்றாயிருக்கின்றன' என்று நகைத்து, 'ஐயா, மாணுக்கருக்கு ஆயுதப் பயிற்சி செய்விப்போர் தம் கையிலும் ஓராயுதம் கொண்டிருத்தல் முறையன்றோ? அஃதேபோல் சிவபெருமான் உலகினர் தவஞ் செய்யும் முறையைக் காட்டச் செபமாலையைத் தம் கையிற் கொண்டனர்; "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்றபடி, அவன் ஆடினுற்றான் அகிலமும் ஆடும்; அதனால் ஆடுகின்றார். திருநீறு ஆன்மாக்களின் துன்பங்களை நீறுபடச்செய்வது; அதனால் சேயடைந்த நோய்க்குத் தாய் மருந்துண்டல்போலச் சிவபெருமான் தம் உடலில் திருநீறு அணிகின்றார்' என்று விடைகூறினர். பின்னர் வாதவூரர் கலைமகளை நோக்கி, 'நீ இப்பொய்யர்நாவில் எவ்வாறு பொருந்தி நின்றனை? உடனே அகல நட' எனலும், அவள் அவர்கள் நாவினின்றும் நீங்கவே, புத்தர்கள் அனைவரும் பேசமாட்டாத ஊமைகளாயினர்.

அதுகண்டு வியப்புற்ற ஈழத்தரசன் வாதவூரரை வணங்கி, 'சுவாமி, பேசவல்லார் பேச்சற்று ஊமைகளாயினர்; இனி ஊமைகளாயிருப்பவர் பேசுதல்வேண்டுமே! என் அருமைப்புதல்வி பிறவி முதல் ஊமையாக விருக்கின்றாள்; அவள் பேசும் வண்ணம் அருள் புரிதல் வேண்டும்' என்று வேண்டி நின்றான். அது கேட்டு வாதவூரர் மெய்யருள் சுரந்து, அப்பெண்மணியை அங்கு வரவழைத்து, 'அம்மையே, இப்புத்தன் இப்போது கேட்ட கேள்விகளுக்கு விடையிறுப்பாய்' என்று கூற, அப்பெண்மணியும் கற்றோருங் கேட்டுக் களிக்கத்தக்க விடையிறுத்தாள். அவ்விடையைத் திருவாதவூரர் சாழல் விளையாட்டாகத்

46. **திருச்சாழல்** *பாடினர்.*

தன் பெண் பேசியதைக் கேட்ட ஈழமன்னன் இணையற்ற மகிழ்ச்சியடைந்து வாதவூரரை வாயார வாழ்த்தி, அவருக்குத் தொண்டுபூண்டு ஒழுகினுன். அப்பெண்ணும் வாதவூரர் மலரடியிற் பணிந்து வணங்கினள்; வாதவூரர் அவளை அன்புடன் வாழ்த்தினர். சோழமன்னன் சொல்லொணு வியப்புற்று அவரைப் போற்றித் துதித்தான். தில்லை மூவாயிரவர் முதலிய அனைவரும் **பொன்னம்பலம் வாழ்க, பொன்னம்பலம் வாழ்க** எனப் போற்றிப் புகழ்ந்து வாதவூரரை வாழ்த்தினர். ஈழத்தரசன் புத்தரைத்

திருவாதவூராருக்குக் காட்டி 'இவர்களும் பேசும்படி செய்தருள் வேண்டும்' என்று வேண்டினன்; அவர் 'அவ்வாறே யாகுக' என, புத்தரும் முன்போல் பேசுவாராயினர். பின்னர் அவர்கள் வாதவூரார் மலரடியில் விழுந்து, 'சுவாமி, அடியேங்களுக்குத் திருநீறும் அக்குமாலையும் கல்லாடையும் அளித்து ஆட்கொளல் வேண்டும்' என்று இரந்தனர். அவர் அவற்றை அவர்கள் விரும்பியவாறே அளித்தருள, புத்தர்கள் அவற்றைப் பணிவுடன் பெற்றுப் புனைந்து கொண்டு, தாம் உடுத்திருந்த சீவரவுடையைச் சுட்டெரித்தனர். பின்னர் அனைவரும் ஒருங்குகூடி நடராசப் பெருமானைத் தரிசித்து வணங்கினர். சோழனும் ஈழத்தரசனும் திருவாதவூராரிடம் பிரியா விடைபெற்றுத் தத்தம் இருக்கைக்கு ஏகினர். புத்தர்கள் சைவர்களாகித் திருவாதவூராருக்குத் தொண்டுபுரிந்து திருத்தில்லை யிலேயே தங்கி யிருந்தனர்.

திருவாதவூரார் தம் பன்னசாலைக்குத் திரும்பிச் சென்று அங்கே அமர்ந்திருந்தனர். இருக்கும் நாளில்

47. **திருப்படையாட்சி,**

48. **திருப்படையெழுச்சி,**

49. **அச்சோப்பத்து,**

50. **யாத்திரைப்பத்து** என்பவற்றைப் பாடியருளிப் பரவசமுற்று வாழ்ந்திருந்தனர்.

திருவாதவூரார் இவ்வாறு திகழும் நாட்களில் ஒருநாள் அந்தணர் ஒருவர் அங்கு வந்து நின்றார்; அவரை வாதவூரார் 'இப்படியிரும்' என்று தம் அருகில் அமரச்செய்து, 'நீர் யாவிர்? இங்கு வந்தது எதற்கு?' என்று கேட்டனர். அந்தணர், 'யான் இருப்பது பாண்டி நாடு; உம்மைக் கண்டு, நீர் பாடிய திருவாசகத்தை எழுதிக்கொண்டு ஓதும்பொருட்டு இங்கு வந்தேன்; உம்முடைய கீர்த்தி மிகப்பெரிது, பிரமன் திருமால் முதலிய தேவர்களாலும் காண்டற்கரிய பரமசிவனைக் குருமூர்த்தியாகப் பெற்றீர்; அவரைக் குதிரையேறிவரச் செய்தீர்; மண் சுமக்கச் செய்தீர்; இத்தில்லைத் தலத்தில் புத்தரை வாதில் வென்றீர்' என்றுகூறி, திருவாசகத்தை முறையே சொல்லும்படி வேண்டினர். வாதவூரார் மனமகிழ்ந்து

537. அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (ச)

538. ஒப்புனக் கில்லா வொருவனே அடியேன்
உள்ளத்து ளொளிர்கின்ற வொளியே
மெய்ப்பத மறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோர் அன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (ரு)

539. அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா ஆனந்தம் அருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியவெம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (சா)

540. பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை யுகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெரு மானே
ஈசனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (எ)

541. அத்தனே அண்ட ரண்டமாய் நின்ற
ஆதியே யாதுமீ றில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே
பித்தனே யெல்லா வுயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை யல்லையாய் நிற்கும்
எத்தனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (அ)

542. பாவினை நாட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (௯)

543. புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
இன்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (௧௦)

[திருச்சிற்றம்பலம்]



## ௩அ. திருவேசறவு

சுட்டறிவொழித்தல்

[திருப்பெருந்துறை]

---

கோச்சகக் கலிப்பா

[திருச்சிற்றம்பலம்]

**544.** இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த்தென் என்புருக்கிக்
கரும்புதரு சுவையெனக்குக் காட்டினையுன் கழலிணைகள்
ஒருங்குதிரை யுலவுசடை யுடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பேரருளே. (க)

**545.** பண்ணார்ந்த மொழிமங்கை பங்காநின் ஆளானார்க்
குண்ணார்ந்த ஆரமுதே யுடையானே யடியேனை
மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய்நீ வாவென்னக்
கண்ணார வுய்ந்தவா றன்றேயுன் கழல்கண்டே. (உ)

**546.** ஆதமிலி யான்பிறப் பிறப்பென்னும் அருநரகில்
ஆர்தமரும் இன்றியே அழுந்துவேற் காவாவென்
றோதமலி நஞ்சுண்ட வுடையானே அடியேற்குன்
பாதமலர் காட்டியவா றன்றேயெம் பரம்பரனே. (௩)

**547.** பச்சைத்தா ளரவாட்டீ படர்சடையாய் பாதமலர்
உச்சத்தார் பெருமானே அடியேனை யுய்யக்கொண்
டெச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே அச்சோவென்
சித்தத்தா றுய்ந்தவா றன்றேயுன் திறநினைந்தே. (௪)

**548.** கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிருமாந் திருந்தேனெம் பெருமானே அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே. ()

549. பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நஞ்சாய துயர்கூர நடுங்குவேன் நின்னருளால்
உய்ஞ்சேனெம் பெருமானே யுடையானே அடியேனை
அஞ்சேலென் றாண்டவா றன்றேயம் பலத்தமுதே. (௬)

550. என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கும் அறியவொண்ணாத்
தென்பாலைத் திருப்பெருந் துறையுறையுஞ் சிவபெருமான்
அன்பால்நீ அகநெகவே புகுந்தருளி யாட்கொண்ட
தென்பாலே நோக்கியவா றன்றேயெம் பெருமானே. (௭)

551. மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா
ஓத்தானே பொருளானே உண்மையுமாய் இன்மையுமாய்ப்
பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினால்
பேர்த்தேநீ யாண்டவா றன்றேயெம் பெருமானே. (௮)

552. மருவினிய மலர்ப்பாத மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறு மிகவலறிச் சிவபெருமான் என்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா
றருளெனக்கிங் கிடைமருதே யிடங்கொண்ட அம்மானே. ()

553. நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே. ()

[திருச்சிற்றம்பலம்]



## ௩௯. திருப்புலம்பல்

சிவானந்தமுதிர்வு

[திருவாரூர்]

கோச்சகக் கலிப்பா

[திருச்சிற்றம்பலம்]

554. பூங்கமலத் தயனொடுமால் அறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறாவெண் ணீறாடீ
ஓங்கெயில்சூழ் திருவாரூ ருடையானே அடியேனின்
பூங்கழல்க ளவையல்லா தெவையாதும் புகழேனே. (௧)

555. சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதி பசுபதீ மழவெள்ளை
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாய் அடியேனான்
உடையானே உனையல்லா துறுதுணைமற் றறியேனே. (௨)

556. உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. (௩)

[திருச்சிற்றம்பலம்]



## ௪௦. குலாப்பத்து

அனுபவமிடையீடுபடாமை

[திருத்தில்லை]

---

கோச்சகக் கலிப்பா

[திருச்சிற்றம்பலம்]

557. ஓடுங் கவந்தியுமே உறவென்றிட் டுள்கசிந்து
தேடும் பொருளுஞ் சிவன்கழலே யெனத்தெளிந்து
கூடும் உயிருங் குமண்டையிடக் குனித்தடியேன்
ஆடுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௧)

558. துடியே ரிடுகிடைத் தூய்மொழியார் தோள்நசையால்
செடியேறு தீமைகள் எத்தனையுஞ் செய்திடினும்
முடியேன் பிறவேன் எனைத்தனதாள் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௨)

559. என்புள் ளுருக்கி இருவினையை யீடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய வுள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௩)

560. குறியும் நெறியும் குணமுமிலார் குழாங்கடமைப்
பிறியும் மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்
செறியுங் கருத்தில் உருத்தமுதாஞ் சிவபதத்தை
அறியுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௪)

561. பேரும் குணமும் பிணிப்புறுமிப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாம்
சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி
ஆருங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௫)

**562.** கொம்பி லரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடலம் மாண்டிங்ஙன் போகாமே
நம்புமென் சிந்தை நணுகும்வண்ண நானணுகும்
அம்பொன் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (சா)

**563.** மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் தோள்நெறிய
மிதிக்குந் திருவடி யென்றலைமேல் வீற்றிருப்பக்
கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம் எனக்களித்திங்
கதிர்க்குங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (எ)

**564.** இடக்குங் கருமுருட் டேனப்பின் கானகத்தே
நடக்குந் திருவடி யென்றலைமேல் நட்டமையால்
கடக்குந் திறலைவர் கண்டகர்தம் வல்லாட்டை
அடக்குங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (அ)

**565.** பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்
கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத்
தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்றலையால்
ஆட்செய் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (கூ)

**566.** கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்
செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்
கிம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்
அம்மை குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே (க0)

[திருச்சிற்றம்பலம்]



# ச௪. அற்புதப்பத்து

அநுபவமாற்றாமை

[திருப்பெருந்துறை]

---

## ஆசிரிய விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

**567.** மைய லாயிந்த மண்ணிடை வாழ்வெனும்
ஆழியுள் அகப்பட்டுத்
தைய லாரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான்
தலைதடு மாறாமே
பொய்யெ லாம்விடத் திருவருள் தந்துதன்
பொன்னடி யிணைகாட்டி
மெய்ய னாய்வெளி காட்டிமுன் னின்றதோர்
அற்புதம் விளம்பேனே. (௧)

**568.** ஏய்ந்த மாமல ரிட்டுமுட் டாததோர்
இயல்பொடும் வணங்காதே
சாந்த மார்முலைத் தையனல் லாரொடும்
தலைதடு மாறிப்
போந்தி யான்றுயர் புகாவணம் அருள்செய்து
பொற்கழ லிணைகாட்டி
வேந்த னாய்வெளி யேயென்முன் நின்றதோர்
அற்புதம் விளம்பேனே. (௨)

**569.** நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து
நானென தெனுமாயக்
கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக்
கழறியே திரிவேனைப்
பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய
அரும்பொருள் அடியேனை
அடித்த டித்துவக் காரமுன் தீற்றிய
அற்புதம் அறியேனே. (௩)

570. பொருந்து மிப்பிறப் பிறப்பினைப் நினையாது
பொய்களே புகன்றுபோய்க்
கருங்கு ழலினார் கண்களா லேறுண்டு
கலங்கியே கிடப்பேனைத்
திருந்து சேவடிச் சிலம்பவை சிலம்பிடத்
திருவொடும் அகலாதே
அருந்து ணைவனா யாண்டுகொண்
டருளிய அற்புதம் அறியேனே. (௪)

571. மாடுஞ் சுற்றமும் மற்றுள போகமும்
மங்கையர் தம்மோடும்
கூடி யங்குள குணங்களா லேறுண்டு
குலாவியே திரிவேனை
வீடு தந்தென்றன் வெந்தொழில் வீட்டிட
மென்மலர்க் கழல்காட்டி
ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோர்
அற்புதம் அறியேனே. (௫)

572. வணங்கு மிப்பிறப் பிறப்பிவை நினையாது
மங்கையர் தம்மோடும்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்திநான்
பித்தனாய்த் திரிவேனைக்
குணங்க ளுங்குறி களுமிலாக் குணக்கடல்
கோமளத் தொடுங்கூடி
அணைந்து வந்தெனை யாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. (௬)

573. இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான்
இயல்பொடஞ் செழுத்தோதித்
தப்பி லாதுபொற் கழல்களுக் கிடாதுநான்
தடமுலை யார்தங்கள்
மைப்பு லாங்கண்ணால் ஏறுண்டு கிடப்பேனை
மலரடி யிணைகாட்டி
அப்பன் என்னைவந் தாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. (௭)

574. ஊசலாட்டுமிவ் வுடலுயி ராயின
இருவினை யறுத்தென்னை
ஓசை யாலுணர் வார்க்குணர் வரியவன்
உணர்வுதந் தொளியாக்கிப்
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன்
பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய
அற்புதம் அறியேனே. (அ)

575. பொச்சை யானவிப் பிறவியிற் கிடந்துநான்
புழுத்தலை நாய்போல
இச்சை யாயின ஏழையர்க் கேசெய்தங்
கிணங்கியே திரிவேனை
இச்ச கத்தரி யயனுமெட் டாததன்
விரைமலர்க் கழல்காட்டி
அச்சன் என்னையும் ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. (௯)

576. செறியும் இப்பிறப் பிறப்பிவை நினையாது
செறிகுழ லார்செய்யும்
கிறியும் கீழ்மையுங் கெண்டையங் கண்களும்
உன்னியே கிடப்பேனை
இறைவன் எம்பிரான் எல்லையில் லாததன்
இணைமலர்க் கழல்காட்டி
அறிவு தந்தெனை யாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே (௧௦)

[திருச்சிற்றம்பலம்]



## சஉ. சென்னிப்பத்து

சிவவிளைவு

[திருப்பெருந்துறை]

### ஆசிரிய விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

577. தேவ தேவன்மெய்ச் சேவகன்
தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலும் அறியொணு
முதலாய அனந்த மூர்த்தியான்
யாவ ராயினும் அன்பரன்றி
அறியொ ணுமலர்ச் சோதியான்
தூய மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னிச் சுடருமே. (க)

578. அட்ட மூர்த்தி யழகனின்னமு
தாய ஆனந்த வெள்ளத்தான்
சிட்டன் மெய்ச்சிவ லோகநாயகன்
தென்பெ ருந்துறைச் சேவகன்
மட்டு வார்குழல் மங்கையாளையோர்
பாகம் வைத்த அழகன்றன்
வட்ட மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. (உ)

579. நங்கை மீரெனை நோக்குமின்நங்கள்
நாதன் நம்பணி கொண்டவன்
தெங்கு சோலைகள் சூழ்பெருந்துறை
மேய சேவகன் நாயகன்
மங்கை மார்கையில் வளையுங்கொண்டெம்
உயிருங் கொண்டெம் பணிகொள்வான்
பொங்கு மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னிப் பொலியுமே. (௩)

580. பத்தர் சூழப் பராபரன்
பாரில் வந்துபார்ப் பானெனச்
சித்தர் சூழச் சிவபிரான்
தில்லை மூதூர் நடஞ்செய்வான்
எத்த னாகிவந் தில்புகுந்தெமை
ஆளுங் கொண்டெம் பணிகொள்வான்
வைத்த மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. (ச)

581. மாய வாழ்க்கையை மெய்யென்றெண்ணி
மதித்தி டாவகை நல்கினான்
வேய தோளுமை பங்கனெங்கள்
திருப்பெ ருந்துறை மேவினான்
காயத் துள்ளமு தூறவூறநீ
கண்டு கொள்ளென்று காட்டிய
சேய மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. (ரு)

582. சித்த மேபுகுந் தெம்மையாட்கொண்டு
தீவி னைகெடுத் துய்யலாம்
பத்தி தந்துதன் பொற்கழற்கணே
பன்மலர் கொய்து சேர்த்தலும்
முத்தி தந்திந்த மூவுலகுக்கும்
அப்பு றத்தெமை வைத்திடும்
அத்தன் மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. (சா)

583. பிறவி யென்னுமிக் கடலைநீந்தத்தன்
பேர ருள்தந் தருளினான்
அறவை யென்றடி யார்கடங்கள்
அருட்கு ழாம்புக விட்டுநல்
உறவு செய்தெனை யுய்யக்கொண்ட
பிரான்றன் உண்மைப் பெருக்கமாம்
திறமை காட்டிய சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. (எ)

584. புழுவி னாற்பொதிந் திடுகுரம்பையிற்
பொய்த னையொழி வித்திடும்
எழில்கொள் சோதியெம் ஈசனெம்பிரான்
என்னு டையப்ப னென்றென்று
தொழுத கையின ராகித்தூய்மலர்க்
கண்க ணீர்மல்குந் தொண்டர்க்கு
வழுவி லாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. (அ)

585. வம்ப னாய்த்திரி வேனைவாவென்று
வல்வி னைப்பகை மாய்த்திடும்
உம்ப ரானுல கூடறுத்தப்
புறத்த னாய்நின்ற வெம்பிரான்
அன்ப ரானவர்க் கருளிமெய்யடி
யார்கட் கின்பந் தழைத்திடும்
செம்பொன் மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. (கூ)

586. முத்த னைமுதற் சோதியைமுக்க
ணப்ப னைமுதல் வித்தினைச்
சித்த னைச்சிவ லோகனைத்திரு
நாமம் பாடித் திரிதரும்
பத்தர் காளிங்கே வம்மினீருங்கள்
பாசந் தீரப் பணிமினோ
சித்த மார்தருஞ் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. (கo)

[திருச்சிற்றம்பலம்]



## ௪௩. திருவார்த்தை

அறிவித்தன்புறுதல்

[திருப்பெருந்துறை]

ஆசிரிய விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

587. மாதிவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோதில் பரங்கரு ணையடியார்
குலாவுநீதி குணமாக நல்கும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்
தாதிப் பிரமம் வெளிப்படுத்த
அருளறி வாரெம் பிரானாவாரே. (க)

588. மாலயன் வானவர் கோனும்வந்து
வணங்க அவர்க்கருள் செய்தஈசன்
ஞால மதனிடை வந்திழிந்து
நன்னெறி காட்டி நலந்திகழும்
கோல மணியணி மாடநீடு
குலாவும் இடைவை மடநல்லாட்குச்
சீல மிகக்கரு ணையளிக்குந்
திறமறி வாரெம் பிரானாவாரே. (உ)

589. அணிமுடி யாதி யமரர்கோமான்
ஆனந்தக் கூத்தன் அறுசமயம்
பணிவகை செய்து படவதேறிப்
பாரொடு விண்ணும் பரவியேத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறையெம்
பேரரு ளாளன் பெண்பாலுகந்து
மணிவலை கொண்டுவான் மீன்விசிறும்
வகையறி வாரெம் பிரானாவாரே. (௩)

590. வேடுரு வாகி மகேந்திரத்து
மிகுகுறை வானவர் வந்துதன்னைத்
தேட இருந்த சிவபெருமான்
சிந்தனை செய்தடி யோங்களுய்ய
ஆட லமர்ந்த பரிமாவேறி
ஐயன் பெருந்துறை யாதியந்நாள்
ஏடர்க ளையெங்கும் ஆண்டுகொண்ட
இயல்பறி வாரெம் பிரானுவாரே. ( )

591. வந்திமை யோர்கள் வணங்கியேத்த
மாக்கரு ணைக்கட லாயடியார்
பந்தனை விண்டற நல்குமெங்கள்
பரமன் பெருந்துறை யாதியந்நாள்
உந்து திரைக்கட லைக்கடந்தன்
றோங்கு மதிலிலங் கையதனில்
பந்தணை மெல்விர லாட்கருளும்
பரிசறி வாரெம் பிரானுவாரே. (ரு)

592. வேவத் திரிபுரஞ் செற்றவில்லி
வேடுவ னாய்க்கடி நாய்கள்சூழ
ஏவற் செயல்செய்யுந் தேவர்முன்னே
எம்பெரு மான்றான் இயங்குகாட்டில்
ஏவுண்ட பன்றிக்கி ரங்கியீசன்
எந்தை பெருந்துறை யாதியன்று
கேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த
கிடப்பறி வாரெம் பிரானுவாரே. (சா)

593. நாத முடையதோர் நற்கமலப்
போதினில் நண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவியேத்த
வொளிவளர் சோதியெம் ஈசன்மன்னும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்
பேதங் கெடுத்தருள் செய்பெருமை
அறியவல் லாரெம் பிரானுவாரே. (எ)

594. பூவலர் கொன்றையம் மாலைமார்பன்
போருகிர் வன்புலி கொன்றவீரன்
மாதுநல் லாளுமை மங்கைபங்கன்
வண்பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன்
ஏதில் பெரும்புகழ் எங்களீசன்
இருங்கடல் வாணற்குத் தீயிற்றோன்றும்
ஓவிய மங்கையர் தோள்புணரும்
உருவறி வாரெம் பிரானாவாரே. (அ)

595. தூவெள்ளை நீறணி யெம்பெருமான்
சோதி மகேந்திர நாதன்வந்து
தேவர் தொழும்பதம் வைத்தஈசன்
தென்னன் பெருந்துறை யாளியன்று
காதல் பெருகக் கருணைகாட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்துருகக்
கேதங் கெடுத்தென்னை யாண்டருளுங்
கிடப்பறி வாரெம் பிரானாவாரே. (கூ)

596. அங்கணன் எங்கள் அமரர்பெம்மான்
அடியார்க் கமுதன் அவனிவந்த
எங்கள் பிரானிரும் பாசந்தீர
இகபரம் ஆயதோர் இன்பமெய்தச்
சங்கங் கவர்ந்துவண் சாத்தினோடும்
சதுரன் பெருந்துறை யாளியன்று
மங்கையர் மல்கு மதுரைசேர்ந்த
வகையறி வாரெம் பிரானாவாரே. (க0)

[திருச்சிற்றம்பலம்]



## சச. எண்ணப்பதிகம்

ஒழியாவின்பத்துவகை

[திருத்தில்லை]

---

ஆசிரிய விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

597. பாருரு வாய பிறப்பற வேண்டும்
பத்திமை யும்பெற வேண்டும்
சீருரு வாய சிவபெரு மானே
செங்கமல மலர்போல்
ஆருரு வாயவென் னாரமு தேயுன்
அடியவர் தொகைநடுவே
ஓருரு வாயநின் திருவருள் காட்டி
என்னையும் உய்யக்கொண் டருளே (க)

598. உரியே னல்லே னுனக்கடிமை
யுன்னைப் பிரிந்திங் கொருபொழுதும்
தரியே னாயே னின்னதென்
றறியேன் சங்கரா கருணையினால்
பெரியோ னொருவன் கண்டுகொ ளென்றுன்
பெய்கழ லடிகாட்டிப்
பிரியே னென்றென் றருளிய வருளும்
பொய்யோ வெங்கள் பெருமானே. (உ)

599. என்பே யுருக நின்னரு ளளித்துன்
இணைமல ரடிகாட்டி
முன்பே யென்னை யாண்டுகொண்ட
முனிவா முனிவர் முழுமுதலே
இன்பே யருளி யெனையுருக்கி
உயிருண் கின்ற எம்மானே
நண்பே யருளா யென்னுயிர்
நாதா நின்னருள் நாணுமே. (ந)

600. பத்தில னேனும் பணிந்தில னேனுமுன்
உயர்ந்தபைங் கழல்காணப்
பித்தில னேனும் பிதற்றில னேனும்
பிறப்பறுப் பாயெம் பெருமானே
முத்தனை யானே மணியனை யானே
முதல்வனே முறையோவென்
றெத்தனை யானும் யான்றொடர்ந் துன்னை
இனிப்பிரிந் தாற்றேனே. (ச)

601. காணும தொழிந்தேன் நின்றிருப் பாதம்
கண்டுகண் களிகூரப்
பேணும தொழிந்தேன் பிதற்றும தொழிந்தேன்
பின்னையெம் பெருமானே
தாணுவே யழிந்தேன் நின்னினைந் துருகுந்
தன்மையென் புன்மைகளாற்
காணும தொழிந்தேன் நீயினி வரினுங்
காணவு நாணுவனே. (ரு)

602. பாற்றிரு நீற்றெம் பரமனைப்
பரங்கரு ணையோடு மெதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க் கருட்டுறை யளிக்குஞ்
சோதியை நீதியிலேன்
போற்றியென் னமுதே யெனநினைந் தேத்திப்
புகழ்ந்தழைத் தலறியென்னுள்ளே
ஆற்றுவ னாக வுடையவ னேயெனை
ஆவவென் றருளாயே. (சா)

[திருச்சிற்றம்பலம்



## ௪௫. யாத்திரைப்பத்து

அனுபவாதீதமுரைத்தல்

[திருத்தில்லை]

ஆசிரிய விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

603. பூவார் சென்னி மன்னனெம்
புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவா துள்ளங் கலந்துணர்வாய்
உருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆவா வென்னப் பட்டன்பாய்
ஆட்பட் டீர்வந் தொருப்படுமின்
போவோங் காலம் வந்ததுகாண்
பொய்விட் டுடையான் கழல்புகவே. (௧)

604. புகவே வேண்டா புலன்களினீர்
புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கவெல்லாம்
வேண்டா போக விடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து
நாயே யனைய நமையாண்ட
தகவே யுடையான் தனைச்சாரத்
தளரா திருப்பார் தாந்தாமே. (௨)

605. தாமே தமக்குச் சுற்றமும்
தாமே தமக்கு விதிவகையும்
யாமா ரெமதார் பாசமார்
என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப்
புயங்க னாள்வான் பொன்னடிக்கே. (௩)

606. அடியா ரானீர் எல்லீரும்
அகல விடுமின் விளையாட்டைக்
கடிசே ரடியே வந்தடைந்து
கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பைச்
செடிசே ருடலைச் செலநீக்கிச்
சிவலோ கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன்
பூவார் கழற்கே புகவிடுமே. (ச)

607. விடுமின் வெகுளி வேட்கைநோய்
மிகவோர் காலம் இனியில்லை
உடையா னடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ
டுடன்போ வதற்கே யொருப்படுமின்
அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள்
அணியார் கதவ தடையாமே
புடைபட் டுருகிப் போற்றுவோம்
புயங்க னாள்வான் புகழ்களையே. (ரு)

608. புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்திவைத்திட்
டிகழ்மின் எல்லா அல்லலையும்
இனியோ ரிடையூ றடையாமே
திகழுஞ் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்றாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே. (சு)

609. நிற்பார் நிற்கநில் லாவுலகில்
நில்லோம் இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாந் திருமேனிப்
புயங்க னாள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாந் தாழாதே
நிற்கும் பரிசே யொருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தால்
பெறுதற் கரியன் பெருமானே. (எ)

610. பெருமான் பேரா னந்தத்துப்
பிரியா திருக்கப் பெற்றீர்காள்
அருமா லுற்றுப் பின்னைநீர்
அம்மா அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவம்
திறந்த போதே சிவபுரத்துத்
திருமா லறியாத் திருப்புயங்கன்
திருத்தாள் சென்று சேர்வோமே. (அ)

611. சேரக் கருதிச் சிந்தனையைத்
திருந்த வைத்துச் சிந்திமின்
போரிற் பொலியும் வேற்கண்ணாள்
பங்கன் புயங்கன் அருளமுதம்
ஆரப் பருகி ஆராத
ஆர்வங் கூர அழுந்துவீர்
போரப் புரிமின் சிவன்கழற்கே
பொய்யிற் கிடந்து புரளாதே. (கூ)

612. புரள்வார் தொழுவார் புகழ்வாராய்
இன்றே வந்தா ளாகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார்
மதியுட் கலங்கி மயங்குவீர்
தெருள்வீ ராகில் இதுசெய்ம்மின்
சிவலோ கக்கோன் திருப்புயங்கன்
அருளார் பெறுவார் அகலிடத்தே
அந்தோ அந்தோ அந்தோவே. (கய)

[திருச்சிற்றம்பலம்]



## சகா. திருப்படையெழுச்சி

பிரபஞ்சப்போர்

[திருத்தில்லை]

கலி விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

613. ஞானவாள் ஏந்துமையர் நாதப் பறையறைமின்
மானமா ஏறுமையர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவசம் அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம் மாயப்படை வாராமே. (க)

614. தொண்டர்காள் தூசிசெல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்
ஒண்டிறல் யோகிகளே பேரணி யுந்தீர்கள்
திண்டிறற் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்
அண்டர்நா டாள்வோம்நாம் அல்லற்படை வாராமே.(உ)

[திருச்சிற்றம்பலம்]



## சஎ. திருவெண்பா

அணைந்தோர்தன்மை

[திருப்பெருந்துறை]

நேரிசை வெண்பா

[திருச்சிற்றம்பலம்]

615. வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகா தென்செய்கேன் — செய்ய
திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ
மருவா திருந்தேன் மனத்து. க)

616. ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே யென்செய்கேன் — தீர்ப்பரிய
ஆனந்த மாலேற்றும் அத்தன் பெருந்துறையான்
தானென்பார் ஆரொருவர் தாழ்ந்து. (௨)

617. செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே
உய்யும் வகையின் உயிர்ப்பறியேன் — வையத்
திருந்துறையுள் வேன்மடுத்தென் சிந்தனைக்கே கோத்தான்
பெருந்துறையில் மேய பிரான். (௩)

618. முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் — தென்னன்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும் மருந்து. (௪)

619. அறையோ அறிவார்க் கனைத்துலகும் ஈன்ற
மறையோனும் மாலுமால் கொள்ளும் — இறையோன்
பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா
திருந்துறையும் என்னெஞ்சத் தின்று. (௫)

620. பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
மத்தமே யாக்கும்வந் தென்மனத்தை — அத்தன்
பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்
மருந்திறவாப் பேரின்பம் வந்து. (௬)

621. வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா வமுதாய் அமைந்தன்றே — சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. (௭)

622. யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்குங் கீழாம் அடியேனை — யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை. (௮)

623. மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவரும் காணாச் சிவபெருமான் — மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே யின்பம் மிகும். (௯)

624. இருந்தென்னை யாண்டான் இணையடியே சிந்தித்
திருந்திரந்து கொள்நெஞ்சே யெல்லாம் — தருங்காண்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத்தே வந்து. (௧௦)

625. இன்பம் பெருக்கி இருளகற்றி யெஞ்ஞான்றும்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய் — அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து. (௧௧)

[திருச்சிற்றம்பலம்]



## சஅ. பண்டாயநான்மறை

அநுபவத்துக்கையமின்மை யுரைத்தல்

[திருப்பெருந்துறை]



நேரிசை வெண்பா

[திருச்சிற்றம்பலம்]

626. பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனும்
கண்டாரும் இல்லைக் கடையேனைத் — தொண்டாகக்
கொண்டருளுங் கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே
உண்டாமோ கைம்மா றுரை. (௧)

627. உள்ள மலமூன்றும் மாய உகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த — வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவுங் கெடும்பிறவிக் காடு. (உ)

628. காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிப்பாகன் நம்வினையை — வீட்டி
அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்
மருளும் கெடநெஞ்சே வாழ்த்து. (ங)

629. வாழ்ந்தார்க ளாவாரும் வல்வினையை மாய்ப்பாரும்
தாழ்ந்துலகம் ஏத்தத் தகுவாரும் — சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி யேத்துந் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி யேத்தும் நமர். (ச)

630. நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி யெழுகோ கழிக்கரசைப் — பண்ணின்
மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண். (ரு)

631. காணுங் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக் — காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு. (சு)

632. பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசில் மணியின் மணிவார்த்தை — பேசிப்
பெருந்துறையே யென்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி யென்மனத்தே வைத்து. (எ)

[திருச்சிற்றம்பலம்]



## சகூ. திருப்படையாட்சி

சீவோபாதியொழிதல்

[திருத்தில்லை]

---

ஆசிரிய விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

**633.** கண்க ளிரண்டும் அவன்கழல் கண்டு
களிப்பன ஆகாதே
காரிகை யார்கடம் வாழ்விலென் வாழ்வு
கடைப்படு மாகாதே

மண்களில் வந்து பிறந்திடு மாறு
மறந்திடு மாகாதே
மாலறி யாமலர்ப் பாதம் இரண்டும்
வணங்குது மாகாதே

பண்களி கூர்தரு பாடலொ டாடல்
பயின்றிடு மாகாதே
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள்
பாடுது மாகாதே

விண்களி கூர்வதோர் வேதகம் வந்து
வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து
வெளிப்படு மாயிடிலே. (க)

**634.** ஒன்றினொ டொன்றுமோர் ஐந்தினொ டைந்தும்
உயிர்ப்பது மாகாதே
உன்னடி யாரடி யாரடி யோமென
உய்ந்தன வாகாதே

கன்றை நினைந்தெழு தாயென வந்த
 கணக்கது வாகாதே
காரண மாகும நாதி குணங்கள்
 கருத்துறு மாகாதே

நன்றிது தீதென வந்த நடுக்கம்
 நடந்தன வாகாதே
நாமுமே லாமடி யாருட னேசெல
 நண்ணுது மாகாதே

என்றுமெ னன்பு நிறைந்த பராவமு
 தெய்துவ தாகாதே
ஏறுடை யானெனை யாளுடை நாயகன்
 என்னுள் புகுந்திடிலே. (உ)

635. பந்த விகார குணங்கள் பறிந்து
 மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த
 பராவமு தாகாதே

அந்தமி லாத அகண்டமும் நம்முள்
 அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர்
 அண்ணுவ தாகாதே

செந்துவர் வாய்மட வாரிட ரானவை
 சிந்திடு மாகாதே
சேலன கண்க ளவன்றிரு மேனி
 திளைப்பன வாகாதே

இந்திர ஞால இடர்ப்பிற வித்துயர்
 ஏகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய ஈசன்
 எதிர்ப்படு மாயிடிலே. (௩)

636. என்னணி யார்முலை ஆகம் அளைந்துடன்
இன்புறு மாகாதே
எல்லையின் மாக்கரு ணைக்கட லின்றினி
தாடுது மாகாதே

நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற
நண்ணுவ தாகாதே
நாதன் அணித்திரு நீற்றினை நித்தலும்
நண்ணுவ தாகாதே

மன்னிய அன்பரில் என்பணி முந்துற
வைகுவ தாகாதே
மாமறை யும்மறி யாமலர்ப் பாதம்
வணங்குது மாகாதே

இன்னியல் செங்கழு நீர்மலர் என்றலை
எய்துவ தாகாதே
என்னையு டைப்பெரு மானருள் ஈசன்
எழுந்தரு ளப்பெறிலே. (௪)

637. மண்ணினின் மாயை மதித்து வகுத்த
மயக்கறு மாகாதே
வானவ ரும்மறி யாமலர்ப் பாதம்
வணங்குது மாகாதே

கண்ணிலி காலம் அனைத்தினும் வந்த
கலக்கறு மாகாதே
காதல்செ யும்மடி யார்மனம் இன்று
களித்திடு மாகாதே

பெண்ணலி யாணென நாமென வந்த
பிணக்கறு மாகாதே
பேரறி யாத அனேக பவங்கள்
பிழைத்தன வாகாதே

எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை
எய்துவ தாகாதே
என்னையு டைப்பெரு மானருள் ஈசன்
எழுந்தரு ளப்பெறிலே. (ரு)

638. பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறு
பொலிந்திடு மாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து
பொழிந்திடு மாகாதே

மின்னியல் நுண்ணிடை யார்கள் கருத்து
வெளிப்படு மாகாதே
வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம்
மிகுத்திடு மாகாதே

தன்னடி யாரடி யென்றலை மீது
தழைப்பன வாகாதே
தானடி யோமுட னேயுய வந்து
தலைப்படு மாகாதே

இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக
இயம்பிடு மாகாதே
என்னைமு ஞளுடை யீசனென் அத்தன்
எழுந்தரு ளப்பெறிலே. (சா)

639. சொல்லிய லாதெழு தூமணி யோசை
சுவைதரு மாகாதே
துண்ணென என்னுளம் மன்னிய சோதி
தொடர்ந்தெழு மாகாதே

பல்லியல் பாய பரப்பற வந்த
பராபர மாகாதே
பண்டறி யாத பரானுப வங்கள்
பரந்தெழு மாகாதே

வில்லியல் நன்னுத லார்மயல் இன்று
விளைந்திடு மாகாதே
விண்ணவ ரும்மறி யாத விழுப்பொருள்
இப்பொரு ளாகாதே

எல்லையி லாதன எண்குண மானவை
எய்திடு மாகாதே
இந்துசி காமணி யெங்களை யாள
எழுந்தரு ளப்பெறிலே. (எ)

640. சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை
தழைப்பன வாகாதே
சாதிவி டாத குணங்கள்நம் மோடு
சலித்திடு மாகாதே

அங்கிது நன்றிது நன்றெனும் மாயை
அடங்கிடு மாகாதே
ஆசையெ லாம்அடி யாரடி யோமெனும்
அத்தனை யாகாதே

செங்கய லொண்கண்ம டந்தையர் சிந்தை
திளைப்பன வாகாதே
சீரடி யார்கள் சிவானுப வங்கள்
தெரிந்திடு மாகாதே

எங்கு நிறைந்தமு தூறுப ரஞ்சுடர்
எய்துவ தாகாதே
ஈறறி யாமறை யோனெனை யாள
எழுந்தரு ளப்பெறிலே. (அ)

[திருச்சிற்றம்பலம்]



## ௫௦. ஆனந்தமாலை

சிவானுபவவிருப்பம்

[திருத்தில்லை]

ஆசிரிய விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

641. மின்னே ரனைய பூங்கழல்கள்
அடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனைய மலர்கொண்டு
போற்றா நின்றார் அமரரெல்லாம்
கன்னே ரனைய மனக்கடையாய்க்
கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த
என்னே ரனையேன் இனியுன்னைக்
கூடும் வண்ணம் இயம்பாயே. (௧)

642. என்னா லறியாப் பதந்தந்தாய்
யான தறியா தேகெட்டேன்
உன்னா லொன்றுங் குறைவில்லை
உடையா யடிமைக் காரென்பேன்
பன்னா ளுன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடிய ரொடுங்கூடா
தென்னா யகமே பிற்பட்டிங்
கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே. (௨)

643. சீல மின்றி நோன்பின்றிச்
செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச்
சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி
வாரா வுலக நெறியேறக்
கோலங் காட்டி யாண்டானைக்
கொடியேன் என்றோ கூடுவதே. (௩)

644. கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடி லாதாய் பழிகொண்டாய்
படுவேன் படுவ தெல்லாநான்
பட்டாற் பின்னைப் பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே
காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றோ எங்கள் நாயகமே. (ச)

645. தாயாய் முலையைத் தருவானே
தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ
நம்பி யினித்தான் நல்குதியே
தாயே யென்றுன் தாளடைந்தேன்
தயா நீயென்பால் இல்லையே
நாயேன் அடிமை யுடனாக
ஆண்டாய் நான்றான் வேண்டாவோ. (ரு)

646. கோவே யருள வேண்டாவோ
கொடியேன் கெடவே யமையுமே
ஆவா என்னா விடிலென்னை
அஞ்சேல் என்பார் ஆரோதான்
சாவா ரெல்லாம் என்னளவோ
தக்க வாறன் றென்னாரோ
தேவே தில்லை நடமாடீ
திகைத்தேன் இனித்தான் தேற்றாயே. (சா)

647. நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞால மெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்ச தேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே அவநாசி
யப்பா பாண்டி வெள்ளமே
தெரிய வரிய பரஞ்சோதீ
செய்வ தொன்றும் அறியேனே. (எ)

[திருச்சிற்றம்பலம்]

## ௫௧. அச்சோப்பதிகம்

அநுபவவழியறியாமை

[திருத்தில்லை]

---

கலி விருத்தம்

[திருச்சிற்றம்பலம்]

**648.** முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.(௧)

**649.** நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத கூத்தன்றன் கூத்தையெனக்
கறியும்வண்ணம் அருளியவா றார்பெறுவார் அச்சோவே.()

**650.** பொய்யெல்லாம் மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. (௩)

**651.** மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி யெனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீ றணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ணம்
அண்ணலெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.()

**652.** பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர நிற்பேனுன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேனான் உடையானே யடியேனை வருகவென்
றஞ்சேலென் றருளியவா றார்பெறுவார் அச்சோவே. (௫)

653. வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழற் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு பரிசறவென் றுரிசுமறுத்
தந்தமெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. (௬)

654. தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை
ஐயனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. (௭)

655. சாதல்பிறப் பென்னுந் தடஞ்சுழியில் தடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார் கலவியிலே விழுவேனை
மாதொருகூ றுடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. (௮)

656. செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்றான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. (௯)

[திருச்சிற்றம்பலம்]



# திருக்கோவையார்

என்னும்

# திருச்சிற்றம்பலக்கோவையார்

உ

திருச்சிற்றம்பலம்

# திருக்கோவையார்

## விநாயக வணக்கம்

எண்ணிறைந்த தில்லை யெழுகோ புரந்திகழக்
கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே — நண்ணியசீர்த்
தேனூறு செஞ்சொற் றிருக்கோவை யென்கின்ற
நானூறும் என்மனத்தே நல்கு.

## நூற்சிறப்பு

ஆரணங் காணென்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்பர்
ஏரணங் காணென்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே.

---

இவ்விரண்டு செய்யுளும் பிற்காலத்து ஆன்றோர் இயற்றியவை.

திருச்சிற்றம்பலம்




## க. இயற்கைப்புணர்ச்சி :

### 1. காட்சி

மதிவாணுதல் வளர்வஞ்சியைக்
கதிர்வேலவன் கண்ணுற்றது.

திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே. (க)

### 2. ஐயம்

தெரியவரியதோர் தெய்வமென்ன
அருவரைநாடன் ஐயுற்றது.

போதோ விசும்போ புனலோ பணிக ளதுபதியோ
யாதோ அறிகுவ தேது மரிதி யமன்விடுத்த
தூதோ அனங்கன் றுணையோ இணையிலி தொல்லைத்தில்லை
மாதோ மடமயி லோவென நின்றவர் வாழ்பதியே. (உ)

### 3. தெளிதல்

அணங்கல்லளென் றயில்வேலவன்
குணங்களைநோக்கிக் குறித்துரைத்தது.

பாயும் விடையரன் தில்லையன் னாள்படைக் கண்ணிமைக்கும்
தோயும் நிலத்தடி தூமலர் வாடும் துயரமெய்தி
ஆயும் மனனே யணங்கல்லள் அம்மா முலைசுமந்து
தேயும் மருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே. (௩

### 4. நயப்பு

வண்டமர் புரிகுழல் ஒண்டொடி மடந்தையை
நயந்த அண்ணல் வியந்துள்ளியது.

அகல்கின்ற அல்குற் றடமது கொங்கை யவையவநீ
புகல்கின்ற தென்னைநெஞ் சுண்டே யிடையடை யார்புரங்கள்
இகல்குன்ற வில்லிற்செற் றோன்றில்லை யீசனெம் மானெதிர்ந்த
பகல்குன்றப் பல்லுகுத் தோன்பழ னம்மன்ன பல்வளைக்கே. (௪

### 5. உட்கோள்

இறைதிருக்கரத்து மறிமானோக்கி
உள்ளக்கருத்து வள்ளலறிந்தது.

அணியும் அமிழ்துமென் ஆவியும் ஆயவன் தில்லைச்சிந்தா
மணியும்ப ராரறி யாமறை யோனடி வாழ்த்தலரின்
பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழுமின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே. (௫)

### 6. தெய்வத்தைமகிழ்தல்

அன்னமென்னடை அரிவையைத்தந்த
மன்னிருந்தெய்வத்தை மகிழ்ந்துரைத்தது.

வளைபயில் கீழ்கட னின்றிட மேல்கடல் வானுகத்தின்
துளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல் லோன்கயிலைக்
கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த
விளைவையல் லால்விய வேனய வேன்றெய்வ மிக்கனவே. (௬)

## 7. புணர்ச்சிதுணிதல்

கோவ்வைச் செவ்வாய்க் கோடியிடைப் பேதையைத்
தெய்வப்புணர்ச்சி செம்மல்துணிந்தது.

ஏழுடை யான்பொழில் எட்டுடை யான்புயம் என்னைமுன்னாள்
ஊழுடை யான்புலி யூரன்ன பொன்னிவ் வுயர்பொழில்வாய்ச்
சூழுடை யாயத்தை நீக்கும் விதிதுணை யாமனனே
யாழுடை யார்மணங் காணணங் காய்வந் தகப்பட்டதே. (௭)

## 8. கலவியுரைத்தல்

கோலவேலவன் கோடியிடையோடு
கலவியின்பங் கட்டுரைத்தது.

சொற்பா லமுதிவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நானிவ ளாம்பகுதிப்
பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்வெற்பில்
கற்பா வியவரை வாய்க்கடி தோட்ட களவகத்தே. (௮)

## 9. இருவயினொத்தல்

ஆரா வின்பத் தன்புமீதூர
வாரார்முலையை மகிழ்ந்துரைத்தது.

உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள்
புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே. (௯)

## 10. கிளவிவேட்டல்

அன்னமன்னவள் அவயவங்கண்டு
மென்மொழிகேட்க விருப்புற்றது.

அளவியை யார்க்கும் அறிவரி யோன்றில்லை யம்பலம்போல்
வளவிய வான்கொங்கை வாட்டடங் கண்ணுதல் மாமதியின்
பிளவியன் மின்னிடை பேரமை தோளிது பெற்றியென்றால்
கிளவியை யென்னோ இனிக்கிள்ளை யார்வாயிற் கேட்கின்றதே. (௧௦)

## 11. நலம்புனைந்துரைத்தல்

பொங்கிழையைப் புனைநலம்புகழ்ந்
தங்கதிர்வேலோன் அயர்வுநீங்கியது.

கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூடுரு கக்குனிக்கும்
பாம்பலங் காரப் பரன்றில்லை யம்பலம் பாடலரின்
தேம்பலஞ் சிற்றிடை யீங்கிவள் தீங்கனி வாய்கமழும்
ஆம்பலம் போதுள வோவளி காணும் அகன்பணையே. (கக)

## 12. பிரிவுணர்த்தல்

பணிவளரல்குலைப் பயிர்ப்புறுத்திப்
பிணிமலர்த்தாரோன் பிரிவுணர்த்தியது.

சிந்தா மணிதெண் கடலமிர் தந்தில்லை யானருளால்
வந்தா லிகழப் படுமே மடமான் விழிமயிலே
அந்தா மரையன்ன மேகின்னை யானகன் றுற்றுவனோ
சிந்தா குலமுற்றென் னைவென்னை வாட்டந் திருத்துவதே. ()

## 13. பருவரலறிதல்

பிரிவுணர்ந்த பெண்கொடிதன்
பருவரலின் பரிசுநினைந்தது.

கோங்கிற் பொலியரும் பேய்கொங்கை பங்கன் குறுகலரூர்
தீங்கிற் புகச்செற்ற கொற்றவன் சிற்றம் பலமனையாள்
நீங்கிற் புணர்வரி தென்றோ நெடிதிங்ங னேயிருந்தால்
ஆங்கிற் பழியா மெனவோ அறியேன் அயர்கின்றதே. (கங)

## 14. அருட்குணமுரைத்தல்

கூட்டியதெய்வத் தின்னருட்குணம்
வாட்டமின்மை வள்ளலுரைத்தது.

தேவரிற் பெற்றநம் செல்வக் கடிவடி வார்திருவே
யாவரிற் பெற்றினி யார்சிதைப் பாரிமை யாதமுக்கண்
மூவரிற் பெற்றவர் சிற்றம் பலமணி மொய்பொழில்வாய்ப்
பூவரிற் பெற்ற குழலியென் வாடிப் புலம்புவதே. (கச)

### 15. இடமணித்துக்கூறிவற்புறுத்தல்

மடவரலை வற்புறுத்தி
இடமணித்தென்றவன் இயம்பியது.

வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலயத்
திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே.()

### 16. ஆடிடத்துய்த்தல்

வன்புறையின் வற்புறுத்தி
அன்புறுமொழியை அருககன்றது.

தெளிவளர் வான்சிலை செங்கனி வெண்முத்தந் திங்களின்வாய்த்
தளிவளர் வல்லியன் னாய்முன்னி யாடுபின் யானளவா
ஒளிவளர் தில்லை யொருவன் கயிலை யுகுபெருந்தேன்
துளிவளர் சாரற் கரந்துங்ங னேவந்து தோன்றுவனே. (கசு)

### 17. அருமையறிதல்

சுற்றமுமிடனும் சூழலுநோக்கி
மற்றவளருமை மன்னனறிந்தது.

புணர்ப்போன் நிலனும் விசும்பும் பொருப்புந்தன் பூங்கழலின்
துணர்ப்போதெனக்கணியாக்குந்தொல்லோன்றில்லைச்சூழ்பொழில்வாய்
இணர்ப்போ தணிகுழ லேழைதன் நீர்மையிந் நீர்மையென்றால்
புணர்ப்போ கனவோ பிறிதோ அறியேன் புகுந்ததுவே. (கஎ)

### 18. பாங்கியையறிதல்

கடல்புரையாயத்துக் காதற்றோழியை
மடவரல்காட்ட மன்னனறிந்தது.

உயிரொன் றுளமுமொன் றொன்றே சிறப்பிவட் கென்னொடென்னப்
பயில்கின்ற சென்று செவியுற நீள்படைக் கண்கள்விண்வாய்ச்
செயிரொன்று முப்புரஞ் செற்றவன் தில்லைச்சிற் றம்பலத்துப்
பயில்கின்ற கூத்த னருளென லாகும் பணிமொழிக்கே. (கஅ)

## உ. பாங்கற்கூட்டம் :

### 19. பாங்கனை நினைதல்

எய்துதற்கருமை ஏழையிற்றோன்றப்
பையுளுற்றவன் பாங்கனை நினைந்தது.

பூங்கனை யார்புனற் றென்புலி யூர்புரிந் தம்பலத்துள்
ஆங்கெனை யாண்டுகொண் டாடும்பி ரானடித் தாமரைக்கே
பாங்கனை யானன்ன பண்பனைக் கண்டிப் பரிசுரைத்தால்
ஈங்கெனை யார்தடுப் பார்மடப் பாவையை யெய்துதற்கே. (௧)

### 20. பாங்கன்வினாதல்

கலிகெழுதிரடோள் மெலிவதுகண்ட
இன்னுயிர்ப்பாங்கன் மன்னனை வினாயது.

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்ப லத்துமென் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென்கொ லாம்புகுந் தெய்தியதே.()

### 21. உற்றதுரைத்தல்

மற்றவன் வினவ
உற்ற துரைத்தது.

கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞை குஞ்சரங் கோளிழைக்கும்
பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கப் பணைமுலைக்கே
தேம்பற் றுடியிடை மான்மட நோக்கிதில் லைச்சிவன்றாள்
ஆம்பொற் றடமலர் சூடுமென் ஆற்றல் அகற்றியதே. (௩)

### 22. கழறியுரைத்தல்

வெற்பனைத்தன் மெய்ப்பாங்கன்
கற்பனையிற் கழறியது.

உளமாம் வகைநம்மை யுய்யவந் தாண்டுசென் றும்பருய்யக்
களமாம் விடமமிர் தாக்கிய தில்லைத்தொல் லோன்கயிலை
வளமாம் பொதும்பரின் வஞ்சித்து நின்றொர்வஞ் சிம்மருங்குல்
இளமான் விழித்ததென் றோவின்றெம் மண்ணல் இரங்கியதே.(௪)

**23.** கழற்றெதிர்மறுத்தல்

ஆங்குயிரன்ன பாங்கன்கழற
வளந்தருவெற்பன் உளந்தளர்ந்துரைத்தது.

சேணிற் பொலிசெம்பொன் மாளிகைத் தில்லைச்சிற் றம்பலத்து
மாணிக்கக் கூத்தன் வடவான் கயிலை மயிலைமன் னும்
பூணிற் பொலிகொங்கை ஆவியை ஓவியப் பொற்கொழுந்தைக்
காணிற் கழறலை கண்டிலை மென்றோட் கரும்பினையே. (ரு)

**24.** கவன்றுரைத்தல்

கோவலக்களிற்றண்ணல் குறைநயந்துரைப்பக்
கலக்கஞ்செய்பாங்கன் கவன்றுரைத்தது.

விலங்கலைக் கால்விண்டு மேன்மே லிடவிண்ணு மண்ணுமுந்நீர்க்
கலங்கலைச் சென்றவன் றுங்கலங் காய்கமழ் கொன்றைதுன் றும்
அலங்கலைச் சூழ்ந்தசிற் றம்பலத் தானரு ளில்லவர்போல்
துலங்கலைச் சென்றிதென் னேவள்ள லுள்ளம் துயர்கின்றதே.

**25.** வலியழிவுரைத்தல்

நிறைபொறைதேற்ற நீதியோடேசால்பு
மறியுறுநோக்கிற்கு வாடினேனென்றது.

தலைப்படு சால்பினுக் குந்தள ரேன்சித்தம் பித்தனென்று
மலைத்தறி வாரில்லை யாரையுந் தேற்றுவன் எத்துணையும்
கலைச்சிறு திங்கள் மிலைத்தசிற் றம்பல வன்கயிலை
மலைச்சிறு மான்விழி யாலழி வுற்று மயங்கினனே. (எ)

**26.** விதியோடுவெறுத்தல்

கல்விமிகுபாங்கன் கழறவேள்கிச்
செல்வமிகுசிலம்பன் தெரிந்துசெப்பியது.

நல்வினை யுந்நயம் தந்தின்று வந்து நடுங்குமின்மேல்
கொல்வினை வல்லன கோங்கரும் பாமென்று பாங்கன்சொல்ல
வில்வினை மேருவில் வைத்தவன் தில்லை தொழாரின்வெள்கித்
தொல்வினை யாற்றுய ரும்மென தாருயிர் துப்புறவே. (அ)

**27.** பாங்கனேர்ந்துரைத்தல்

இன்னுயிர்ப்பாங்கன் ஏழையைச்சுட்டி
நின்னதுதன்மை நினைந்திலையென்றது.

ஆலத்தி னாலமிர் தாக்கிய கோன்றில்லை யம்பலம்போல்
கோலத்தி னாள்பொருட் டாக அமிர்தம் குணங்கெடினும்
காலத்தி னான்மழை மாறினும் மாறாக் கவிகைநின்பொற்
சீலத்தை நீயும் நினையா தொழிவதென் தீவினையே. (௬)

**28.** இயலிடங்கேட்டல்

கழுமலெய்திய காதற்றோழன்
செழுமலநாடனைத் தெரிந்துவினாயது.

நின்னுடை நீர்மையும் நீயுமிவ் வாறு நினைத்தெருட்டும்
என்னுடை நீர்மையி தென்னென்ப தேதில்லை யோர்கொண்முக்கண்
மன்னுடை மால்வரை யோமல ரோவிசும் போசிலம்பா
என்னிடம் யாதியல் நின்னையின் னேசெய்த ஈர்ங்கொடிக்கே. (௧௦)

**29.** இயலிடங்கூறல்

அழுங்கலெய்திய ஆருயிர்ப்பாங்கற்குச்
செழுங்கதிர்வேலோன் தெரிந்துசெப்பியது.

விழியாற் பிணையாம் விளங்கிய லான்மயி லாமிழற்றும்
மொழியாற் கிளியாம் முதுவா னவர்தம் முடித்தொகைகள்
கழியாக் கழற்றில்லைக் கூத்தன் கயிலைமுத் தம்மலைத்தேன்
கொழியாத் திகழும் பொழிற்கெழி லாமெங் குலதெய்வமே.()

**30.** வற்புறுத்தல்

பெயர்ந்துரைத்த பெருவரைநாடனை
வயங்கெழுபுகழோன் வற்புறுத்தியது.

குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங் காக்குங் கருங்கட்செவ்வாய்
மயிலைச் சிலம்பகண் டியான்போய் வருவன்வண் பூங்கொடிகள்
பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறையே.()

**31.** குறிவழிச்சேறல்

அறைகழலண்ணல் அருளினவழியே
நிறையுடைப்பாங்கன் நினைவோடுசேன்றது.

கொடுங்கால் குலவரை யேழேழ் பொழிலெழில் குன்றுமன்றும்
நடுங்கா தவனை நடுங்க நுடங்கு நடுவுடைய
விடங்கா லயிற்கண்ணி மேவுங்கொ லாந்தில்லை யீசன்வெற்பில்
தடங்கார் தருபெரு வான்பொழி னீழலந் தண்புனத்தே.(கரு)

**32.** குறிவழிக்காண்டல்

குளிர்வரைநாடன் குறிவழிச்சென்று
தளிர்புரைமெல்லடித் தையலக்கண்டது.

வடிக்கண் இவைவஞ்சி யஞ்சு மிடையிது வாய்பவளம்
துடிக்கின்ற வாவெற்பன் சொற்பரி சேயான் தொடர்ந்துவிடா
அடிச்சந்த மாமல ரண்ணல்விண் ணோர்வணங் கம்பலம்போல்
படிச்சந் தமுமிது வேயிவ ளேயப் பணிமொழியே. (கச)

**33.** தலைவனைவியந்துரைத்தல்

நயந்தவுருவும் நலனுங்கண்டு
வியந்தவனையே மிகுத்துரைத்தது.

குவளைக் களத்தம் பலவன் குரைகழல் போற்கமலத்
தவளைப் பயங்கர மாகநின் றுண்ட அவயவத்தின்
இவளைக்கண் டிங்குநின் றங்குவந் தத்துணை யும்பகர்ந்த
கவளக் களிற்றண்ண லேதிண்ணி யானிக் கடலிடத்தே. (கரு)

**34.** கண்டமைகூறல்

பிடிமிசைவைத்துப் பேதையதுநிலைமை
அடுதிறலண்ணற் கறியவுரைத்தது.

பணந்தாழ் அரவரைச் சிற்றம் பலவர்பைம் பொற்கயிலைப்
புணர்ந்தாங் ககன்ற பொருகரி யுன்னிப் புனத்தயலே
மணந்தாழ் பொழிற்கண் வடிக்கண் பரப்பி மடப்பிடிவாய்
நிணந்தாழ் சுடரிலை வேலகண் டேனென்று நின்றதுவே.(கசு)

## 35. செவ்விசெப்பல்

அற்புதன்கைவல மற்போலிசிலம்பற்
கவ்வுருக்கண்டவன் செவ்விசெப்பியது.

கயலுள வேகம லத்தலர் மீது கனிபவளத்
தயலுள வேமுத்த மொத்த நிரையர னம்பலத்தின்
இயலுள வேயிணைச் செப்புவெற் பாநின தீர்ங்கொடிமேற்
புயலுள வேமலர் சூழ்ந்திருள் தூங்கிப் புரள்வனவே. (கஎ)

## 36. அவ்விடத்தேகல்

அரிவையதுநிலைமை அறிந்தவனுரைப்ப
எரிகதிர்வேலோன் ஏகியது.

எயிற்குல மூன்றிருந் தீயெய்த எய்தவன் தில்லையொத்துக்
குயிற்குலங் கொண்டுதொண் டைக்கனி வாய்க்குளிர் முத்தநிரைத்
தயிற்குல வேல்கம லத்திற் கிடத்தி அனநடக்கும்
மயிற்குலங் கண்டதுண் டேலது வென்னுடை மன்னுயிரே. ()

## 37. மின்னிடைமெலிதல்

மன்னவனை நினைந்து
மின்னிடை மெலிந்தது.

ஆவியன் னாய்கவ லேலக லேமென் றளித்தொளித்த
ஆவியன் னார்மிக் கவாவின ராய்க்கெழு மற்கழிவுற்
றாவியன் னார்மன்னி யாடிடஞ் சேர்வர்கொல் அம்பலத்தெம்
ஆவியன் னான்பயி லுங்கயி லாயத் தருவரையே. (கஅ)

## 38. பொழில்கண்டுமகிழ்தல்

மணங்கமழ்பொழிலின் வடிவுகண்
டணங்கனைநினைந் தயர்வுநீங்கியது.

காம்பிணை யாற்களி மாமயி லாற்கதிர் மாமணியால்
வாம்பிணை யால்வல்லி யொல்குத லான்மன்னு மம்பலவன்
பாம்பிணை யாக்குழை கொண்டோன் கயிலைப் பயில்புனமும்
தேம்பிணை வார்குழ லாளெனத் தோன்றுமென் சிந்தனைக்கே.

**39.** உயிரெனவியத்தல்

வெறியுறுபொழிலின் வியன்போதும்பரின்
நெறியுறுகுழலி நிலைமைகண்டது.

நேயத்த தாய்நென்ன லென்னைப் புணர்ந்துநெஞ் சந்நெகப்போய்
ஆயத்த தாயமிழ் தாயணங் காயரன் அம்பலம்போல்
தேயத்த தாயென்றன் சிந்தைய தாய்த்தெரி யிற்பெரிதும்
மாயத்த தாகி யிதோவந்து நின்றதென் மன்னுயிரே. (உக)

**40.** தளர்வகன்றுரைத்தல்

பனிமதிநுதலியைப் பைம்பொழிலிடைத்
தனிநிலைகண்டு தளர்வகன்றுரைத்தது.

தாதிவர் போதுகொய் யார்தைய லாரங்கை கூப்பநின்று
சோதி வரிப்பந் தடியார் சுனைப்புன லாடல்செய்யார்
போதிவர் கற்பக நாடுபுல் லென்னத்தம் பொன்னடிப்பாய்
யாதிவர் மாதவம் அம்பலத் தான்மலை யெய்துதற்கே. (உஉ)

**41.** மொழிபெறவருந்தல்

கூடற் கரிதென
வாடி யுரைத்தது.

காவிநின் றேர்தரு கண்டர்வண் டில்லைக்கண் ணார்கமலத்
தேவியென் றேயையஞ் சென்றதன் றேயறி யச்சிறிது
மாவியன் றன்னமென் னோக்கிநின் வாய்திற வாவிடினென்
ஆவியன் றேயமிழ் தேயணங் கேயின் றழிகின்றதே. (உங)

**42.** நாணிக்கண்புதைத்தல்

ஆயிடைத்தனிநின் றுற்றுதழீந்து
வேயுடைத்தோளியோர் மென்கொடிமறைந்தது.

அகலிடந் தாவிய வானோன் அறிந்திறைஞ் சம்பலத்தின்
இகலிடந் தாவிடை யீசற் றொழாரினின் னற்கிடமாய்
உகலிடந் தான்சென் றெனதுயிர் நையா வகையொதுங்கப்
புகலிடந் தாபொழில் வாயெழில் வாய்தரு பூங்கொடியே. (உச)

**43.** கண்புதைக்கவருந்தல்

வேற்றருங்கண்ணிணை மிளிர்வனவன்றுநின்
கூற்றருமேனியே கூற்றெனக்கென்றது.

தாழச்செய் தார்முடி தன்னடிக் கீழ்வைத் தவரைவிண்ணோர்
சூழச்செய் தானம் பலங்கை தொழாரினுள் ளந்துளங்கப்
போழச்செய் யாமல்லை வேற்கண் புதைத்துப்பொன் னேயென்னைநீ
வாழச்செய் தாய்சுற்று முற்றும் புதைநின்னை வாணுதலே. (உரு)

**44.** நாண்விடவருந்தல்

ஆங்ஙனங்கண் டாற்றளாகி
நீங்கினநாணொடு நேரிழைநின்றது.

குருநாண் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை யேத்தலர்போல்
வருநாள் பிறவற்க வாழிய ரோமற்றென் கண்மணிபோன்
றொருநாள் பிரியா துயிரிற் பழகி யுடன்வளர்ந்த
அருநா ணளிய அழல்சேர் மெழுகொத் தழிகின்றதே. (உசா)

**45.** மருங்கணைதல்

ஒளிதிகழ்வார்குழல் அளிகுலம்விலக்கிக்
கருங்களிற்றண்ணல் மருங்கணைந்தது.

கோலத் தனிக்கொம்ப ரும்பர்புக் கஃதே குறைப்பவர்தம்
சீலத் தனகொங்கை தேற்றகி லேஞ்சிவன் தில்லையன்னாள்
நூலொத்த நேரிடை நொய்ம்மையெண் ணாது நுண் டேனசையால்
சாலத் தகாதுகண் டீர்வண்டு காள்கொண்டை சார்வதுவே. ()

**46.** இன்றியமையாமைகூறல்

வென்றிவேலவன் மெல்லியறனக்
கின்றியமையாமை யெடுத்துரைத்தது.

நீங்கரும் பொற்கழற் சிற்றம் பலவர் நெடுவிசும்பும்
வாங்கிருந் தெண்கடல் வையமும் எய்தினும் யான்மறவேன்
தீங்கரும் பும்மமிழ் துஞ்செழுந் தேனும் பொதிந்துசெப்பும்
கோங்கரும் புந்தொலைத் தென்னையும் ஆட்கொண்ட கொங்கைகளே. ()

**47.** ஆயத்துய்த்தல்

தேங்கமழ் சிலம்பன்
பாங்கிற் கூட்டியது.

சூளா மணியும்பர்க் காயவன் சூழ்பொழிற் றில்லையன்னைக்
காளா யொழிந்தசென் றருயி ராரமிழ் தேயணங்கே
தோளா மணியே பிணையே பலசொல்லி யென்னை தன்னும்
நாளார் மலர்ப்பொழில் வாயெழி லாயம் நணுககவே. (உகூ)

**48.** நின்றுவருந்தல்

பாங்கிற்கூட்டிப் பதிவயிற்பெயர்வோன்
நீங்கற்கருமை நின்றுநினைந்தது.

பொய்யுடை யார்க்கரன் போலக லும்மகன் றுற்புணரின்
மெய்யுடை யார்க்கவன் அம்பலம் போல மிகநணுகும்
மையுடை வாட்கண் மணியுடைப் பூண்முலை வாணுதல்வான்
பையுடை வாளர வத்தல்குல் காக்கும்பைம் பூம்புனமே. (ஙo)

## ங. இடந்தலைப்பாடு :

**49.** பொழிலிடைச்சேறல்

ஐயரிக்கண்ணியை ஆடிடத்தேசேன்
றெய்துவனெனநினைந் தேந்தல்சென்றது.

என்னறி வால்வந்த தன்றிது முன்னுமின் னும்முயன்றால்
மன்னெறி தந்த திருந்தன்று தெய்வம் வருந்தனெஞ்சே
மின்னெறி செஞ்சடைக் கூத்தப் பிரான்வியன் தில்லைமுந்நீர்
பொன்னெறி வார்துறை வாய்ச்சென்று மின்றோய் பொழிலிடத்தே. ()

## ச. மதியுடம்படுத்தல் :

**50.** பாங்கியிடைச்சேறல்

கரந்துறைகிளவியிற் காதற்றோழியை
இரந்துகுறையுறுவலென் றேந்தல்சென்றது.

எளிதன் றினிக்கனி வாய்வல்லி புல்லல் எழின்மதிக்கீற்
றொளிசென்ற செஞ்சடைக் கூத்தப்பி ரானையுன் னரினென்கண்
தெளிசென்ற வேற்கண் வருவித்த செல்லலெல் லாந்தெளிவித்
தளிசென்ற பூங்குழற் றோழிக்கு வாழி யறிவிப்பனே. (க)

## 51. குறையுறத்துணிதல்

ஓரிடத்தவரை ஒருங்குகண்டுதன்
பேரிடர்பெருந்தகை பேசத்துணிந்தது.

குவளைக் கருங்கட் கொடியே ரிடையிக் கொடிகடைக்கண்
உவளைத் தனதுயி ரென்றது தன்னோ டுவமையில்லா
தவளைத்தன் பால்வைத்த சிற்றம் பலத்தான் அருளிலர்போல்
துவளத் தலைவந்த இன்னலின் னேயினிச் சொல்லுவனே. (௨)

## 52. வேழம்வினாதல்

ஏழையரிருவரும் இருந்தசெவ்வியுள்
வேழம்வினாஅய் வெற்பன்சென்றது.

இருங்களி யாயின் றியானிறு மாப்பவின் பம்பணிவோர்
மருங்களி யாவன லாடவல் லோன்றில்லை யான்மலையீங்
கொருங்களி யார்ப்ப வுமிழ்மும் மதத்திரு கோட்டொருநீள்
கருங்களி யார்மத யானையுண் டோவரக் கண்டதுவே. (௩)

## 53. கலைமான்வினாதல்

சிலைமான் அண்ணல்
கலைமான் வினாயது.

கருங்கண் ணனையறி யாமைநின் றோன்றில்லைக் கார்ப்பொழில்வாய்
வருங்கண் ணனையவண் டாடும் வளரிள வல்லியன்னீர்
இருங்கண் ணனைய கணைபொரு புண்புண ரிப்புனத்தின்
மருங்கண் ணனையதுண் டோவந்த தீங்கொரு வான்கலையே. (௪)

## 54. வழிவினாதல்

கலைமான்வினாய கருத்துவேறறிய
மலைமானண்ணல் வழிவினாயது.

சிலம்பணி கொண்டசெஞ் சீறடி பங்கன்றன் சீரடியார்
குலம்பணி கொள்ள எனைக்கொடுத் தோன்கொண்டு தானணியும்
கலம்பணி கொண்டிடம் அம்பலங் கொண்டவன் கார்க்கயிலைச்
சிலம்பணி கொண்டநுஞ் சீறூர்க் குரைமின்கள் சென்னெறியே. (௫)

**55.** பதிவினாதல்

பதியோடுபிறவினாய் மொழிபலமொழிந்து
மதியுடம்படுக்க மன்னன்வலிந்தது.

ஒருங்கட லேழ்வெயி லொற்றைக் கணைகொள்சிற் றம்பலவன்
கருங்கட லோன்றுகு நால்வாய்க் கரியுரித் தோன்கயிலை
இருங்கட லேடும் பொழிலெழிற் கொம்பரன் னீர்களின்னே
வருங்கடம் மூர்பகர்ந் தாற்பழி யோவிங்கு வாழ்பவர்க்கே. (௬)

**56.** பெயர்வினாதல்

பேரமைத் தோளியர்
பேர்வி னயது.

தாரென்ன வோங்குஞ் சடைமுடி மேற்றனித் திங்கள்வைத்த
காரென்ன ஆருங் கறைமிடற் றம்பல வன்கயிலை
ஊரென்ன என்னவும் வாய்திற வீரொழி வீர்பழியேல்
பேரென்ன வோவுரை யீர்விரை யீர்ங்குழற் பேதையரே. (௭)

**57.** மொழிபெறாதுகூறல்

தேமொழியவர் வாய்மொழிபெறாது
மட்டவிழ்தாரோன் கட்டுரைத்தது.

இரத முடைய நடமாட் டுடையவர் எம்முடையர்
வரத முடைய அணிதில்லை யன்னவர் இப்புனத்தார்
விரத முடையர் விருந்தொடு பேச்சின்மை மீட்டதன்றேல்
சரத முடையர் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே. (௮)

**58.** கருத்தறிவித்தல்

உரைத்த துரையாது
கருத்தறி வித்தது.

வின்னிற வாணுதல் வேணிறக் கண்மெல் லியலைமல்லல்
தன்னிற மொன்றி லிருத்திநின் றோன்றன தம்பலம்போல்
மின்னிற நுண்ணிடைப் பேரெழில் வெண்ணகைப் பைந்தொடியீர்
பொன்னிற அல்குலுக் காமோ மணிநிறப் பூந்தழையே. (௯)

**59.** இடைவினாதல்

வழிபதி பிறவினாய்
மொழிபல மொழிந்தது.

கலைக்கீ ழகலல்குற் பாரம தாரங்கண் ணார்ந்திலங்கு
முலைக்கீழ்ச் சிறிதின்றி நிற்றன்முற் றாதன் றிலங்கையர்கோன்
மலைக்கீழ் விழச்செற்ற சிற்றம் பலவர்வண் பூங்கயிலைச்
சிலைக்கீழ்க் கணையன்ன கண்ணீர் எதுநுங்கள் சிற்றிடையே. ()

## ரு. இருவருமுள்வழி அவன்வரவுணர்தல் :

**60.** ஐயுறுதல்

அடற்கதிர்வேலோன் தொடர்ச்சிநோக்கித்
தையற்பாங்கி ஐயமுற்றது.

பல்லிலன் ஆகப் பகலைவென் றோன்தில்லை பாடலர்போல்
எல்லிலன் நாகத்தொ டேனம் வினாவிவன் யாவன்கொலாம்
வில்லிலன் நாகத் தழைகையில் வேட்டைகொண் டாட்டமெய்யோர்
சொல்லிலன் ஆகற்ற வாகட வானிச் சுனைப்புனமே. (க)

**61.** அறிவுநாடல்

வெற்பன்வினைய சொற்பதநோக்கி
நெறிகுழற்பாங்கி அறிவுநாடியது.

ஆழமன் னோவுடைத் திவ்வையர் வார்த்தை அனங்கனைந்து
வீழமுன் னோக்கிய அம்பலத் தான்வெற்பி னிப்புனத்தே
வேழமுன் னாய்க்கலை யாய்ப்பிற வாய்ப்பின்னு மென்றழையாய்
மாழைமென் னோக்கி யிடையாய்க் கழிந்தது வந்துவந்தே. (உ)

## சு. முன்னுறவுணர்தல் :

**62.** வாட்டம்வினாதல்

மின்னிடைமடந்தை தன்னியனோக்கி
வீங்குமென்முலைப் பாங்கிபகர்ந்தது.

நிருத்தம் பயின்றவன் சிற்றம் பலத்துநெற் றித்தனிக்கண்
ஒருத்தன் பயிலுங் கயிலை மலையின் உயர்குடுமித்
திருத்தம் பயிலுஞ் சுனைகுடைந் தாடிச் சிலம்பெதிர்கூய்
வருத்தம் பயின்றுகொல் லோவல்லி மெல்லியல் வாடியதே. (க)

## எ. குறையுறவுணர்தல் :

**63.** குறையுற்றுநிற்றல்

கறையுற்ற வேலவன்
குறையுற்றது

*மடுக்கோ கடலின் விடுதிமில் அன்றி மறிதிரைமீன்
படுக்கோ பணிலம் பலகுளிக் கோபரன் தில்லைமுன்றில்
கொடுக்கோ வளைமற்று நும்மையர்க் காயகுற் றேவல்செய்கோ
தொடுக்கோ பணியீர் அணியீர் மலர்நுஞ் சுரிகுழற்கே. (க)*

**64.** அவன்குறிப்பறிதல்

பொற்றொடித்தோளிதன் சிற்றிடைப்பாங்கி
வெறிப்பூஞ்சிலம்பன் குறிப்பறிந்தது.

*அளியமன் னும்மொன் றுடைத்தண்ண லெண்ணரன் தில்லையன்னாள்
கிளியைமன் னுங்கடி யச்செல்ல நிற்பிற் கிளரளகத்
தளியமர்ந் தேறின் வறிதே யிருப்பிற் பளிங்கடுத்த
ஒளியமர்ந் தாங்கொன்று போன்றொன்று தோன்றும் ஒளிமுகத்தே. (உ)*

**65.** அவள்குறிப்பறிதல்

ஆங்கவள் குறிப்புப்
பாங்கி பகர்ந்தது.

*பிழைகொண் டொருவிக் கெடாதன்பு செய்யிற் பிறவியென்னும்
முழைகொண் டொருவன்செல் லாமைநின் றம்பலத் தாடுமுன்னோன்
உழைகொண் டொருங்கிரு நோக்கம் பயின்றவெம் மொண்ணுதன்மாந்
தழைகொண் டொருவனென் னாமுன்ன முள்ளந் தழைத்திடுமே. (௩)*

**66.** இருவர்நினைவுமொருவழியுணர்தல்

அன்புறுநோக் காங்கறிந்
தின்புறுதோழி எண்ணியது.

*மெய்யே யிவற்கில்லை வேட்டையின் மேன்மனம் மீட்டிவளும்
பொய்யே புனத்தினை காப்ப திறைபுலி யூரனையாள்
மையேர் குவளைக்கண் வண்டினம் வாழுஞ்செந் தாமரைவாய்
எய்யே மெனினுங் குடைந்தின்பத் தேனுண் டெழிதருமே. (௪)*

## அ. நாணநாட்டம் :

### 67. பிறைதொழுகென்றல்

பிறைதொழுகென்று பேதைமாதரை
நறுநுதற்பாங்கி நாணநாட்டியது.

மைவார் கருங்கண்ணி செங்கரங் கூப்பு மறந்துமற்றப்
பொய்வா னவரிற் புகாதுதன் பொற்கழற் கேயடியேன்
உய்வான் புகவொளிர் தில்லைநின் றோன்சடை மேலதொத்துச்
செவ்வா னடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே. (க)

### 68. வேறுபடுத்துக்கூறல்

வேய்வளைத்தோளியை வேறுபாடுகண்
டாய்வளைத்தோழி அணங்கென்றது.

அக்கின்ற வாமணி சேர்கண்டன் அம்பல வன்மலயத்
திக்குன்ற வாணர் கொழுந்திச் செழுந்தண் புனமுடையாள்
அக்குன்ற ஆறமர்ந் தாடச்சென் றேளங்கம் அவ்வவையே
ஒக்கின்ற வாறணங் கேயிணங் காகும் உனக்கவளே. (உ)

### 69. சுனையாடல்கூறிநகைத்தல்

மாணநாட்டிய வார்குழற்பேதையை
நாணநாட்டி நகைசெய்தது.

செங்கிற மேனிவெண் ணீறணி வோன்றில்லை யம்பலம்போல்
அங்கிற மேனிநின் கொங்கையி லங்கழி குங்குமமும்
மைங்கிற வார்குழன் மாலையும் தாதும் வளாய்மதஞ்சேர்
இங்கிற மும்பெறின் யானுங் குடைவன் இருஞ்சுனையே. (ங)

### 70. புணர்ச்சியுரைத்தல்

மணக்குறி நோக்கிப்
புணர்ச்சி யுரைத்தது.

பருங்கண் கவர்கொலை வேழப் படையோன் படப்படர்தீத்
தருங்கண் ணுதற்றில்லை யம்பலத் தோன்றட மால்வரைவாய்க்
கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்பக்கண் ணாரளிபின்
வருங்கண் மலைமலர் சூட்டவற் றோமற்றவ் வான்சுனையே. (ச)

**71.** மதியுடம்படுதல்

அயில்வேற்கண்ணியோ டாடவன்றனக்குயிரோன்றேன
மயிலியற்றோழி மதியுடம்பட்டது.

காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்து ளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம்
ஏகத் தொருவ னிரும்பொழி லம்பல வன்மலையில்
தோகைக்குந் தோன்றற்கும் ஒன்றாய் வருமின்பத் துன்பங்களே. (௯)

## க. நடுங்கநாட்டம் :

**72.**

நுடங்கிடைப் பாங்கி
நடுங்க நாடியது.

ஆவா இருவர் அறியா அடிதில்லை யம்பலத்து
மூவா யிரவர் வணங்கநின் றோனையுன் னாரின்முன்னித்
தீவா யுழுவை கிழித்ததந் தோசிறி தேபிழைப்பித்
தாவா மணிவேல் பணிகொண்ட வாறின்று ராண்டகையே.(௧)

## கO. மடற்றிறம் :

**73.** ஆற்றாதுரைத்தல்

மல்லற்றிரள் வரைத்தோளவன்
சொல்லாற்றாது சொல்லியது.

பொருளா எனைப்புகுந் தாண்டு புரந்தரன் மாலயன்பால்
இருளா யிருக்கும் ஒளிநின்ற சிற்றம் பலமெனலாம்
சுருளார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் துடியிடையீர்
அருளா தொழியின் ஒழியா தழியுமென் ஆருயிரே. (௧)

**74.** உலகின்மேல்வைத்துரைத்தல்

புலவேலண்ணல் புனமடலேற்
றுலகின்மேல்வைத் துய்த்துரைத்தது.

காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் றென்புலியூர்
ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே. (௨)

**75.** தன்றுணிபுரைத்தல்

மானவேலவன் மடன்மாமிசை
யானுமேறுவன் என்னவுரைத்தது.

விண்ணை மடங்க விரிநீர் பரந்துவெற் புக்கரப்ப
மண்ணை மடங்க வருமொரு காலத்து மன்னிநிற்கும்
அண்ணல் மடங்க லதளம் பலவன் அருளிலர்போல்
பெண்ணை மடன்மிசை யான்வரப் பண்ணிற்றொர் பெண்கொடியே. ()

**76.** மடலேறும்வகையுரைத்தல்

அடல்வேலவன் அழிவுற்று
மடலேறும் வகையுரைத்தது.

கழிகின்ற என்னையும் நின்றநின் கார்மயில் தன்னையும்யான்
கிழியொன்ற நாடி யெழுதிக்கைக் கொண்டென் பிறவிகெட்டின்
றழிகின்ற தாக்கிய தாளம் பலவன் கயிலையந்தேன்
பொழிகின்ற சாரனுஞ் சீறூர்த் தெருவிடைப் போதுவனே.(௪)

**77.** அருளாலரிதெனவிலக்கல்

அடல்வேலண்ணல் அருளுடைமையின்
மடலேற்றுனக் கரிதென்றது.

நடனும் வணங்குந்தொல் லோனெல்லை நான்முகன் மாலறியாக்
கடனும் உருவத் தரன்றில்லை மல்லற்கண் ணார்ந்தபெண்ணை
உடனும் பெடையொடொண் சேவலும் முட்டையுங் கட்டழித்து
மடனும் புனைதரின் யார்கண்ண தோமன்ன இன்னருளே.(௫)

**78.** மொழிநடையெழுதலரிதெனவிலக்கல்

அவயவமரிதின் அண்ணறீட்டினும்
இவையிவைதீட்டல் இயலாதென்றது.

அடிச்சந்த மால்கண் டிலாதன காட்டிவந் தாண்டுகொண்டென்
முடிச்சந்த மாமல ராக்குமுன் னோன்புலி யூர்புரையும்
கடிச்சந்த யாழ்கற்ற மென்மொழிக் கன்னி யனநடைக்குப்
படிச்சந்த மாக்கும் படமுள வோநும் பரிசகத்தே. (௬)

**79.** அவயவமெழுதலரிதெனவிலக்கல்

அவயவ மானவை
இவையிவை யென்றது.

யாழு மெழுதி யெழின்முத் தெழுதி யிருளின்மென்பூச்
சூழு மெழுதியொர் தொண்டையுந் தீட்டியென் தொல்பிறவி
ஏழு மெழுதா வகைசிதைத் தோன்புலி யூரிளமாம்
போழு மெழுதிற்றொர் கொம்பருண் டேற்கொண்டு போதுகவே. (எ)

**80.** உடம்படாதுவிலக்கல்

அடுபடையண்ணல் அழிதுயரொழிகென
மடநடைத்தோழி மடல்விலக்கியது.

ஊர்வா யொழிவா யுயர்பெண்ணைத் திண்மடல் நின்குறிப்புச்
சீர்வாய் சிலம்ப திருத்த இருந்திலம் ஈசர்தில்லைக்
கார்வாய் குழலிக்குன் னுதர வோதிக்கற் பித்துக்கண்டால்
ஆர்வாய் தரினறி வார்பின்னைச் செய்க அறிந்தனவே. (அ)

**81.** உடம்பட்டுவிலக்கல்

அரவருநுண்ணிடைக் குரவருகூந்தலென்
உள்ளக்கருத்து விள்ளாளென்றது.

பைந்நா ணரவன் படுகடல் வாய்ப்படு நஞ்சமுதாம்
மைந்நாண் மணிகண்டன் மன்னும் புலியூர் மணந்தபொன்னிம்
மொய்ந்நாண் முதுதிரை வாயா னழுந்தினும் என்னின்முன்னும்
இந்நா ளிதுமது வார்குழ லாட்கென்கண் இன்னருளே. (கூ)

## கக. குறைநயப்புக்கூறல் :

**82.** குறிப்பறிதல்

நறைவளர்கோதையைக் குறைநயப்பித்தற்
குள்ளறிகுற்ற ஒள்ளிழையுரைத்தது.

தாதேய் மலர்க்குஞ்சி யஞ்சிறை வண்டுதண் டேன்பருகித்
தேதே யெனுந்தில்லை யோன்சே யெனச்சின வேலொருவர்
மாதே புனத்திடை வாளா வருவர்வந் தியாதுஞ்சொல்லார்
யாதே செயத்தக் கதுமது வார்குழல் ஏந்திழையே. (க)

**83.** மென்மொழியாற்கூறல்

ஒளிருறுவேலவன் தளர்வுறுகின்றமை
இன்மொழியவட்கு மென்மொழிமொழிந்தது.

வரிசேர் தடங்கண்ணி மம்மர்கைம் மிக்கென்ன மாயங்கொலோ
எரிசேர் தளிரன்ன மேனியன் ஈர்ந்தழை யன்புலியூர்ப்
புரிசேர் சடையோன் புதல்வன்கொல் பூங்கணை வேள்கொலென்னத்
தெரியேம் உரையான் பிரியா னொருவனித் தேம்புனமே. (உ)

**84.** விரவிக்கூறல்

வன்மொழியின்மன மெலிவதஞ்சி
மென்மொழிவிரவி மிகுத்துரைத்தது.

நீகண்ட னையெனின் வாழலை நேரிழை யம்பலத்தான்
சேய்கண் டனையன்சென் றாங்கோ ரலவன்றன் சீர்ப்பெடையின்
வாய்வண் டனையதொர் நாவற் கனிநனி நல்கக்கண்டு
பேய்கண் டனையதொன் றாகிநின் றானப் பெருந்தகையே. (ங)

**85.** அறியாள்போறல்

அறியாள் போன்று
குறியாள் கூறியது.

சங்கந் தருமுத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறலவு
துங்க மலிதலை யேந்தலி னேந்திழை தொல்லைப்பன்மா
வங்க மலிகலி நீர்தில்லை வானவ னேர்வருமே. (ச)

**86.** வஞ்சித்துரைத்தல்

நெஞ்சநெகிழ்வகை வஞ்சித்திவையிவை
செஞ்சடையோன்புகழ் வஞ்சிக்குரைத்தது.

புரங்கடந் தானடி காண்பான் புவிவிண்டு புக்கறியா
திரங்கிடெந் தாயென் றிரப்பத்தன் னீரடிக் கென்னிரண்டு
கரங்கடந் தானொன்று காட்டமற் றாங்கதுங் காட்டிடென்று
வரங்கிடந் தான்றில்லை யம்பல முன்றிலம் மாயவனே. (ரு)

**87.** புலந்துகூறல்

திருந்தியசொல்லிற் செவ்விபெறாது
வருந்தியசொல்லின் வகுத்துரைத்தது.

உள்ளப் படுவன வுள்ளி யுரைத்தக் கவர்க்குரைத்து
மெள்ளப் படிறு துணிதுணி யேலிது வேண்டுவல்யான்
கள்ளப் படிறர்க் கருளா அரன்றில்லை காணலர்போல்
கொள்ளப் படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே. (சு)

**88.** வன்மொழியாற்கூறல்

கடலுலகறியக் கமழலந்துறைவன்
மடலேறுமென வன்மொழிமொழிந்தது.

மேவியந் தோலுடுக் குந்தில்லை யான்பொடி மெய்யிற்கையில்
ஓவியந் தோன்றுங் கிழிநின் எழிலென் றுரையுளதால்
தூவியந் தோகையன் னாயென்ன பாவஞ்சொல் லாடல்செய்யான்
பாவியந் தோபனை மாமட லேறக்கொல் பாவித்ததே. (எ)

**89.** மனத்தொடுநேர்தல்

அடல்வேலவன் ஆற்றானெனக்
கடலமிழ்தன்னவள் காணலுற்றது.

பொன்னார் சடையோன் புலியூர் புகழா ரெனப்புரிநோய்
என்னா லறிவில்லை யானென் றுரைக்கிலன் வந்தயலார்
சொன்னா ரெனுமித் துரிசுதுன் னாமைத் துணைமனனே
என்னாழ் துயர்வல்லை யேற்சொல்லு நீர்மை யினியவர்க்கே. (அ)

## கஉ. சேட்படை

**90.** தழைகொண்டுசேறல்

கொய்ம்மலர்க்குழலி குறைநயந்தபின்
கையுறையோடு காவலன்சென்றது.

தேமென் கிளவிதன் பங்கத் திறையுறை தில்லையன்னீர்
பூமென் றழையுமம் போதுங்கொள் ளீர்தமி யேன்புலம்ப
ஆமென் றருங்கொடும் பாடுகள் செய்துநுங் கண்மலராம்
காமன் கணைகொண் டலைகொள்ள வோமுற்றக் கற்றதுவே. (க)

**91.** சந்தனத்தழைதகாதென்றுமறுத்தல்

பிறைநுதற்பேதையைக் குறைநயப்பித்தபின்
வாட்படையண்ணலைச் சேட்படுத்தது.

ஆரத் தழையரா பூண்டம் பலத்தன லாடியன்பர்க்
காரத் தழையன் பருளிநின் றோன்சென்ற மாமலயத்
தாரத் தழையண்ணல் தந்தால் இவையவள் அல்குற்கண்டால்
ஆரத் தழைகொடு வந்தா ரெனவரும் ஐயுறவே. (உ)

**92.** நிலத்தின்மைகூறிமறுத்தல்

கோங்கலர்தாரோய் கோணர்ந்தகோய்தழை
எங்குலத்தாருக் கேலாதென்றது.

மூன்றகத் தெல்லா இமையோ ரையும்பின்னைத் தக்கன்முத்தீச்
சென்றகத் தில்லா வகைசிதைத் தோன்றிருந் தம்பலவன்
குன்றகத் தில்லாத் தழையண்ணல் தந்தாற் கொடிச்சியருக்
கின்றகத் தில்லாப் பழிவந்து மூடுமென் றெள்குதுமே. (ந)

**93.** நினைவறிவுகூறிமறுத்தல்

மைதழைக்கண்ணி மனமறிந்தல்லது
கோய்தழைதந்தாற் கோள்ளேமென்றது.

யாழார் மொழிமங்கை பங்கத் திறைவன் எறிதிரைநீர்
ஏழா யெழுபொழி லாயிருந் தோனின்ற தில்லையன்ன
சூழார் குழலெழிற் றொண்டைச்செவ் வாய்நவ்வி சொல்லறிந்தால்
தாழா தெதிர்வந்து கோடுஞ் சிலம்ப தருந்தழையே. (ச)

**94.** படைத்துமொழியான்மறுத்தல்

அருந்தழைமேன்மேற் பெருந்தகைகோணரப்
படைத்துமொழிகிளவியின் தடுத்தவண்மொழிந்தது.

எழில்வா யிளவஞ்சி யும்விரும் பும்மற் றிறைகுறையுண்
டழல்வா யவிரொளி யம்பலத் தாடுமஞ் சோதியந்தீங்
குழல்வாய் மொழிமங்கை பங்கன்குற் றாலத்துக் கோலப்பிண்டிப்
பொழில்வாய் தடவரை வாயல்ல தில்லையிப் பூந்தழையே. (ரு)

**95.** நாணுரைத்துமறுத்தல்

வாணுதற் பேதையை
நாணுதல் உரைத்தது.

உறுங்கண்ணி வந்த கணையுர வோன்பொடி யாயொடுங்கத்
தெறுங்கண்ணி வந்தசிற் றம்பல வன்மலைச் சிற்றிலின்வாய்
நறுங்கண்ணி சூட்டினும் நாணுமென் வாணுதல் நாகத்தொண்பூங்
குறுங்கண்ணி வேய்ந்திள மந்திகள் நாணுமிக் குன்றிடத்தே. (சுரு)

**96.** இசையாமைகூறிமறுத்தல்

வசைதீர் குலத்திற்
கிசையா தென்றது.

நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி
மறமனை வேங்கை யெனநனி யஞ்சுமஞ் சார்சிலம்பா
குறமனை வேங்கைச் சுணங்கொ டணங்கலர் கூட்டுபவோ
நிறமனை வேங்கை யதளம் பலவன் நெடுவரையே. (எ)

**97.** செவ்வியிலளென்றுமறுத்தல்

நவ்வி நோக்கி
செவ்வியிலள் என்றது.

கற்றில கண்டன்ன மென்னடை கண்மலர் நோக்கருளப்
பெற்றில மென்பிணை பேச்சுப் பெறுகிள்ளை பிள்ளையின்றேன்
றற்றிலள் உற்ற தறிந்திலள் ஆகத் தொளிமிளிரும்
புற்றில வாளர வன்புலி யூரன்ன பூங்கொடியே. (அ)

**98.** காப்புடைத்தென்றுமறுத்தல்

காப்புடைத் தென்று
சேட்படுத்தது.

முனிதரும் அன்னையும் என்னையர் சாலவும் மூர்க்கரின்னே
தனிதரும் இந்நிலத் தன்றைய குன்றமுந் தாழ்சடைமேல்
பனிதரு திங்க ளணியம் பலவர் பகைசெகுக்குங்
குனிதரு திண்சிலைக் கோடுசென் றன்சுடர்க் கொற்றவனே. (கூ)

**99.** நீயேகூறென்றுமறுத்தல்

அஞ்சுதும்பெரும பஞ்சின்மெல்லடியைக்
கூறுவநீயே கூறுகென்றது.

அந்தியின் வாயெழி லம்பலத் தெம்பரன் அம்பொன்வெற்பில்
பந்தியின் வாய்ப்பல வின்சுளை பைந்தே னொடுங்கடுவன்
மந்தியின் வாய்க்கொடுத் தோம்புஞ் சிலம்ப மனங்கனிய
முந்தியின் வாய்மொழி நீயே மொழிசென்றம் மொய்குழற்கே.

**100.** குலமுறைகூறிமறுத்தல்

தோழகுலத்தீர் சொற்காகேம்
இழிகுலத்தேம் எனவுரைத்தது.

தெங்கம் பழங்கமு கின்குலை சாடிக் கதலிசெற்றுக்
கொங்கம் பழனத் தொளிர்குளிர் நாட்டினை நீயுமைகூர்
பங்கம் பலவன் பரங்குன்றிற் குன்றன்ன மாபதைப்பச்
சிங்கந் திரிதரு சீறூர்ச் சிறுமியெந் தேமொழியே. (கக)

**101.** நகையாடிமறுத்தல்

வாட்டமையெதிராது சேட்படுத்தற்கு
மென்னகைத்தோழி இன்னகைசெய்தது.

சிலையொன்று வாணுதல் பங்கன்சிற் றம்பல வன்கயிலை
மலையொன்று மாமுகத் தெம்மையர் எய்கணை மண்குளிக்குங்
கலையொன்று வெங்கணை யோடு கடுகிட்ட தென்னிற்கெட்டேன்
கொலையொன்று திண்ணிய வாறையர் கையிற் கொடுஞ்சிலையே. (கஉ)

**102.** இரக்கத்தோடுமறுத்தல்

கையுறையெதிராது காதற்றோழி
ஐயநீபெரி தயர்த்தனையென்றது.

மைத்தழை யாகின்ற மாமிடற் றம்பல வன்கழற்கே
மெய்த்தழை யாகின்ற அன்பினர் போல விதிர்விதிர்த்துக்
கைத்தழை யேந்திக் கடமா வினுய்க்கையில் வில்லின்றியே
பித்தழை யாகிற்ப ராலென்ன பாவம் பெரியவரே. (கங)

**103.** சிறப்பின்மைகூறிமறுத்தல்

மாந்தளிரும் மலர்நீலமும்
ஏந்தலிம்மலை யில்லையென்றது.

அக்கும் அரவும் அணிமணிக் கூத்தன்சிற் றம்பலமே
ஒக்கும் மிவளொ தொளிருரு அஞ்சிமஞ் சார்சிலம்பா
கொக்கும் சுனையும் குளிர்தளி ருங்கொழும் போதுகளும்
இக்குன்றில் என்றும் மலர்ந்தறி யாத இயல்பினவே. (கச)

**104.** இளமைகூறிமறுத்தல்

முவளையெயிற் றரிவை
விளைவிலள் என்றது.

உருகு தலைச்சென்ற வுள்ளத்தும் அம்பலத் தும்மொளியே
பெருகு தலைச்சென்று நின்றோன் பெருந்துறைப் பிள்ளைகள்ளார்
முருகு தலைச்சென்ற கூழை முடியா முலைபொடியா
ஒருகு தலைச்சின் மழலைக்கென் னேவைய ஓதுவதே. (கரு)

**105.** மறைத்தமைகூறிநகைத்துரைத்தல்

என்வமறைத்தபின் எண்ணியதறிதென
நன்னுதற்றோழி நகைசெய்தது.

பண்டா லியலும் இலைவளர் பாலகன் பார்கிழித்துத்
தொண்டா லியலுஞ் சுடர்க்கழ லோன்றொல்லைத் தில்லையின்வாய்
வண்டா லியலும் வளர்பூந் துறைவ மறைக்கினென்னைக்
கண்டா லியலுங் கடனில்லை கொல்லோ கருதியதே. (கசு)

**106.** நகைகண்டுமகிழ்தல்

இன்னகைத்தோழி மென்னகைகண்டு
வண்ணக்கதிர்வேல் அண்ணலுரைத்தது.

மத்தகஞ் சேர்தனி நோக்கினன் வாக்கிறந் தூறமுதே
ஒத்தகஞ் சேர்ந்தென்னை யுய்யநின் றோன்றில்லை யொத்திலங்கு
முத்தகஞ் சேர்மென் னகைப்பெருந் தோளி முகமதியின்
வித்தகஞ் சேர்மெல்லெ னேக்கமன் றேயென் விழுத்துணையே. (கஎ)

**107.** அறியாள்போன்றுநினைவுகேட்டல்

வேந்தன்சொன்ன மாந்தளிர்மேனியை
வெறியார்கோதை அறியேனென்றது.

விண்ணிறந் தார்நிலம் விண்டவர் என்றுமிக் காரிருவர்
கண்ணிறந் தார்தில்லை யம்பலத் தார்கழுக் குன்றினின்று
தண்ணறுந் தாதிவர் சந்தனச் சோலைப்பந் தாடுகின்றார்
எண்ணிறந் தாரவர் யார்கண்ண தோமன்ன நின்னருளே.(கஅ)

**108.** அவயவங்கூறல்

அவயவம் அவளுக்
கிவையிவை யென்றது.

குவவின கொங்கை குரும்பை குழல்கொன்றை கொவ்வைசெவ்வாய்
கவவின வாணகை வெண்முத்தம் கண்மலர் செங்கழுநீர்
தவவினை தீர்ப்பவன் தாழ்பொழிற் சிற்றம் பலமனையாட்
குவவின நாண்மதி போன்றொளிர் கின்ற தொளிமுகமே.(கசு)

**109.** கண்ணயந்துரைத்தல்

கண்ணிணை பிறழ்வன
வண்ணம் உரைத்தது.

ஈசற்கி யான்வைத்த அன்பின் அகன்றவன் வாங்கியவென்
பாசத்திற் காரென் றவன்றில்லை யின்னொளி போன்றவன்றோள்
பூசத் திருநீ றெனவெளுத் தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த் தையிற்பெரு நீளம் பெருங்கண்களே. (உ0)

**110.** தழையெதிர்தல்

அகன்றவிடத் தாற்றாமைகண்டு
கவன்றதோழி கையுறையெதிர்ந்தது.

தோலாக் கரிவென்ற தற்கும் துவள்விற்கும் இல்லின்றொன்மைக்
கேலாப் பரிசுள வேயன்றி யேலேம் இருஞ்சிலம்ப
மாலார்க் கரிய மலர்க்கழ லம்பல வன்மலையில்
கோலாப் பிரசமன் னட்கைய நீதந்த கொய்தழையே. (உக)

**111.** குறிப்பறிதல்

தழையெதிரா தோழிவதற்கோர்
சொல்லறியேனெனப் பல்வளக்குரைத்தது.

கழைகாண் டலுஞ்சுளி யுங்களி யானையன் ஞன்கரத்தில்
தழைகாண் டலும்பொய் தழைப்பமுன் காண்பனின் றம்பலத்தான்
உழைகாண் டலுநினைப் பாகுமென் னேக்கிமன் னேக்கங்கண்டால்
இழைகாண் பணைமுலை யாயறி யேன்சொல்லும் ஈடவற்கே.(உஉ)

**112.** குறிப்பறிந்துகூறல்

ஏழைக் கிருந்தழை
தோழிகொண் டுரைத்தது.

தவளத்த நீறணி யுந்தடந் தோளண்ணல் தன்னொருபால்
அவளத்த னுமக னுந்தில்லை யானன் றுரித்ததன்ன
கவளத்த யானை கடிந்தார் கரத்தகண் ணார்தழையும்
துவளத் தகுவன வோசுரும் பார்குழல் தூமொழியே. (உங)

**113.** வகுத்துரைத்தல்

கடித்தழைகொணர்ந்த காதற்றோழி
மடக்கொடிமாதர்க்கு வகுத்துரைத்தது.

ஏறும் பழிதழை யேற்பின்மற் றேலா விடின்மடன்மா
ஏறும் அவனிட பங்கொடி யேற்றிவந் தம்பலத்துள்
ஏறும் அரன்மன் னும்ஈங்கோய் மலைநம் இரும்புனங்காய்ந்
தேறும் மலைதொலைத் தாற்கென்னை யாஞ்செய்வ தேந்திழையே.(உச)

**114.** தழையேற்பித்தல்

கருங்குழன்மடந்தைக் கரும்பெறற்றோழி
இருந்தழைகோள்கென விரும்பிக்கொடுத்தது.

தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டென்னை யாண்டுகொண்ட
செவ்வரை மேனியன் சிற்றம் பலவன் செழுங்கயிலை
அவ்வரை மேலன்றி யில்லைகண் டாயுள்ள வாறருளான்
இவ்வரை மேற்சிலம் பன்னொளி திற்றந்த ஈர்ந்தழையே. (உரு)

**115.** தழைவிருப்புரைத்தல்

விருப்பவள் தோழி
பொருப்பற் குரைத்தது.

பாசத் தளையறுத் தாண்டுகொண் டோன்றில்லை யம்பலஞ்சூழ்
தேசத் தனசெம்மல் நீதந் தனசென்றி யான்கொடுத்தேன்
பேசிற் பெருகும் சுருங்கு மருங்குல் பெயர்ந்தரைத்துப்
பூசிற் றிலளன்றிச் செய்யா தனவில்லை பூந்தழையே. (உ௬)

## க௬. பகற்குறி

**116.** குறியிடங்கூறல்

வாடிடத்தண்ணல் வண்டழையெதிர்ந்தவள்
ஆடிடத்தின்னியல் பறியவுரைத்தது.

வானுழை வாளம் பலத்தரன் குன்றென்று வட்கிவெய்யோன்
தானுழை யாவிரு ளாய்ப்புறம் நாப்பண்வண் டாரகைபோல்
தேனுழை நாக மலர்ந்து திகழ்பளிங் கான்மதியோன்
கானுழை வாழ்வுபெற் றுங்கெழில் காட்டுமோர் கார்ப்பொழிலே. (க)

**117.** ஆடிடம்படர்தல்

வண்டழையெதிர்ந்த ஒண்டொடிப்பாங்கி
நீடமைத்தோளியோ டாடிடம்படர்ந்தது.

புயல்வளர் ஊசன்முன் னுடிப்பொன் னேபின்னைப் போய்ப்பொலியும்
அயல்வளர் குன்றினின் றேற்றும் அருவி திருவுருவின்
கயல்வளர் வாட்கண்ணி போதரு காதரந் தீர்த்தருளும்
தயல்வளர் மேனியன் அம்பலத் தான்வரைத் தண்புனத்தே.

**118.** குறியிடத்துக்கொண்டுசேறல்

அணிவளராடிடத் தாயவெள்ளம்
மணிவளர்கோங்கையை மருங்ககன்றது.

தினைவளங் காத்துச் சிலம்பெதிர் கூஉய்ச்சிற்றின் முற்றிழைத்துச்
சுனைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து தொழுதெழுவார்
வினைவளம் நீறெழ நீறணி யம்பல வன்றன்வெற்பில்
புனைவளர் கொம்பரன் னாயன்ன காண்டும் புனமயிலே. (௩)

**119.** இடத்துய்த்துநீங்கல்

மடத்தகைமாதரை யிடத்தகத்துய்த்து
நீங்கலுற்ற பாங்கிபகர்ந்தது.

நரல்வே யினநின தோட்குடைந் தூக்கநன் முத்தஞ்சிந்திப்
பரல்வே யறையுறைக் கும்பஞ் சடிப்பரன் றில்லையன்னாய்
வரல்வேய் தருவனிங் கேநிலுங் கேசென் றுன் வார்குழற்கேற்
குரல்வே யளிமுரல் கொங்கார் தடமலர் கொண்டுவந்தே. (௪)

**120.** உவந்துரைத்தல்

களிமயிற்சாயலை யொருசிறைக்கண்ட
ஒளிமலர்த்தாரோன் உவந்துரைத்தது.

படமா சுணப்பள்ளி யிக்குவ டாக்கியப் பங்கயக்கண்
நெடுமா லெனவென்னை நீநினைந் தோநெஞ்சத் தாமரையே
இடமா இருக்கலுற் றோதில்லை நின்றவன் ஈர்ங்கயிலை
வடமார் முலைமட வாய்வந்து வைகிற்றிவ் வார்பொழிற்கே. ()

**121.** மருங்கணைதல்

வாணுதலரிவை நாணுதல்கண்ட
கோதைவேலவன் ஆதரவுரைத்தது.

தொத்தின் மலர்ப்பொழிற் றில்லைத்தொல் லோனருளன்னமுன்னி
முத்தீன் குவளைமென் காந்தளின் மூடித்தன் ஏரளப்பாள்
ஒத்தீங் கொடியி னொதுங்குகின் றுள்மருங் குல்நெருங்கப்
பித்தீர் பணைமுலை காளென்னுக் கின்னும் பெருக்கின்றதே. ()

**122.** பாங்கியறிவுரைத்தல்

நெறிகுழற் பாங்கி
அறிவறி வித்தது.

அளிநீ டளகத்தின் அட்டிய தாதும் அணியணியும்
ஒளிநீள் சுரிகுழற் சூழ்ந்தவொண் மாலையும் தண்ணறவுண்
களிநீ யெனச்செய்த வன்கடற் றில்லையன் னாய்கலங்கல்
தெளிநீ யனையபொன் னேபன்னு கோலம் திருநுதலே. (எ)

**123.** உண்மகிழ்ந்துரைத்தல்

தண்மலர்க் கோதையை
உண்மகிழ்ந் துரைத்தது.

செழுநீர் மதிக்கண்ணிச் சிற்றம் பலவன் திருக்கழலே
கெழுநீர் மையிற்சென்று கிண்கிணி வாய்க்கொள்ளுங் கள்ளகத்த
கழுநீர் மலரிவள் யானதன் கண்மரு விப்பிரியாக்
கொழுநீர் நறப்பரு கும்பெரு நீர்மை யளிகுலமே. (அ)

**124.** ஆயத்துய்த்தல்

கவளகடலன்ன கார்மயிற்கணத்துப்
புவனமடமானைப் புகவிட்டது.

கொழுந்தா ரகைமுகை கொண்டலம் பாசடை விண்மடுவில்
எழுந்தார் மதிக்கம லம்மெழில் தந்தென இப்பிறப்பில்
அழுந்தா வகையெனை யாண்டவன் சிற்றம் பலமனையாய்
செழுந்தா தவிழ்பொழில் ஆயத்துச் சேர்க திருத்தகவே. (கூ)

**125.** தோழிவந்துகூடல்

நெறியுறுகுழலியை நின்றிடத்துய்த்துப்
பிறைநுதற்பாங்கி பெயர்ந்தவட்குரைத்தது.

பொன்னனை யான்றில்லைப் பொங்கர வம்புன் சடைமிடைந்த
மின்னனை யானருள் மேவலர் போன்மெல் விரல்வருந்த
மென்னனை யாய்மறி யேபறி யேல்வெறி யார்மலர்கள்
இன்னன யான்கொணர்ந் தேன்மணந் தாழ்குழற் கேய்வனவே. (க0)

**126.** ஆடிடம்புகுதல்

தனிவிளையாடிய தாழ்குழற்றோழி
பனிமதிநுதலியோ டாடிடம்படர்ந்தது.

அறுகால் நிறைமலர் ஐம்பால் நிறையணிந் தேனணியார்
துறுகான் மலர்த்தொத்துத் தோகைதொல் லாயமெல் லப்புகுக
சிறுகால் மருங்குல் வருந்தா வகைமிக என்சிரத்தின்
உறுகால் பிறர்க்கரி யோன்புலி யூரன்ன ஒண்ணுதலே. (கக)

## 127. தனிகண்டுரைத்தல்

வேயோத்ததோளியை ஆயத்துய்த்துக்
குனிசிலையண்ணலைத் தனிகண்டுரைத்தது.

தழங்கும் அருவியெஞ் சீறூர் பெரும இதுமதுவும்
கிழங்கும் அருந்தி யிருந்தெம்மொ டின்று கிளர்ந்துகுன்றர்
முழங்குங் குரவை யிரவிற்கண் டேகுக முத்தன்முத்தி
வழங்கும் பிரானெரி யாடிதென் றில்லை மணிநகர்க்கே. (கஉ)

## 128. பருவங்கூறிவரவுவிலக்கல்

மாந்தளிர்மேனியை வரைந்தெய்தா
தேந்தலிவ்வா றியங்கலென்றது.

தெள்ளி மணிசந்த முந்தித் தறுகட் கரிமருப்புத்
தெள்ளி நறவம் திசைதிசை பாயும் மலைச்சிலம்பா
வெள்ளி மலையன்ன மால்விடை யோன்புலி யூர்விளங்கும்
வள்ளி மருங்குல் வருத்துவ போன்ற வனமுலையே. (கந)

## 129. வரைவுடம்படாதுமிகுத்துக்கூறல்

வரைவுகடாய வாணுதற்றோழிக்கு
விரைமலர்த்தாரோன் மிகுத்துரைத்தது.

மாடஞ்செய் பொன்னக ருங்கிக ரில்லையிம் மாதர்க்கென்னப்
பீடஞ்செய் தாமரை யோன்பெற்ற பிள்ளையை உள்ளலரைக்
கீடஞ்செய் தென்பிறப் புக்கெடத் தில்லைநின் றோன்கயிலைக்
கூடஞ்செய் சாரற் கொடிச்சியென் றேநின்று கூறுவதே.(கச)

## 130. உண்மைகூறிவரைவுகடாதல்

கல்வரைநாடன் இல்லதுரைப்ப
ஆங்கவளுண்மை பாங்கிபகர்ந்தது.

வேய்தந்த வெண்முத்தம் சிந்துபைங் கார்வரை மீன்பரப்பிச்
சேய்தந்த வானகம் மானுஞ் சிலம்பதன் சேவடிக்கே
ஆய்தந்த அன்புதந் தாட்கொண்ட அம்பல வன்மலையில்
தாய்தந்தை கானவ ரேனலெங் காவலித் தாழ்வரையே. (கரு)

**131.** வருத்தங்கூறிவரைவுகடாதல்

கனங்குழைமுகத்தவள் மனங்குழைவுணர்த்தி
நிரைவளைத்தோளி வரைவுகடாயது.

மன்னுந் திருவருந் தும்வரை யாவிடின் நீர்வரைவென்
றுன்னு மதற்குத் தளர்ந்தொளி வாடுதிர் உம்பரெலாம்
பன்னும் புகழ்ப்பர மன்பரஞ் சோதிசிற் றம்பலத்தான்
பொன்னங் கழல்வழுத் தார்புல னென்னப் புலம்புவனே. (கசு)

**132.** தாயச்சங்கூறிவரைவுகடாதல்

மடத்தகைமாதர்க் கடுப்பனவறியா
வேற்கட்பாங்கி யேற்கவுரைத்தது.

பனித்துண்டஞ் சூடும் படர்சடை யம்பல வன்னுலகம்
தனித்துண் டவன்றொழுந் தாளோன் கயிலைப் பயில்சிலம்பா
கனித்தொண்டை வாய்ச்சி கதிர்முலைப் பாரிப்புக் கண்டழிவுற்
றினிக்கண் டிலம்பற் றுச்சிற் றிடைக்கென் றஞ்சும் எம்மனையே()

**133.** இற்செறிவறிவித்துவரைவுகடாதல்

விற்செறி நுதலியை
இற்செறி வுரைத்தது.

ஈவிளை யாட நறவிளை வோர்ந்தெமர் மால்பியற்றும்
வேய்விளை யாடும்வெற் பாவுற்று நோக்கியெம் மெல்லியலைப்
போய்விளை யாடலென் றாளன்னை அம்பலத் தான்புரத்தில்
தீவிளை யாடநின் றேவிளை யாடி திருமலைக்கே. (கஅ)

**134.** தமர்நினைவுரைத்துவரைவுகடாதல்

விற்செறிநுதலியை இற்செறிவிப்பரென்
றெளிவேலவற்கு வெளியேயுரைத்தது.

சுற்றுஞ் சடைக்கற்றைச் சிற்றம் பலவற் றொழாதுதொல்சீர்
கற்றும் அறியல ரிற்சிலம் பாவிடை நைவதுகண்
டெற்றுந் திரையின் னமிர்தை யினித்தமர் இற்செறிப்பார்
மற்றுஞ் சிலபல சீறூர் பகர்பெரு வார்த்தைகளே. (ககூ)

## 135. எதிர்கோள்கூறிவரைவுகடாதல்

ஏந்திழைத்தோழி ஏந்தலைமுன்னிக்
கடியாமாறு நொடிகென்றது.

வழியும் அதுவன்னை யென்னின் மகிழும்வந் தெந்தையுநின்
மொழியின் வழிநிற்கும் சுற்றமுன் னேவயம் அம்பலத்துக்
குழியும்ப ரேத்துமெங் கூத்தன்குற் றாலமுற் றும்மறியக்
கெழியும்ம வேபணைத் தோள்பல என்னோ கிளக்கின்றதே. ()

## 136. ஏறுகோள்கூறிவரைவுகடாதல்

என்னையர் துணி
வின்ன தென்றது.

படையார் கருங்கண்ணி வண்ணப் பயோதரப் பாரமுநுண்
இடையார் மெலிவுங்கண் டண்டர்கள் ஈர்முல்லை வேலியெம்மூர்
விடையார் மருப்புத் திருத்திவிட் டார்வியன் றென்புலியூர்
உடையார் கடவி வருவது போலும் உருவினதே. (உக)

## 137. அயலுரையுரைத்துவரைவுகடாதல்

கயல்புரை கண்ணியை
அயலுரை யுரைத்தது.

உருப்பனை யன்னகைக் குன்றொன் றுரித்துர வூரெரித்த
நெருப்பனை அம்பலத் தாதியை உம்பர்சென் றேத்திநிற்குந்
திருப்பனை யூரனை யாளைப்பொன் நாளைப் புனைதல்செப்பிப்
பொருப்பனை முன்னின்றென் னோவினை யேன்யான் புகல்வதுவே. ()

## 138. தினைமுதிர்வுரைத்துவரைவுகடாதல்

ஏனல்விளையாட் டினியில்லையென
மானற்றோழி மடந்தைக்குரைத்தது.

மாதிடங் கொண்டம் பலத்துநின் றோன்வட வான்கயிலைப்
போதிடங் கொண்டபொன் வேங்கை தினைப்புனங் கொய்கவென்று
தாதிடங் கொண்டுபொன் வீசித்தன் கள்வாய் சொரியநின்று
சோதிடங் கொண்டிதெம் மைக்கெடு வித்தது தூமொழியே. ()

**139.** பகல்வரல்விலக்கிவரைவுகடாதல்

அகல்வரை நாடனைப்
பகல்வரல் என்றது.

வடிவார் வயற்றில்லை யோன்மல யத்துநின் றும்வருதேன்
கடிவார் களிவண்டு நின்றலர் தூற்றப் பெருங்கணியார்
நொடிவார் நமக்கினி நோதக யானுமக் கென்னுரைக்கேன்
தடிவார் தினையெமர் காவேம் பெருமவித் தண்புனமே. (உச)

**140.** தினையோடுவேறுத்துவரைவுகடாதல்

தண்புனத்தோடு தளர்வுற்றுப்
பண்புனைமொழிப் பாங்கிபகர்ந்தது.

நினைவித்துத் தன்னையென் னெஞ்சத் திருந்தம் பலத்துநின்று
புனைவித்த ஈசன் பொதியின் மலைப்பொருப் பன்விருப்பின்
தினைவித்திக் காத்துச் சிறந்துநின் றேழுக்குச் சென்றுசென்று
வினைவித்திக் காத்து விளைவுண்ட தாகி விளைந்ததுவே. (உரு)

**141.** வேங்கையோடுவேறுத்துவரைவுகடாதல்

நீங்குகவினி நெடுந்தகையென
வேங்கைமேல்வைத்து விளம்பியது.

கனைகடற் செய்தநஞ் சுண்டுகண் டார்க்கம் பலத்தமிழ்தாய்
வினைகெடச் செய்தவன் விண்டோய் கயிலை மயிலனையாய்
நனைகெடச் செய்தன மாயின் நமைக்கெடச் செய்திடுவான்
தினைகெடச் செய்திடு மாறுமுண் டோவித் திருக்கணியே. ()

**142.** இரக்கமுற்றுவரைவுகடாதல்

செழுமலை நாடற்குக்
கழுமலுற் றிரங்கியது.

வழுவா இயலெம் மலையர் விதைப்பமற் றியாம்வளர்த்த
கொழுவார் தினையின் குழாங்களெல் லாமெங் குழாம்வணங்குஞ்
செழுவார் கழற்றில்லைச் சிற்றம் பலவரைச் சென்றுநின்று
தொழுவார் வினைநிற்கி லேநிற்ப தாவதித் தொல்புனத்தே. ()

**143.** கோய்தமைகூறிவரைவுகடாதல்

*நீடிரும்புனத்தினி யாடேமென்று*
*வரைவுதோன்ற வுரைசெய்தது.*

*பொருப்பர்க்கி யாமொன்று மாட்டேம் புகலப் புகலெமக்காம்*
*விருப்பர்க் கியாவர்க்கும் மேலர்க்கு மேல்வரும் ஊரெரித்த*
*நெருப்பர்க்கு நீடம் பலவருக் கன்பர் குலநிலத்துக்*
*கருப்பற்று விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப்புனமே. ()*

**144.** பிரிவருமைகூறிவரைவுகடாதல்

*மறைப்புறக் கிளவியிற்*
*சிறைப்புறத் துரைத்தது.*

*பரிவுசெய் தாண்டம் பலத்துப் பயில்வோன் பரங்குன்றின்வாய்*
*அருவிசெய் தாழ்புனத் தைவனங் கொய்யவும் இவ்வனத்தே*
*பிரிவுசெய் தாலரி தேகொள்க பேயொடும் என்னும்பெற்றி*
*இருவிசெய் தாளின் இருந்தின்று காட்டும் இளங்கிளியே.(உசு)*

**145.** மயிலோடுகூறிவரைவுகடாதல்

*நீங்கரும்புனம்விடு நீள்பெருந்துயரம்*
*பாங்கிபகர்ந்து பருவரலுற்றது.*

*கணியார் கருத்தின்று முற்றிற் றியாஞ்சென்றும் கார்ப்புனமே*
*மணியார் பொழில்காள் மறத்திர்கண் டீர்மன்னும் அம்பலத்தோன்*
*அணியார் கயிலை மயில்காள் அயில்வேல் ஒருவர்வந்தால்*
*துணியா தனதுணிந் தாரென்னும் நீர்மைகள் சொல்லுமினே. ()*

**146.** வறும்புனங்கண்டுவருந்தல்

*மென்புனம்விடுத்து மெல்லியல்செல்ல*
*மின்போலிவேலோன் மெலிவுற்றது.*

*பொதுவினிற் றீர்த்தென்னை யாண்டோன் புலியூ ரரன்பொருப்பே*
*இதுவெனில் என்னின் றிருக்கின்ற வாறெம் இரும்பொழிலே*
*எதுநுமக் கெய்திய தென்னுற் றனிரறை யீண்டருவி*
*மதுவினிற் கைப்புவைத் தாலொத்த வாமற்றிவ் வான்புனமே.()*

**147.** பதிநோக்கிவருந்தல்

மதிநுதலரிவை பதிபுகலரிதென
மதிநனிகலங்கிப் பதிமிகவாடியது.

ஆனந்த மாக்கடல் ஆடுசிற் றம்பலம் அன்னபொன்னின்
தேனுந்து மாமலைச் சீறா ரிதுசெய்ய லாவதில்லை
வானுந்து மாமதி வேண்டி யழுமழப் போலுமன்றே
நானுந் தளர்ந்தனன் நீயுந் தளர்ந்தனை நன்னெஞ்சமே. (கஉ)

## கச. இரவுக்குறி :

**148.** இரவுக்குறிவேண்டல்

நள்ளிருட்குறியை வள்ளனிணைந்து
வீங்குமென்முலைப் பாங்கிக்குரைத்தது.

மருந்துநம் அல்லற் பிறவிப் பிணிக்கம் பலத்தமிர்தாய்
இருந்தனர் குன்றினின் றேங்கும் அருவிசென் றேர்திகழப்
பொருந்தின மேகம் புதைந்திருள் தூங்கும் புனையிறும்பின்
விருந்தினன் யானுங்கள் சீறா ரதனுக்கு வெள்வளையே. (க)

**149.** வழியருமைகூறிமறுத்தல்

இரவரலேந்தல் கருதியுரைப்பப்
பருவரற்பாங்கி அருமையுரைத்தது.

விசும்பினுக் கேணி நெறியன்ன சின்னெறி மேன்மழைதூங்
கசும்பினிற் றுன்னி அளைநுழைந் தாலொக்கும் ஐயமெய்யே
இசும்பினிற் சிந்தைக்கும் ஏறற் கரிதெழில் அம்பலத்துப்
பசும்பனிக் கோடு மிலைந்தான் மலயத்தெம் வாழ்பதியே. (உ)

**150.** நின்றுநெஞ்சுடைதல்

பாங்கிவிலங்கப் பருவரைநாடன்
நீங்கிவிலங்காது நெஞ்சுடைந்தது.

மாற்றேன் எனவந்த காலனை ஓல மிடவடர்த்த
கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன் கொடுங்குன்றின் நீள்குடுமி
மேற்றேன் விரும்பும் முடவனைப் போல மெலியுநெஞ்சே
ஆற்றேன் அரிய அரிவைக்கு நீவைத்த அன்பினுக்கே. (ந)

**151.** இரவுக்குறிநேர்தல்

தடவரைநாடன் தளர்வுதீர
மடநடைப்பாங்கி வகுத்துரைத்தது.

கூளி நிரைக்கநின் றம்பலத் தாடி குரைகழற்கீழ்த்
தூளி நிரைத்த சுடர்முடி யோயிவள் தோணசையால்
ஆளி நிரைத்தடல் ஆனைகள் தேரும் இரவில்வந்து
மீளி யுரைத்தி வினையேன் உரைப்பதென் மெல்லியற்கே. (௪)

**152.** உட்கோளவினாதல்

நெறிவிலக்குற்றவன் உறுதுயர்நோக்கி
ஆங்கொருசூழல் பாங்கிபகர்ந்தது.

வரையன் றொருகால் இருகால் வளைய நிமிர்த்துவட்கார்
நிரையன் றழலெழ எய்துநின் றோன்றில்லை யன்னநின்னூர்
விரையென்ன மென்னிழ லென்ன வெறியுறு தாதிவர்போ
துரையென்ன வோசிலம் பாநலம் பாவி யொளிர்வனவே. (௫)

**153.** உட்கொண்டுவினாதல்

தன்னைவினவத் தானவள்குறிப்பறிந்
தென்னைநின்னாட் டிகலணியென்றது.

செம்மல ராயிரந் தூய்க்கரு மால்திருக் கண்ணணியும்
மொய்ம்மலர் ஈர்ங்கழ லம்பலத் தோன்மன்னு தென்மலயத்
தெம்மலர் சூடிநின் றெச்சாந் தணிந்தென்ன நன்னிழல்வாய்
அம்மலர் வாட்கணல் லாயெல்லி வாய்நுமர் ஆடுவதே. (௬)

**154.** குறியிடங்கூறல்

இரவுக்குறியிவ ணென்றுபாங்கி
அரவக்கழலவற் கறியவுரைத்தது.

பனைவளர் கைம்மாப் படாத்தம் பலத்தரன் பாதம்விண்ணோர்
புனைவளர் சாரற் பொதியின் மலைப்பொலி சந்தணிந்து
சுனைவளர் காவிகள் சூடிப்பைந் தோகை துயில்பயிலுஞ்
சினைவளர் வேங்கைகள் யாங்கள்நின் றாடுஞ் செழும்பொழிலே.()

**155.** இரவுக்குறியேற்பித்தல்

அரவக்கழலவன் ஆற்ருனேன
இரவுக்குறி யேற்பித்தது.

மலவன் குரம்பையை மாற்றியம் மான்முதல் வானர்க்கப்பாற்
செலவன்பர்க் கோக்குஞ் சிவன்றில்லைக் கானலிற் சீர்ப்பெடையோ
டலவன் பயில்வது கண்டஞர் கூர்ந்தயில் வேலுரவோன்
செலவந்தி வாய்க்கண் டனனென்ன தாங்கொன்மன் சேர்துயிலே. ()

**156.** இரவரவுரைத்தல்

குரவரு குழலிக்
கிரவர வுரைத்தது.

மோட்டங் கதிர்முலைப் பங்குடைத் தில்லைமுன் னோன்கழற்கே
கோட்டந் தருநங் குருமுடி வெற்பன் மழைகுழுமி
நாட்டம் புதைத்தன்ன நள்ளிருள் நாக நடுங்கச்சிங்கம்
வேட்டந் திரிசரி வாய்வரு வான்சொல்லு மெல்லியலே. (கூ)

**157.** ஏதங்கூறிமறுத்தல்

இழுக்கம்பெரி திரவரினென
அழுக்கமெய்தி அரிவையுரைத்தது.

செழுங்கார் முழவதிர் சிற்றம் பலத்துப் பெருந்திருமால்
கொழுங்கான் மலரிடக் கூத்தயர் வோன்கழ லேத்தலர்போல்
முழங்கா ரரிமுரண் வாரண வேட்டைசெய் மொய்யிருள்வாய்
வழங்கா வதரின் வழங்கென்று மோவின்றெம் வள்ளலையே.()

**158.** குறைநேர்தல்

அலைவேலண்ணல் நிலைமைகேட்டுக்
கோலவேற்கண்ணி குறைநயந்தது.

ஓங்கு மொருவிட முண்டம் பலத்தும்பர் உய்யவன்று
தாங்கு மொருவன் தடவரை வாய்த்தழங் கும்மருவி
வீங்குஞ் சுனைப்புனல் வீழ்ந்தன் றழுங்கப் பிடித்தெடுத்து
வாங்கு மவர்க்கறி யேன்சிறி யேன்சொல்லும் வாசகமே.(கக)

**159.** குறைநேர்ந்தமைகூறல்

குறைநயந்தனள் நேறிகுழலியேன
எறிவேலண்ணற் கறியவுரைத்தது.

ஏனற் பசுங்கதி ரென்றாழ்க் கழிய எழிலியுன்னிக்
கானக் குறவர்கள் கம்பலை செய்யும்வம் பார்சிலம்பா
யானிற்றை யாமத்து நின்னருண் மேனிற்க நூற்றுச்சென்றேன்
தேனக்க கொன்றையன் றில்லையு ரூர்செல்லுஞ் செல்லல்களே.()

**160.** வரவுணர்ந்துரைத்தல்

வளமயிலெடுப்ப விளமயிற்பாங்கி
செருவேலண்ணல் வரவுரைத்தது.

முன்னு மொருவ ரிரும்பொழின் மூன்றற்கு முற்றுமிற்றூற்
பின்னு மொருவர்சிற் றம்பலத் தார்தரும் பேரருள்போல்
துன்னுமொ ரின்பமென் றேகைதந் தோகைக்குச் சொல்லுவபோல்
மன்னு மரவத்த வாய்த்துயில் பேரு மயிலினமே. (கரு)

**161.** தாய்துயிலறிதல்

ஊசன்மிசைவைத் தோள்ளமளியில்
தாயதுதுயில் தானறிந்தது.

கூடா ரரணெரி கூடக் கொடுஞ்சிலை கொண்டவண்டன்
சேடார் மதின்மல்லற் றில்லையன் ஞெய்சிறு கட்பெருவெண்
கோடார் கரிகுரு மாமணி யூசலைக் கோப்பழித்துத்
தோடார் மதுமலர் நாகத்தை நூக்குநஞ் சூழ்பொழிற்கே. ()

**162.** துயிலெடுத்துச்சேறல்

தாய்துயிலறிந் தாய்தருபவள்
மெல்லியற்குச் சொல்லியது.

விண்ணுக்கு மேல்வியன் பாதலக் கீழ்விரிநீருடுத்த
மண்ணுக்கு நாப்ப ணயந்துதென் றில்லைநின் றேன்மிடற்றின்
வண்ணக் குவளை மலர்கின் றனசின வாண்மிளிர்நின்
கண்ணுக்கு மேற்கண்டு காண்வண்டு வாழுங் கருங்குழலே.()

**163.** இடத்துய்த்துநீங்கல்

மைத்தடங்கண்ணியை உய்த்திடத்தோருபால்
நீங்கலுற்ற பாங்கிபகர்ந்தது.

நந்தீ வரமென்னு நாரண னுண்மலர்க் கண்ணிற்கெஃகந்
தந்தீ வரன்புலி யூரனை யாய்தடங் கண்கடந்த
இந்தீ வரமிவை காணின் னிருள்சேர் குழற்கெழில்சேர்
சந்தீ வரமுறி யும்வெறி வீயுந் தருகுவனே. (கசு)

**164.** தளர்வகன்றுரைத்தல்

வடுவகிரனைய வரிநெடுங்கண்ணியைத்
தடுவரியன்போடு தளர்வகன்றுரைத்தது.

காமரை வென்றகண் ணோன்றில்லைப் பல்கதி ரோனடைத்த
தாமரை யில்லின் இதழ்க்கத வந்திறந் தோதமியே
பாமரை மேகலை பற்றிச் சிலம்பொதுக் கிப்பையவே
நாமரை யாமத்தென் னோவந்து வைகி நயந்ததுவே. (கஎ)

**165.** மருங்கணைதல்

அன்புமிகுதியின் அளவளாயவளைப்
பொன்புனைவேலோன் புகழ்ந்துரைத்தது.

அகிலின் புகைவிம்மி யாய்மலர் வேய்ந்தஞ் சனமெழுதத்
தகிலுந் தனிவடம் பூட்டத் தகாள்சங் கரன்புலியூர்
இகலு மவரிற் றளருமித் தேம்பல் இடைஞெமியப்
புகிலு மிகவிங்ங னேயிறு மாக்கும் புணர்முலையே. (கஅ)

**166.** முகங்கண்டுமகிழ்தல்

முகையவிழ்குழலி முகமதிகண்டு
திகழ்வேலண்ணல் மகிழ்வுற்றது.

அழுந்தே னரகத் தியானென் றிருப்பவந் தாண்டுகொண்ட
செழுந்தேன் திகழ்பொழிற் றில்லைப் புறவிற் செறுவகத்த
கொழுந்தேன் மலர்வாய்க் குமுத மிவள்யான் குழூஉச்சுடர்கொண்
டெழுந்தாங் கதுமலர்த் தும்முயர் வானத் திளமதியே. (கசு)

**167.** பள்ளியிடத்துய்த்தல்

பிரிவதுகருதிய பெருவரைநாடன்
ஒள்ளிழைப்பாங்கியோடு பள்ளிகோள்கென்றது.

சுரும்புறு நீலங்கொய் யற்றமி நின்று துயில்பயின்மோ
அரும்பெறற் றோழியொ டாயத்து நாப்பண் அமரரொன்னார்
இரும்புறு மாமதில் பொன்னிஞ்சி வெள்ளிப் புரிசையன்றோர்
துரும்புறச் செற்றகொற் றத்தெம்பி ரான்றில்லைச் சூழ்பொழிற்கே. ()

**168.** வரவுவிலக்கல்

தெய்வமன்னவளைத் திருந்தமளிசேர்த்தி
மைவரைநாடனை வரவுவிலக்கியது.

நற்பகற் சோம னெரிதரு நாட்டத்தன் றில்லையன்ன
விற்பகைத் தோங்கும் புருவத் திவளின்மெய் யேயெளிதே
வெற்பகச் சோலையின் வேய்வளர் தீச்சென்று விண்ணினின்ற
கற்பகச் சோலை கதுவுங்கன் னாடவிக் கல்லதரே. (உக)

**169.** ஆற்றாதுரைத்தல்

வரைவுகடாய வாணுதற்றோழீக்
கருவரைநாடன் ஆற்றாதுரைத்தது.

பைவா யரவரை யம்பலத் தெம்பரன் பைங்கயிலைச்
செவ்வாய்க் கருங்கட் பெரும்பணைத் தோட்சிற் றிடைக்கொடியை
மொய்வார் கமலத்து முற்றிழை யின்றென்முன் னைத்தவத்தால்
இவ்வா றிருக்குமென் றேநிற்ப தென்றுமென் னின்னுயிரே. (உஉ)

**170.** இரக்கங்கூறிவரைவுகடாதல்

அதிர்கழலவ னகன்றவழி
யெதிர்வதறியா திரங்கியுரைத்தது.

பைவா யரவு மறியு மழுவும் பயின்மலர்க்கை
மொய்வார் சடைமுடி முன்னவன் றில்லையின் முன்னினக்கால்
செவ்வாய் கருவயிர்ச் சேர்த்திச் சிறியாள் பெருமலர்க்கண்
மைவார் குவளை விடுமன்ன நீண்முத்த மாலைகளே. (உந)

**171.** நிலவுவெளிப்படவருந்தல்

தனிவேலவற்குத் தந்தளர்வறியப்
பனிமதிவிளக்கம் பாங்கிபகர்ந்தது.

நாகந் தொழவெழி லம்பல நண்ணி நடநவில்வோன்
நாக மிதுமதி யேமதி யேநவில் வேற்கையெங்கள்
நாகம் வரவெதிர் நாங்கொள்ளு நள்ளிருள் வாய்நறவார்
நாக மலிபொழில் வாயெழில் வாய்த்தநின் னுயகமே. (உச)

**172.** அல்லகுறியறிவித்தல்

வல்லியன்னவள் அல்லகுறிப்பா
டறைப்புனற்றுறைவற்குச் சிறைப்புறத்துரைத்தது.

மின்னங் கலருஞ் சடைமுடி யோன்வியன் தில்லையன்னாய்
என்னங் கலமர லெய்திய தோவெழின் முத்தந்தொத்திப்
பொன்னங் கலர்புன்னைச் சேக்கையின் வாய்ப்புலம் புற்றுமுற்றும்
அன்னம் புலரு மளவுந் துயிலா தழுங்கினவே. (உரு)

**173.** கடலிடைவைத்துத்துயரறிவித்தல்

எறிகடன்மேல்வைத் திரவுருதுயரம்
அறைகழலவற் கறியவுரைத்தது.

சோத்துன் னடியமென் றோரைக் குழுமித்தொல் வானவர்சூழ்ந்
தேத்தும் படிநிற்ப வன்றில்லை யன்ன ளிவடுவள
ஆர்த்துன் னமிழ்துந் திருவு மதியு மிழந்தவநீ
பேர்த்து மிரைப்பொழி யாய்பழி நோக்காய் பெருங்கடலே.()

**174.** காமமிக்ககழிபடர்கிளவி

தாமமிக்க தாழ்குழலேழை
காமமிக்க கழிபடர்கிளவி.

மாதுற்ற மேனி வரையுற்ற வில்லிதில் லைநகர்சூழ்
போதுற்ற பூம்பொழில் காள்கழி காளெழிற் புள்ளினங்காள்
ஏதுற் றழிதியென் னீர்மன்னு மீர்ந்துறை வர்க்கிவளோ
தீதுற்ற தென்னுக்கென் னீரிது வோநன்மை செப்புமினே. ()

**175.** காப்புச்சிறைமிக்ககையறுகிளவி

மெய்யுறு காவலிற்
கையறு கிளவி.

இன்னற வார்பொழிற் றில்லை நகரிறை சீர்விழவிற்
பன்னிற மாலைத் தொகைபக லாம்பல் விளக்கிருளின்
துன்னற வுய்க்குமில் லோருந் துயிலிற் றுறைவர்மிக்க
கொன்னிற வேலொடு வந்திடின் ஞாளி குரைதருமே. (உஅ)

**176.** ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி

நாறுவார்குழல் நவ்விநோக்கி
ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி

தாருறு கொன்றையன் றில்லைச் சடைமுடி யோன்கயிலை
நீருறு கான்யா றளவில நீந்திவந் தானினது
போருறு வேல்வயப் பொங்குரு மஞ்சுக மஞ்சிவருஞ்
சூருறு சோலையின் வாய்வரற் பாற்றன்று தூங்கிருளே. (உகூ)

**177.** தன்னுட்கையாறெய்திடுகிளவி

மின்னுப்புரையும் அந்நுண்மருங்குல்
தன்னுட்கையா றெய்திடுகிளவி.

விண்டலை யாவர்க்கும் வேந்தர்வண் டில்லைமெல் லங்கழிசூழ்
கண்டலை யேகரி யாக்கன்னிப் புன்னைக் கலந்தகள்வர்
கண்டிலை யேவரக் கங்குலெல் லாமங்குல் வாய்விளக்கு
மண்டல மேபணி யாய்தமி யேற்கொரு வாசகமே. (௩0)

**178.** நிலைகண்டுரைத்தல்

நின்னினழிந்தனள் மின்னிடைமாதென
வரைவுதோன்ற வுரைசெய்தது.

பற்றொன் றிலார்பற் றுந் தில்லைப் பரன்பரங் குன்றினின்ற
புற்றொன் றரவன் புதல்வ னெனநீ புகுந்துநின்றால்
மற்றுன்று மாமல ரிட்டுன்னை வாழ்த்திவந் தித்தலன்றி
மற்றொன் று சிந்திப்ப ரேல்வல்ல ளோமங்கை வாழ்வகையே.()

**179.** இரவுறுதுயரங் கடலோடுசேர்த்தல்

எறிவேற்கண்ணி இரவுறுதுயரஞ்
சேறிகடலிடைச் சேர்த்தியுரைத்தது.

பூங்கணை வேளைப் பொடியாய் விழவிழித் தோன்புலியூர்
ஓங்கணை மேவிப் புரண்டு விழுந்தெழுந் தோலமிட்டுத்
தீங்கணைந் தோரல்லுந் தேறாய் கலங்கிச் செறிகடலே
ஆங்கணைந் தார்நின்னை யும்முள ரோசென் றகன்றவரே. (௱௭௯)

**180.** அலரறிவுறுத்தல்

அலைவேலண்ணல் மனமகிழருள்
பலராலறியப் பட்டதென்றது.

அலரா யிரந்தந்து வந்தித்து மாலா யிரங்கரத்தால்
அலரார் கழல்வழி பாடுசெய் தாற்கள வில்லொளிகள்
அலரா விருக்கும் படைகொடுத் தோன்றில்லை யானருள்போன்
றலராய் விளைகின்ற தம்பல்கைம் மிக்கைய மெய்யருளே. (௱௮௦)

## கரு. ஒருவழித்தணத்தல் :

**181.** அகன்றணைவுகூறல்

வழிவேறு படமன்னும்
பழிவேறு படுமென்றது.

புகழும் பழியும் பெருக்கிற் பெருகும் பெருகிநின்று
நிகழும் நிகழா நிகழ்த்தினல் லாலிது நீநினைப்பின்
அகழும் மதிலும் அணிதில்லை யோனடிப் போதுசென்னித்
திகழு மவர்செல்லல் போலில்லை யாம்பழி சின்மொழிக்கே. (க)

**182.** கடலோடுவரவுகேட்டல்

மணந்தவரோருவழித் தணந்ததற்கிரங்கி
மறிதிரைசேரும் எறிகடற்கியம்பியது.

ஆரம் பரந்து திரைபொரு நீர்முகில் மீன்பரப்பிச்
சீரம் பரத்திற் றிகழ்ந்தொளி தோன்றுந் துறைவர்சென்றூர்
போரும் பரிசு புகன்றன ரோபுலி யூர்ப்புனிதன்
சீரம்பர் சுற்றியெற் றிச்சிறந் தார்க்குஞ் செறிகடலே. (உ)

**183.** கடலோடுபுலத்தல்

செறிவளைச் சின்மொழி
எறிகடற் கியம்பியது.

பாணிகர் வண்டினம் பாடப்பைம் பொன்றரு வெண்கிழிதம்
சேணிகர் காவின் வழங்கும்புன் னைத்துறைச் சேர்ப்பர்திங்கள்
வாணிகர் வெள்வளை கொண்டகன் றூர்திறம் வாய்திறவாய்
பூணிகர் வாளர வன்புலி யூர்சுற்றும் போர்க்கடலே. (௩)

**184.** அன்னமோடாய்தல்

மின்னிடை மடந்தை
அன்னமோ டாய்ந்தது.

பகன்றா மரைக்கண் கெடக்கடந் தோன்புலி யூர்ப்பழனத்
தகன்றா மரையன்ன மேவண்டு நீல மணியணிந்து
முகன்றாழ் குழைச்செம்பொன் முத்தணி புன்னையின் னும்முரையா
தகன்றார் அகன்றே யொழிவர்கொல் லோநம் அகன்றுறையே.()

**185.** தேர்வழிநோக்கிக்கடலொடுகூறல்

மீன்றோய்துறைவர் மீளுமளவும்
மான்றேர்வழியை அழியேலென்றது.

உள்ளும் உருகி யுரோமஞ் சிலிர்ப்ப வுடையவனுட்
கொள்ளு மவரிலொர் கூட்டந்தந் தான்குனிக் கும்புலியூர்
விள்ளும் பரிசுசென் றூர்வியன் றேர்வழி தூரற்கண்டாய்
புள்ளும் திரையும் பொரச்சங்கம் ஆர்க்கும் பொருகடலே. (௫)

**186.** கடலிழைத்தல்

நீடலந் துறையிற்
கூடல் இழைத்தது.

ஆழி திருத்தும் புலியூ ருடையான் அருளினளித்
தாழி திருத்தும் மணற்குன்றின் நீத்தகன் றூர்வருகென்
றூழி திருத்திச் சுழிக்கணக் கோதிநை யாமலைய
வாழி திருத்தித் தரக்கிற்றி யோவுள்ளம் வள்ளலையே. (௬)

**187.** சுடரோடுபுலம்பல்

குணகடலெழுசுடர் குடகடற்குளிப்ப
மணமலிகுழலி மனம்புலம்பியது.

கார்த்தரங் கந்திரை தோணி சுருக்கடல் மீனெறிவோர்
போர்த்தரங் கந்துறை மானுந் துறைவர்தம் போக்குமிக்க
தீர்த்தரங் கன்றில்லைப் பல்பூம் பொழிற்செப்பும் வஞ்சினமும்
ஆர்த்தரங் கஞ்செய்யு மாலுய்யு மாறென்கொல் ஆழ்சுடரே.(எ)

**188.** பொழுதுகண்டுமயங்கல்

மயறுமாலை வருவதுகண்டு
கயறுகண்ணி கவலையுற்றது.

பகலோன் கரந்தனன் காப்பவர் சேயர்பற் றற்றவர்க்குப்
புகலோன் புகுநர்க்குப் போக்கரி யோனெவ ரும்புகலத்
தகலோன் பயிறில்லைப் பைம்பொழிற் சேக்கைகள் நோக்கினவால்
அகலோங் கிருங்கழி வாய்க்கொழு மீனுண்ட அன்னங்களே.(அ)

**189.** பறவையோடுவருந்தல்

செறிபிணிகைம்மிகச் சிற்றிடைப்பேதை
பறவைமேல்வைத்துப் பையுளெய்தியது.

பொன்னும் மணியும் பவளமும் போன்று பொலிந்திலங்கி
மின்னுஞ் சடையோன் புலியூர் விரவா தவரினுண்ணேய்
இன்னும் அறிகில வாலென்னை பாவம் இருங்கழிவாய்
மன்னும் பகலே மகிழ்ந்திரை தேரும்வண் டானங்களே. (கூ)

**190.** பங்கயத்தோடுபரிவுற்றுரைத்தல்

முருகவிழ் கான
லோடுபரி வுற்றது.

கருங்கழி காதற்பைங் கானலின் தில்லையெங் கண்டர்விண்டார்
ஒருங்கழி காதர மூவெயில் செற்றவொற் றைச்சிலைசூழ்ந்
தருங்கழி காதம் அகலுமென் றாழென் றலந்துகண்ணீர்
வருங்கழி காதல் வனசங்கள் கூப்பும் மலர்க்கைகளே. (கo)

**191.** அன்னமோடழிதல்

இன்னகையவள் இரவருதுயரம்
அன்னத்தோ டழிந்துரைத்தது.

*பூவல் தழீஇய அருண்முத லோன்றில்லைச் செல்வன்முந்நீர்
நாவல் தழீஇயவிந் நானிலந் துஞ்சும் நயந்தவின்பச்
சேவல் தழீஇச்சென்று தான்றுஞ்சும் யான்றுயி லாச்செயிரேம்
காவல் தழீஇயவர்க் கோதா தளிய களியன்னமே.* (கக)

**192.** வரவுணர்ந்துரைத்தல்

சென்றவர்வரவுணர்ந்து நின்றவள்நிலைமை
சிறப்புடைப்பாங்கி சிறைப்புறத்துரைத்தது.

*நில்லா வளைநெஞ்சம் நெக்குரு குந்நெடுங் கண்டுயிலா
கல்லா கதிர்முத்தங் காற்றுமெ னக்கட் டுரைக்கதில்லைத்
தொல்லோன் அருள்களில் லாரிற்சென் றூர்சென்ற செல்லல்கண்டாய்
எல்லார் மதியே யிதுநின்னை யானின் றிரக்கின்றதே.* (கஉ)

**193.** வருத்தமிகுதிகூறல்

நீங்கி யணைந்தவற்குப்
பாங்கி பகர்ந்தது.

*வளருங் கறியறி யாமந்தி தின்றுமம் மர்க்கிடமாய்த்
தளருந் தடவரைத் தண்சிலம் பாதன தங்கமெங்கும்
விளரும் விழுமெழும் விம்மும் மெலியும்வெண் மாமதிநின்
றொளிருஞ் சடைமுடி யோன்புலி யூரன்ன ஒண்ணுதலே.* (கங)

கசு. உடன்போக்கு:

**194.** பருவங்கூறல்

உருவது கண்டவள்
அருமை யுரைத்தது.

*ஓராகம் இரண்டெழி லாயொளிர் வோன்றில்லை யொண்ணுதலங்
கராகம் பயின்றமிழ் தம்பொதிந் தீர்ஞ்சுணங் காடகத்தின்
பராகம் சிதர்ந்த பயோதரம் இப்பரி சேபணைத்த
இராகங்கண் டால்வள்ள லேயில்லை யேயெமர் எண்ணுவதே.* (க)

**195.** மகட்பேச்சுரைத்தல்

படைத்துமொழிகிளவியிற் பணிமொழிப்பாங்கி
அடற்கதிர்வேலோற் கறியவுரைத்தது.

மணியக் கணியும் அரனஞ்சம் அஞ்சி மறுகிவிண்ணோர்
பணியக் கருணை தரும்பரன் றில்லையன் னாடிறத்துத்
துணியக் கருதுவ தின்றே துணிதுறை வாரிறைபொன்
அணியக் கருதுகின் றார்பலர் மேன்மேல் அயலவரே. (௨)

**196.** பொன்னணிவுரைத்தல்

பலபரிசினாலும் மலர்நெடுங்கண்ணியை
நன்னுதற்பாங்கி பொன்னணிவரென்றது.

பாப்பணி யோன்றில்லைப் பல்பூ மருவுசில் லோதியைநற்
காப்பணிந் தார்பொன் னணிவார் இனிக்கமழ் பூந்துறைவ
கோப்பணி வான்றோய் கொடிமுன்றில் நின்றிவை யேர்குழுமி
மாப்பணி லங்கள் முழங்கத் தழங்கும் மணமுரசே. (௩)

**197.** அருவிலையுரைத்தல்

பேதையரறிவு பேதைமையுடைத்தென
ஆதரத்தோழி அருவிலையுரைத்தது.

எனும்பால் அணியிறை யம்பலத் தோனெல்லை செல்குறுவோர்
நலம்பா வியமுற்றும் நல்கினும் கல்வரை நாடரம்ம
சிலம்பா வடிக்கண்ணி சிற்றிடைக் கேவிலை செப்பலொட்டார்
கலம்பா வியமுலை யின்விலை யென்னீ கருதுவதே. (௪

**198.** அருமைகேட்டழிதல்

பெருமைநாட் டத்தவள்
அருமைகேட் டழிந்தது.

விசும்புற்ற திங்கட் கழுமழப் போன்றினி விம்மிவிம்மி
அசும்புற்ற கண்ணோ டலறாய் கிடந்தரன் றில்லையன்னாள்
குயம்புற் றரவிடை கூரெயிற் றாறல் குழன்மொழியின்
நயம்பற்றி நின்று நடுங்கித் தளர்கின்ற நன்னெஞ்சமே. (௫

## 199. தளர்வறிந்துரைத்தல்

தண்டுறைவன் தளர்வறிந்து
கொண்டுநீங்கெனக் குறித்துரைத்தது.

மைதயங் குந்திரை வாரியை நோக்கி மடல்விழ்பூங்
கைதையங் கானலை நோக்கிக்கண் ணீர்கொண்டெங் கண்டர்தில்லைப்
பொய்தயங் குந்நுண் மருங்குனல் லாரையெல் லாம்புல்லினுள்
பைதயங் கும்மர வம்புரை யும்மல்குற் பைந்தொடியே. (௬)

## 200. குறிப்புரைத்தல்

நறைக்குழலி
குறிப்புரைத்தது.

மாவைவந் தாண்டமென் னோக்கிதன் பங்கர்வண் டில்லைமல்லல்
கோவைவந் தாண்டசெவ் வாய்க்கருங் கண்ணி குறிப்பறியேன்
பூவைதந் தாள்பொன்னம் பந்துதந் தாளென்னைப் புல்லிக்கொண்டு
பாவைதந் தாள்பைங் கிளியளித் தாளின்றென் பைந்தொடியே.()

## 201. அருமையுரைத்தல்

கானின்கடுமையும் மானின்மென்மையும்
பதியின்சேட்சியும் இதுவெனவுரைத்தது.

மெல்லியல் கொங்கை பெரியமின் னேரிடை மெல்லடிபூக்
கல்லியல் வெம்மைக் கடங்கடுந் திக்கற்று வானமெல்லாம்
சொல்லிய சீர்ச்சுடர்த் திங்களங் கண்ணித்தொல் லோன்புலியூர்
அல்லியங் கோதைநல் லாயெல்லை சேய்த்தெம் அகனகரே.(௮)

## 202. ஆதரங்கூறல்

அழற்றடம்புரையும் அருஞ்சுரமதுவும்
நிழற்றடமவட்கு நின்னொடேகினேனென்றது.

பிணையும் கலையும்வன் பேய்த்தே ரினைப்பெரு நீர்நசையால்
அணையும் முரம்பு நிரம்பிய அத்தமும் ஐயமெய்யே
இணையும் அளவுமில் லாவிறை யோனுறை தில்லைத்தண்பூம்
பணையும் தடமுமன் றேநின்னொ டேகினெம் பைந்தொடிக்கே.( )

**203.** இறந்துபாடுரைத்தல்

கார்த்தடமும் கயலும்போன்றீர்
வார்த்தடமுலையும் மன்னனுமென்றது.

இங்கய வென்னீ பணிக்கின்ற தேந்தல் இணைப்பதில்லாக்
கங்கையஞ் செஞ்சடைக் கண்ணுத லண்ணல் கடிகொடில்லைப்
பங்கயப் பாசடைப் பாய்தடம் நீயப் படர்தடத்துச்
செங்கய லன்றே கருங்கயற் கண்ணித் திருநுதலே. (கo)

**204.** கற்புநலனுரைத்தல்

பொய்யோத்தவிடை போக்குத்துணிய
ஐவயத்திடை வழக்குரைத்தது.

தாயிற் சிறந்தன்று நாண்டைய லாருக்கந் நாண்டைகசால்
வேயிற் சிறந்தமென் றோளிதிண் கற்பின் விழுமிதன்றீங்
கோயிற் சிறந்துசிற் றம்பலத் தாடுமெங் கூத்தப்பிரான்
வாயிற் சிறந்த மதியிற் சிறந்த மதிநுதலே. (கக)

**205.** துணிந்தமைகூறல்

பொருவேலண்ணல் போக்குத்துணிந்தமை
செருவேற்கண்ணிக்குச் சென்றுசெப்பியது.

குறப்பாவை நின்குழல் வேங்கையம் போதொடு கோங்கமவிராய்
நறப்பா டலம்புனை வார்வினை வார்தம்பி ரான்புலியூர்
மறப்பான் அடுப்பதொர் தீவினை வந்திடிற் சென்றுசென்று
பிறப்பான் அடுப்பினும் பின்னுந்துன் னத்தகும் பெற்றியரே.()

**206.** துணிவோடுவினவல்

சிலம்பன்றுணிவோடு செல்சுரநினைந்து
கலம்புனைகொம்பர் கலக்கமுற்றது.

நிழற்றலை தீநெறி நீரில்லை கானகம் ஓரிகத்தும்
அழற்றலை வெம்பரற் றென்பரென் னோதில்லை யம்பலத்தான்
கழற்றலை வைத்துக்கைப் போதுகள் கூப்பக்கல் லாதவர்போற்
குழற்றலைச் சொல்லிசெல் லக்குறிப் பாகுநங் கொற்றவர்க்கே.()

## 207. போக்கறிவித்தல்

பொருசுடர்வேலவன் போக்குத்துணிந்தமை
அரிவைக்கவள் அறியவுரைத்தது.

காயமும் ஆவியும் நீங்கள்சிற் றம்பல வன்கயிலைச்
சீயமும் மாவும் வெரீஇவரல் என்பல் செறிதிரைநீர்த்
தேயமும் யாவும் பெறினுங் கொடார்நமர் இன்னசெப்பின்
தோயமும் நாடுமில் லாச்சுரம் போக்குத் துணிவித்தவே. (௧௪)

## 208. நாணிழந்துவருந்தல்

கற்புநாணினும் முற்சிறந்தமையின்
சேணெறிசெல்ல வாணுதல்துணிந்தது.

மற்பாய் விடையோன் மகிழ்புலி யூரென்னொ டும்வளர்ந்த
பொற்பார் திருநாண் பொருப்பர் விருப்புப் புகுந்துந்தக்
கற்பார் கடுங்கால் கலக்கிப் பறித்தெறி யக்கழிக
இற்பால் பிறவற்க ஏழையர் வாழி எழுமையுமே. (௧௫)

## 209. துணிவெடுத்துரைத்தல்

செல்வமாதர் செல்லத்துணிந்தமை
தொல்வரைநாடற்குத் தோழிசொல்லியது.

கம்பஞ் சிவந்த சலந்தரன் ஆகங் கறுத்ததில்லை
நம்பன் சிவநகர் நற்றளிர் கற்சுர மாகுநம்பா
அம்பஞ்சி யாவம் புகமிக நீண்டரி சிந்துகண்ணாள்
செம்பஞ்சி யின்மிதிக் கிற்பதைக் கும்மலர்ச் சீறடிக்கே. (௧௬)

## 210. குறியிடங்கூறல்

மன்னியவிருளில் துன்னியகுறியில்
கோங்கிவர்கொங்கையை நீங்குகொண்டேன்றது.

முன்னோன் மணிகண்டம் ஒத்தவன் அம்பலந் தம்முடிதாழ்த்
துன்னா தவர்வினை போற்பறந் தோங்கும் எனதுயிரே
அன்னாள் அரும்பெற லாவியன் னையரு ளாசையினாற்
பொன்னார் மணிமகிழ்ப் பூவிழ யாம்விழை பொங்கிருளே. (௧௭)

**211.** அடியோடேவழிநினைந்தவனுளம்வாடல்

நெறியுறுகுழலியோடு நீங்கத்துணிந்த
உறுசுடர்வேலோன் உள்ளம்வாடியது.

பனிச்சந் திரனொடு பாய்புனல் சூடும் பரன்புலியூர்
அனிச்சந் திகழுமஞ் சீறடி யாவ அழல்பழுக்க
கனிச்செந் திரளன்ன கற்கடம் போந்து கடக்குமென்றால்
இனிச்சந்த மேகலை யாட்கென்கொ லாம்புகுந் தெய்துவதே.()

**212.** கொண்டுசென்றுய்த்தல்

வண்டமர் குழலியைக்
கண்டுகோள் கென்றது.

வைவந்த வேலவர் சூழ்வரத் தேர்வரும் வள்ளலுள்ளம்
தெய்வந் தருமிருள் தூங்கும் முழுதும் செழுமிடற்றின்
மைவந்த கோன்றில்லை வாழ்த்தார் மனத்தின் வழுத்துநர்போல்
மொய்வந்த வாவி தெளியும் துயிலுமிம் மூதெயிலே. (கக)

**213.** ஓம்படுத்துரைத்தல்

தேம்படு கோதையை
ஓம்படுத்தது.

பறந்திருந் தும்பர் பதைப்பப் படரும் புரங்கரப்பச்
சிறந்தெரி யாடிதென் றில்லையன் னொடிறத் துச்சிலம்பா
அறந்திருந் துன்னரு ளும்பிறி தாயின் அருமறையின்
திறந்திரிந் தார்கவி யும்முற்றும் வற்றுமிச் சேணிலத்தே. (உ௦

**214.** வழிப்படுத்துரைத்தல்

மதிநுதலியை வழிப்படுத்துப்
பதிவயிற்பெயருகும் பாங்கிபகர்ந்தது.

ஈண்டொல்லை யாயமும் ஔவையும் நீங்கவிவ் ஆர்க்கவ்வைதீர்த்
தாண்டொல்லை கண்டிடக் கூடுக நும்மையெம் மைப்பிடித்தின்
றுண்டெல்லை தீரின்பந் தந்தவன் சிற்றம் பலநிலவு
சேண்டில்லை மாநகர் வாய்ச்சென்று சேர்க திருத்தகவே. (உக)

**215.** மெல்லக்கொண்டேகல்

பஞ்சிமெல்லடிப் பணைத்தோளியை
வெஞ்சுரத்திடை மெலிவகற்றியது.

*பேணத் திருத்திய சீறடி மெல்லச்செல் பேரரவம்*
*பூணத் திருத்திய பொங்கொளி யோன்புலி யூர்புரையும்*
*மாணத் திருத்திய வான்பதி சேரும் இருமருங்கும்*
*காணத் திருத்திய போலுமுன் னாமன்ன கானங்களே.* (உஉ)

**216.** அடலேடுத்துரைத்தல்

வரிசிலையவர் வருகுவரெனப்
புரிதருகுழலிக் கருளவனுரைத்தது.

*கொடித்தேர் மறவர் குழாம்வெங் கரிநிரை கூடினென்கை*
*வடித்தே ரிலங்கெஃகின் வாய்க்குத வாமன்னும் அம்பலத்தோன்*
*அடித்தே ரலரென்ன அஞ்சுவன் நின்னைய ரென்னின்மன்னும்*
*கடித்தேர் குழன்மங்கை கண்டிடிவ் விண்டோய் கனவரையே.*()

**217.** அயர்வகற்றல்

இன்னல்வெங்கடத் தெறிவேலவன்
அன்னமன்னவள் அயர்வகற்றியது.

*முன்னோன் அருண்முன் னும் முன்னா வினையின் முனகர்துன் னும்*
*இன்னாக் கடறிதிப் போழ்தே கடந்தின்று காண்டுஞ்சென்று*
*பொன்னார் அணிமணி மாளிகைத் தென்புலி யூர்ப்புகழ்வார்*
*தென்னா எனவுடை யானட மாடுசிற் றம்பலமே.* (உச)

**218.** நெறிவிலக்கிக்கூறல்

சுரத்திடைக்கண்டவர் சுடர்க்குழைமாதொடு
சரத்தணிவில்லோய் தங்குகென்றது.

*விடலையுற் றாரில்லை வெம்முனை வேடர் தமியைமென்பூ*
*மடலையுற் றார்குழல் வாடினள் மன்னுசிற் றம்பலவர்க்*
*கடலையுற் றாரின் எறிப்பொழிந் தாங்கருக் கன்சுருக்கிக்*
*கடலையுற் றான்கடப் பாரில்லை யின்றிக் கடுஞ்சுரமே.* (உரு)

**219.** கண்டவர்மகிழ்தல்

*மண்டழற் கடத்துக்*
*கண்டவர் உரைத்தது.*

*அன்பணைத் தஞ்சொல்லி பின்செல்லும் ஆடவன் நீடவன்றன்*
*பின்பணைத் தோளி வருமிப் பெருஞ்சுரஞ் செல்வதன்று*
*பொன்பணைத் தன்ன இறையுறை தில்லைப் பொலிமலர்மேல்*
*நன்பணைத் தண்ணற வுண்ணளி போன்றுளிர் நாடகமே.* ()

**220.** வழிவிளையாடல்

*வன்றழற்கடத்து வடிவேலண்ணல்*
*மின்றங்கிடையோடு விளையாடியது.*

*கண்கடம் மாற்பயன் கொண்டனம் கண்டினிக் காரிகைநின்*
*பண்கட மென்மொழி யாரப் பருக வருகவின்னே*
*விண்கட நாயகன் றில்லையின் மெல்லியல் பங்கனெங்கோன்*
*தண்கடம் பைத்தடம் போற்கடுங் கானகம் தண்ணெனவே.* ()

**221.** நகரணிமைகூறல்

*வண்டமர் குழலியோடு*
*கண்டவர் உரைத்தது.*

*மின்றங் கிடையொடு நீவியன் றில்லைச்சிற் றம்பலவர்*
*குன்றங் கடந்துசென் றுனின்று தோன்றும் குரூஉக்கமலம்*
*துன்றங் கிடங்கும் துறைதுறை வள்ளைவெள் ளைநகையார்*
*சென்றங் கடைதட மும்புடை சூழ்தரு சேணகரே.* (உஅ)

**222.** நகர்காட்டல்

*கோடுங்கடங்கடந்த குழைமுகமாதர்க்குத்*
*தடங்கிடங்குசூழ் தன்னகர்காட்டியது.*

*மின்போல் கொடிநெடு வானக் கடலுள் திரைவிரிப்பப்*
*பொன்போல் புரிசை வடவரை காட்டப் பொலிபுலியூர்*
*மன்போல் பிறையணி மாளிகை சூலத்த வாய்மடவாய்*
*நின்போல் நடையன்னம் துன்னிமுன் றோன்றுநன் னீணகரே.* ()

**223.** பதிபரிசுரைத்தல்

கண்ணிவர்வளநகர் கண்டுசேன்றடைந்து
பண்ணிவர்மொழிக்குப் பதிபரிசுரைத்தது.

செய்குன் றுவையிவை சீர்மலர் வாவி விசும்பியங்கி
நைகின்ற திங்களைப் பாறும் பொழிலவை ஞாங்கரெங்கும்
பொய்குன்ற வேதிய ரோதிடம் உந்திடம் இந்திடமும்
எய்குன்ற வார்சிலை யம்பல வற்கிடம் ஏந்திழையே. (௩௦)

**224.** சேவிலிதேடல்

கவலையுற்ற காதற்றோழியைச்
சேவிலியுற்றுத் தெரிந்துவினையது.

மயிலெனப் பேர்ந்திள வல்லியின் ஒல்கிமென் மான்விழித்துக்
குயிலெனப் பேசுமெங் குட்டனெங் குற்றதென் நெஞ்சகத்தே
பயிலெனப் பேர்ந்தறி யாதவன் றில்லைப்பல் பூங்குழலாய்
அயிலெனப் பேருங்கண் ணியென்கொ லாமின் றயர்கின்றதே.()

**225.** அறத்தோடுநிற்றல்

சுடர்க்குழைப்பாங்கி படைத்துமொழிகிளவியிற்
சிறப்புடைச்சேவிலிக் கறத்தோடுநின்றது.

ஆளரிக் கும்மரி தாய்த்தில்லை யாவருக் கும்மெளி தாந்
தாளரிக் குன்றிற்றன் பாவைக்கு மேவித் தழறிகழ்வேற்
கோளரிக் குங்கிக ரன்னு ரொருவர் குருஉமலர்த்தார்
வாளரிக் கண்ணிகொண் டாள்வண்ட லாயத்தெம் வாணுதலே.()

**226.** கற்புநிலைக்கிரங்கல்

விற்புரைநுதலி கற்புநிலைகேட்டுக்
கோடாயுள்ளம் நீடாயழுங்கியது.

வடுத்தான் வகிர்மலர் கண்ணிக்குத் தக்கின்று தக்கன்முத்தீக்
கெடுத்தான் கெடலிறுல் லோன்றில்லைப் பன்மலர் கேழ்கிளர
மடுத்தான் குடைந்தன் றழுங்க அழுங்கித் தழீஇமகிழ்வுற்
றெடுத்தாற் கினியன வேயினி யாவன எம்மனைக்கே. (௩௩)

**227.** கவன்றுரைத்தல்

அவணிலை நினைந்து
சேவிலி கவன்றது.

முறுவலக் காறந்து வந்தென் முலைமுழு வித்தழுவிச்
சிறுவலக் காரங்கள் செய்தவெல் லாமுழு துஞ்சிதையத்
தெறுவலக் காலனைச் செற்றவன் சிற்றம் பலஞ்சிந்தியார்
உறுவலக் கானகந் தான்படர் வானும் ஒளியிழையே. (கூச)

**228.** அடிநினைந்திரங்கல்

வெஞ்சுரமும்மவள் பஞ்சிமெல்லடியும்
சேவிலிநினைந்து கவலையுற்றது.

தாமே தமக்கொப்பு மற்றில் லவர்தில்லைத் தண்ணணிச்சப்
பூமேல் மிதிக்கிற் பதைத்தடி பொங்குநங் காயெரியுந்
தீமேல் அயில்போற் செறிபரற் கானிற் சிலம்படிபாய்
ஆமே நடக்க அருவினை யேன்பெற்ற அம்மனைக்கே. (கூரு)

**229.** நற்றாய்க்குரைத்தல்

முகிழ்முலைமடந்தைக்கு முன்னியதறியத்
திகழ்மனைக்கிழத்திக்குச் சேவிலிசெப்பியது.

தழுவின கையிறை சோரின் தமியமென் றேதளர்வுற்
றழுவினை செய்யுநை யாவஞ்சொற் பேதை யறிவுவிண்ணோர்
குழுவினை யுய்யநஞ் சுண்டம் பலத்துக் குனிக்கும்பிரான்
செழுவின தாள்பணி யார்பிணி யாலுற்றுத் தேய்வித்ததே. ()

**230.** நற்றாய்வருந்தல்

கோடாய் கூற
நீடாய் வாடியது.

யாழியன் மென்மொழி வன்மனப் பேதையொர் ஏதிலன்பின்
தோழியை நீத்தென்னை முன்னே துறந்துதன் னூர்கண்முன்னே
வாழியிம் மூதூர் மறுகச்சென் றாளன்று மால்வணங்க
ஆழிதந் தானம் பலம்பணி யாரின் அருஞ்சுரமே. (கூஎ)

**231.** கிளிமொழிக்கிரங்கல்

மெய்த்தகைமாது வெஞ்சுரஞ்செல்லத்
தத்தையைநோக்கித் தாய்புலம்பியது.

*கொன்னுனை வேலம் பலவற் றொழூரிற்குன் றங்கொடியோள்*
*என்னணஞ் சென்றனள் என்னணஞ் சேரும் எனவயரா*
*என்னனை போயினள் யாண்டையள் என்னைப் பருந்தடுமென்*
*றென்னனை போக்கன்றிக் கிள்ளையென் னுள்ளத்தை யீர்கின்றதே. ()*

**232.** சுடரோடிரத்தல்

வெஞ்சுரந்தணிக்கெனச் செஞ்சுடரவற்கு
வேயமர்தோளி தாயர்பராயது.

*பெற்றே னெடுங்கிள்ளை வாட முதுக்குறை பெற்றிமிக்கு*
*நற்றேன் மொழியழற் கானடந் தாண்முகம் நானனுகப்*
*பெற்றேன் பிறவி பெருமற்செய் தோன்றில்லைத் தேன்பிறங்கு*
*மற்றேன் மலரின் மலர்த்திரந் தேன்சுடர் வானவனே. (ந.கூ)*

**233.** பருவநினைந்துகவறல்

முற்றா முலைக்கு
நற்றாய் கவன்றது.

*வைம்மலர் வாட்படை யூரற்குச் செய்யுங்குற் றேவன்மற்றென்*
*மைம்மலர் வாட்கண்ணி வல்லள்கொல் லாந்தில்லை யான்மலைவாய்*
*மொய்ம்மலர்க் காந்தளைப் பாந்தளென் றெண்ணித்துண் ணென்றொ*
*கைம்மல ராற்கண் புதைத்துப் பதைக்குமெங் கார்மயிலே. [ளித்துக் ()*

**234.** நாடத்துணிதல்

கோடாய் மடந்தையை
நாடத் துணிந்தது.

*வேயின தோளி மெலியல்விண் ணோர்தக்கன் வேள்வியின்வாய்ப்*
*பாயின சீர்த்தியன் அம்பலத் தானைப் பழித்துமும்மைத்*
*தீயின தாற்றல் சிரங்கண் ணிழந்து திசைதிசைதாம்*
*போயின எல்லையெல் லாம்புக்கு நாடுவன் பொன்னினையே. (சக)*

**235.** கோடிக்குறிபார்த்தல்

நற்றாய் நயந்து
சொற்புட் பராயது.

பணங்களஞ் சாலும் பருவர வார்த்தவன் றில்லையன்ன
மணங்கொளஞ் சாயலும் மன்னனும் இன்னே வரக்கரைந்தால்
உணங்கலஞ் சாதுண்ண லாமொண் ணிணப்பலி ஒக்குவன்மாக்
குணங்களஞ் சாற்பொலி யுந்நல சேட்டைக் குலக்கொடியே. (௬௨)

**236.** சோதிடங்கேட்டல்

சித்தந்தளர்ந்து தேடுங்கோடாய்
உய்த்துணர்வோரை உரைமினென்றது.

முன்னுங் கடுவிடம் உண்டதென் றில்லைமுன் னோனருளால்
இன்னுங் கடியிக் கடிமனைக் கேமற் றியாமயர
மன்னுங் கடிமலர்க் கூந்தலைத் தான்பெறு மாறுமுண்டேல்
உன்னுங்கள் தீதின்றி ஓதுங்கள் நான்மறை உத்தமரே. (௬௩)

**237.** சுவடுகண்டறிதல்

சுவடுபடு கடத்துச்
செவிலிகண் டறிந்தது.

தெள்வன் புனற்சென்னி யோனம்ப லஞ்சிந்தி யாரினஞ்சேர்
முள்வன் பரன்முரம் பத்தின்முன் செய்வினை யேனெடுத்த
ஒள்வன் படைக்கண்ணி சீறடி யிங்கிவை உங்குவையக்
கள்வன் பகட்டுர வோனடி யென்று கருதுவனே. (௬௪)

**238.** சுவடுகண்டிரங்கல்

கடத்திடைக்காரிகை அடித்தலங்கண்டு
மன்னருட்கோடாய் இன்னலெய்தியது.

பாலொத்த நீற்றம் பலவன் கழல்பணி யார்பிணிவாய்க்
கோலத் தவிசின் மிதிக்கிற் பதைத்தடி கொப்புள்கொள்ளும்
வேலொத்த வெம்பரற் கானத்தின் இன்றோர் விடலைபின்போங்
காலொத் தனவினை யேன்பெற்ற மாணிழை கானமலரே. (௬௫)

**239.** வேட்டமாதரைக்கேட்டல்

மென்மலர்கோய்யும் வேட்டமாதரைப்
பின்வருசெவிலி பெற்றிவினயது.

*பேதைப் பருவம்பின் சென்றது முன்றில் எனைப்பிரிந்தால்*
*ஊதைக் கலமரும் வல்லியொப் பாண்முத்தன் றில்லையன்னாள்*
*ஏதிற் சுரத்தய லானொடின் றேகினள் கண்டனையே*
*போதிற் பொலியுந் தொழிற்புலிப் பற்குரற் பொற்றொடியே.* ()

**240.** புறவோடுபுலத்தல்

காட்டுப் புறவோடு
வாட்டம் உரைத்தது.

*புயலன் றலர்சடை யேற்றவன் றில்லைப் பொருப்பரசி*
*பயலன் றனைப்பணி யாதவர் போன்மிகு பாவஞ்செய்தேற்*
*கயலன் றமியனஞ் சொற்றுணை வெஞ்சுர மாதர்சென்றால்*
*இயலன் றெனக்கிற் றிலைமற்று வாழி எழிற்புறவே.* (சஎ)

**241.** குரவோடுவருந்தல்

தேடிச்சென்ற செவிலித்தாயர்
ஆடற்குரவோடு வாடியுரைத்தது.

*பாயும் விடையோன் புலியூ ரனையவென் பாவைமுன்னே*
*காயுங் கடத்திடை யாடிக் கடப்பவுங் கண்டுநின்று*
*வாயுந் திறவாய் குழையெழில் வீசவண் டோலுறுத்த*
*நீயுநின் பாவையும் நின்று நிலாவிடு நீள்குரவே.* (சஅ)

**242.** விரதியரைவினவல்

வழிவருகின்ற மாவிரதியரை
மொழிமின்களென்று முன்னிமொழிந்தது.

*சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கஞ் சூழ்சடைவெண்*
*பொத்திய கோலத்தி னீர்புலி யூரம் பலவர்க்குற்ற*
*பத்தியர் போலப் பணைத்திறு மாந்த பயோதரத்தோர்*
*பித்திதற் பின்வர முன்வரு மோவொர் பெருந்தகையே.* (சகூ)

**243.** வேதியரைவினாவல்

மாதின்பின் வருஞ்செவிலி
வேதியரை விரும்பிவினாயது.

வெதிரேய் கரத்துமென் றோலேய் சுவல்வெள்ளை நூலிற்கொண்மூ
அதிரேய் மறையினிவ் வாறுசெல் வீர்தில்லை யம்பலத்துக்
கதிரேய் சடையோன் கரமா னெனவொரு மான்மயில்போல்
எதிரே வருமே சுரமே வெறுப்பவொர் ஏந்தலொடே. (௫௦

**244.** புணர்ந்துடன்வருவோரைப்பொருந்திவினாவல்

புணர்ந்துடன்வரும் புரவலனொருபால்
அணங்கமர்கோதையை ஆராய்ந்தது.

மீண்டா ரெனவுவந் தேன்கண்டு நும்மையிம் மேதகவே
பூண்டா ரிருவர்முன் போயின ரேபுலி யூரெனைநின்
றாண்டான் அருவரை யாளியன் னானைக்கண் டேனயலே
தூண்டா விளக்கனை யாயென்னை யோவன்னை சொல்லியதே.(

**245.** வியந்துரைத்தல்

வேங்கைபட்டதும் பூங்கொடிநிலையும்
நாடாவருங் கோடாய்கூறியது.

பூங்கயி லாயப் பொருப்பன் றிருப்புலி யூரதென்னத்
தீங்கையி லாச்சிறி யாணின்ற திவ்விடம் சென்றெதிர்ந்த
வேங்கையின் வாயின் வியன்கைம் மடுத்துக் கிடந்தலற
ஆங்கயி லாற்பணி கொண்டது திண்டிறல் ஆண்டகையே. (௫௨

**246.** இயைபெடுத்துரைத்தல்

சேயிழையோடு செம்மல்போதர
ஆயிழைபங்கனென் றயிர்த்தேமென்றது.

மின்றொத் திடுகழல் நூபுரம் வெள்ளைசெம் பட்டுமின்ன
ஒன்றொத் திடவுடை யாளொடொன் றும்புலி யூரனென்றே
நன்றொத் தெழிலைத் தொழவுற் றனமென்ன தோர்நன்மைதான்
குன்றத் திடைக்கண் டனமன்னை நீசொன்ன கொள்கையரே.()

**247.** மீளவுரைத்தல்

கடுங்கடங்கடந்தமை கைத்தாய்க்குரைத்து
நடுங்கன்மின்மீண்டு நடமினென்றது.

மீள்வது செல்வதன் றன்னையிவ் வெங்கடத் தக்கடமாக்
கீள்வது செய்த கிழவோ னெடுங்கிளர் கெண்டையன்ன
நீள்வது செய்தகண் ணெளிந் நெடுஞ்சுரம் நீந்திமெம்மை
ஆள்வது செய்தவன் றில்லையின் எல்லை அணுகுவரே. (௫௪)

**248.** உலகியல்புரைத்தல்

செவிலியது கவலைதீர
மன்னியவுலகியல் முன்னியுரைத்தது.

சுரும்பிவர் சந்தும் தொடுகடன் முத்தும்வெண் சங்குமெங்கும்
விரும்பினர் பாற்சென் றுமெய்க்கணி யாம்வியன் கங்கையென்னும்
பெரும்புனல் சூடும் பிரான்சிவன் சிற்றம் பலமனைய
கரும்பன மென்மொழி யாருமந் நீர்மையர் காணுநர்க்கே. (௫௫)

**249.** அழுங்குதாய்க்குரைத்தல்

செழும்பணை யணைந்தமை
அழுங்குதாய்க் குரைத்தது.

ஆண்டில் எடுத்தவ ராமிவர் தாமவர் அல்குவர்போய்த்
தீண்டில் எடுத்தவர் தீவினை தீர்ப்பவன் தில்லையின்வாய்த்
தூண்டில் எடுத்த வராறெங்கொ டெற்றப் பழம்விழுந்து
பாண்டில் எடுத்தபஃ றாமரை கீழும் பழனங்களே. (௫௬)

## ௧எ. வரைவுமுடுக்கம் :

**250.** வருத்தமிகுதிகூறிவரைவுகடாதல்

இரவுக்குறியிடத் தேந்திழைப்பாங்கி
வரைவுவேண்டுதல் வரவுரைத்தது.

எழுங்குலை வாழையி னின்கனி தின்றிள மந்தியந்தண்
செழுங்குலை வாழை நிழலிற் றுயில்சிலம் பாமுனைமேல்
உழுங்கொலை வேற்றிருச் சிற்றம்பலவரை யுன்னலர்போல்
அழுங்குலை வேலன்ன கண்ணிக்கென் னோநின் அருள்வகையே. (௧)

**251.** பெரும்பான்மைகூறிமறுத்தல்

குலம்புரி கோம்பர்க்குச்
சிலம்பன் செப்பியது.

பரம்பயன் தன்னடி யேனுக்குப் பார்விசும் பூடுருவி
வரம்பயன் மாலறி யாத்தில்லை வானவன் வானகஞ்சேர்
அரம்பையர் தம்மிட மோவன்றி வேழத்தின் என்புநட்ட
குரம்பையர் தம்மிட மோவிடந் தோன்றுமிக் குன்றிடத்தே. (உ)

**252.** உள்ளதுகூறிவரைவுகடாதல்

இன்மையுரைத்த மன்னனுக்கு
மாழைநோக்கி தோழியுரைத்தது.

சிறார்கவண் வாய்த்த மணியிற் சிதைபெருந் தேனிழுமென்
றிறால்கழி வுற்றெஞ் சிறுகுடி ஊன்றும் இடமிதெந்தை
உறாவரை யுற்றார் குறவர்பெற் றாளுங் கொடிச்சியும்பர்
பெறாவருள் அம்பல வன்மலைக் காத்தும் பெரும்புனமே. (ந)

**253.** ஏதங்கூறியிரவரவுவிலக்கல்

இரவருதுயரம் ஏந்தலுக்கெண்ணிப்
பருவரலெய்திப் பாங்கிபகர்ந்தது.

கடந்தொறும் வாரண வல்சியின் நாடிப்பல் சீயங்கங்குல்
இடந்தொறும் பார்க்கும் இயவொரு நீயெழில் வேலின்வந்தால்
படந்தொறுந் தீயர வன்னம் பலம்பணி யாரினெம்மைத்
தொடர்ந்தொறுந் துன்பென்ப தேயன்ப நின்னருள் தோன்றுவதே. ()

**254.** பழிவரவுரைத்துப் பகல்வரவுவிலக்கல்

ஆங்ஙனமொழுகும் அடல்வேலண்ணலைப்
பாங்கியைய பகல்வரலென்றது.

களிறற்ற செல்லல் களைவயிற் பெண்மரங் கைஞ்ஞெமிர்த்துப்
பிளிறுற்ற வானப் பெருவரை நாட பெடைநடையோ
டொளிறுற்ற மேனியன் சிற்றம் பலநெஞ் சுறாதவர்போல்
வெளிறுற்ற வான்பழி யாம்பகல் நீசெய்யும் மெய்யருளே. (ரு)

**255.** தோழுதிரந்துகூறல்.

இரவரவின் ஏதமஞ்சிச்
சுரிதருகுழற் றோழிசொல்லியது.

கழிகட் டலைமலை வோன்புலி யூர்கரு தாதவர்போல்
குழிகட் களிறு வெரீஇயரி யாளி குழீஇவழங்காக்
கழிகட் டிரவின் வரல்கழல் கைதொழு தேயிரந்தேன்
பொழிகட் புயலின் மயிலிற் றுவளும் இவள்பொருட்டே. (சு)

**256.** தாயறிவுகூறல்

சிறைப்புறத்துச் செம்மல்கேட்ப
வெறிக்குழற்பாங்கி மெல்லியற்குரைத்தது.

விண்ணுஞ் செலவறி யாவெறி யார்கழல் வீழ்சடைத்தீ
வண்ணன் சிவன்றில்லை மல்லெழிற் கானல் அரையிரவின்
அண்ணல் மணிநெடுந் தேர்வந்த துண்டாம் எனச்சிறிது
கண்ணுஞ் சிவந்தன்னை யென்னையும் நோக்கினள் கார்மயிலே.()

**257.** மந்திமேல்வைத்துவரைவுகடாதல்

வரிவளையை வரைவுகடாவி
அரிவைதோழி உரைபகர்ந்தது.

வான்றோய் பொழிலெழில் மாங்கனி மந்தியின் வாய்க்கடுவன்
தேன்றோய்த் தருத்தி மகிழ்வகண் டாடிரு நீண்முடிமேல்
மீன்றோய் புனற்பெண்ணை வைத்துடை யாளையும் மேனிவைத்தான்
வான்றோய் மதிற்றில்லை மாநகர் போலும் வரிவளையே. (அ

**258.** காவன்மேல்வைத்துக்கண்டுயிலாமைகூறல்

நகர் காவலின்
மிகுகழி காதல்.

நறைக்கண் மலிகொன்றை யோனின்று நாடக மாடுதில்லைச்
சிறைக்கண் மலிபுனற் சீர்நகர் காக்குஞ்செவ் வேலிளைஞர்
பறைக்கண் படும்படுந் தோறும் படாமுலைப் பைந்தொடியா
கறைக்கண் மலிகதிர் வேற்கண் படாது கலங்கினவே. (கூ

**259.** பகலுடம்பட்டாள்போன்றிரவரவுவிலக்கல்

விரைதரு தாரோய்
இரவரல் என்றது.

*கலரா யினர்நினை யாத்தில்லை யம்பலத் தான்கழற்கன்*
*பிலரா யினர்வினை போலிருள் தூங்கி முழங்கிமின்னிப்*
*புலரா இரவும் பொழியா மழையும்புண் ணின்னுழைவேல்*
*மலரா வருமருந் தும்மில்லை யோநும் வரையிடத்தே.* (கo)

**260.** இரவுடம்பட்டாள்போன்றுபகல்வரவுவிலக்கல்

இகலடு வேலோய்
பகல்வரல் என்றது.

*இறவரை யும்பர்க் கடவுட் பராய்நின் றெழிலியுன்னிக்*
*குறவரை யார்க்குங் குளிர்வரை நாட கொழும்பவள*
*நிறவரை மேனியன் சிற்றம் பலநெஞ் சுறாதவர்போல்*
*உறவரை மேகலை யாட்கல ராம்பகல் உன்னருளே.* (கக)

**261.** இரவும்பகலும்வரவுவிலக்கல்

இரவும் பகலும்
வரவொழி கென்றது.

*சுழியா வருபெரு நீர்சென்னி வைத்தென்னைத் தன்றொழும்பிற்*
*கழியா அருள்வைத்த சிற்றம் பலவன் கரந்தருமான்*
*விழியா வரும்புரி மென்குழ லாடிறத் தையமெய்யே*
*பழியாம் பகல்வரின் நீயிர வேதும் பயனில்லையே.* (கஉ)

**262.** காலங்கூறிவரைவுகடாதல்

*முந்தியபொருளைச் சிந்தையில்வைத்து*
வரைதருகிளவியிற் றெரியவுரைத்தது.

*மையார் கதலி வனத்து வருக்கைப் பழம்விழுதேன்*
*எய்யாத யின்றிள மந்திகள் சோரும் இருஞ்சிலம்பா*
*மெய்யா அரியதென் அம்பலத் தான்மதி யூர்கொள்வெற்பின்*
*மொய்யார் வளரிள வேங்கைபொன் மாலையின் முன்னினவே.*()

**263.** கூறுவிக்குற்றல்

ஒத்ததோவ்வா துரைத்ததோழி
கோத்தவிழ்கோதையாற் கூறுவிக்குற்றது.

தேமாம் பொழிற்றில்லைச் சிற்றம் பலத்துவிண் ணோர்வணங்க
நாமா தரிக்க நடம்பயில் வோனைநண் ணாதவரின்
வாமாண் கலைசெல்ல நின்றார் கிடந்தநம் அல்லல்கண்டால்
தாமா அறிகில ராயினென் னாஞ்சொல்லுந் தன்மைகளே. (கச)

**264.** சேலவுநினைந்துரைத்தல்

பாங்கிநெருங்கப் பணிமொழிமொழிந்து
தேங்கமழ்சிலம்பற்குச் சிறைப்புறக்கிளவி.

வல்சியின் எண்கு வளர்புற் றகழமல் கும்மிருள்வாய்ச்
செல்வரி தன்றுமன் சிற்றம் பலவரைச் சேரலர்போல்
கொல்கரி சீயம் குறுகா வகைபிடி தானிடைச்செல்
கல்லதர் என்வந்த வாறென்ப வர்ப்பெறின் கார்மயிலே. (கரு)

**265.** போலிவழிவுரைத்துவரைவுகடாதல்

வரைவுவிரும்பும் மன்னுயிர்ப்பாங்கி
விரைதருகுழலி மெலிவுரைத்தது.

வாரிக் களிற்றின் மருப்புகு முத்தம் வரைமகளிர்
வேரிக் களிக்கும் விழுமலை நாட விரிதிரையின்
நாரிக் களிக்கமர் நன்மாச் சடைமுடி நம்பர்தில்லை
ஏரிக் களிக்கரு மஞ்ஞையிந் நீர்மையென் எய்துவதே. (கசா)

## கஅ. வரைபொருட்பிரிதல் :

**266.** முலைவிலைகூறல்

கோவலவேற் கண்ணிக்கு
விலையிலை யென்றது.

குறைவிற்கும் கல்விக்கும் செல்விற்கும் நின்குலத் திற்கும்வந்தோர்
நிறைவிற்கும் மேதகு நீதிக்கும் ஏற்பினல் லாணிணையின்
இறைவிற் குலாவரை யேந்திவண் டில்லையன் ஏழ்பொழிலும்
உறைவிற் குலாறுத் லாள்விலை யோமெய்ம்மை ஓதுநர்க்கே. (க)

**267.** வருமதுகூறிவரைவுடம்படுத்தல்

தோடேத்தனவிடுத்துத் தோகைதோளேய்
திடுக்கண்பெரி திரவரினென்றது.

வடுத்தன நீள்வகிர்க் கண்ணிவெண் ணித்தில வாணகைக்குத்
தொடுத்தன நீவிடுத் தெய்தத் துணியென்னைத் தன்றொழும்பிற்
படுத்தநன் னீள்கழல் ஈசர்சிற் றம்பலம் தாம்பணியார்க்
கடுத்தன தாம்வரிற் பொல்லா திரவினின் ஆரருளே. (உ)

**268.** வரைபொருட்பிரிவையுரையெனக்கூறல்

ஆங்கவள்வயின் நீங்கலுற்றவன்
இன்னுயிர்த்தோழிக்கு முன்னிமொழிந்தது.

குன்றங் கிடையுங் கடந்துமர் கூறும் நிதிகொணர்ந்து
மின்றங் கிடைநும்மை யும்வந்து மேவுவன் அம்பலஞ்சேர்
மன்றங் கிடைமரு தேகம்பம் வாஞ்சியம் அன்னபொன்னைச்
சென்றங் கிடைகொண்டு வாடா வகைசெப்பு தேமொழியே.()

**269.** நீயேகூறென்றல்

காய்கதிர்வேலோய் கனங்குழையவட்கு
நீயேயுரை நின்செலவென்றது.

கேழே வரையுமில் லோன்புலி யூர்ப்பயில் கிள்ளையன்ன
யாழேர் மொழியாள் இரவரி னும்பகற் சேறியென்று
வாழே னெனவிருக் கும்வரிக் கண்ணியை நீவருட்டித்
தாழே னெனவிடைக் கட்சொல்லி யேகு தனிவள்ளலே. (ச)

**270.** சொல்லாதேகல்

நிரைவளை வாட
உரையா தகன்றது.

வருட்டிற் றிகைக்கும் வசிக்கிற் றுளங்கும் மனமகிழ்ந்து
தெருட்டிற் றெளியலள் செப்பும் வகையில்லை சீரருக்கன்
குருட்டிற் புகச்செற்ற கோன்புலி யூர்குறு கார்மனம்போன்
றிருட்டிற் புரிகுழ லாட்கெங்ங னேசொல்லி யேகுவனே. (ரு)

**271.** பிரிந்தமைகூறல்

தேங்கமழ் குழலிக்குப்
பாங்கி பகர்ந்தது.

நல்லாய் நமக்குற்ற தென்னென் றுரைக்கேன் நமர்தொடுத்த
எல்லா நிதியும் உடன்விடுப் பானிமை யோரிறைஞ்சும்
மல்லார் கழலழல் வண்ணர்வண் டில்லை தொழார்களல்லாற்
செல்லா அழற்கடம் இன்றுசென் றார்நம் சிறந்தவரே. (சு)

**272.** நெஞ்சொடுகூறல்

கல்வரைநாடன் சொல்லாதகல
மின்னொளிமருங்குல் தன்னொளிதளர்ந்தது.

அருந்தும் விடமணி யாமணி கண்டன்மற் றண்டர்க்கெல்லாம்
மருந்தும் அமிர்தமும் ஆகுமுன் னோன்றில்லை வாழ்த்தும்வள்ளல்
திருந்துங் கடனெறி செல்லுமிவ் வாறு சிதைக்குமென்றால்
வருந்தும் மடநெஞ்ச மேயென்ன யாமினி வாழ்வகையே. (எ)

**273.** நெஞ்சொடுவருந்தல்

வெற்பன் நீங்கப்
பொற்பு வாடியது.

ஏர்ப்பின்னை தோண்முன் மணந்தவன் ஏத்த எழிறிகழுஞ்
சீர்ப்பொன்னை வென்ற செறிகழ லோன்றில்லைச் சூழ்பொழில்வாய்க்
கார்ப்புன்னை பொன்னவிழ் முத்த மணலிற் கலந்தகன்றார்
தேர்ப்பின்னைச் சென்றவென் னெஞ்சென் கொலாமின்று செய்கின்றதே

**274.** வருத்தங்கண்டுரைத்தல்

அழலுறுகோதையின் விழுமுறுபேதையை
நீங்கலரெனப் பாங்கிபகர்ந்தது.

கானமர் குன்றர் செவியுற வாங்கு கணைதுணையாம்
மானமர் நோக்கியர் நோக்கென மானற் றொடைமடக்கும்
வானமர் வெற்பர்வண் டில்லையின் மன்னை வணங்கலர்போல்
தேனமர் சொல்லிசெல் லார்செல்லல் செல்லல் திருநுதலே. (கூ)

**275.** வழியொழுகிவற்புறுத்தல்

சூழிருங் கூந்தலைத்
தோழி தெருட்டியது.

மதுமலர்ச் சோலையும் வாய்மையும் அன்பும் மருவிவெங்கான்
கதுமெனப் போக்கும் நிதியின ருக்குமுன் னிக்கனுழ்ந்தால்
னொதுமலர் நோக்கமொர் மூன்றுடை யோன்றில்லை நோக்கலர்போல்
இதுமலர்ப் பாவைக்கென் னோவந்த வாறென்பர் ஏந்திழையே. (கo)

**276.** வன்புறையெதிரழிந்திரங்கல்

வன்கறைவேலோன் வரைவுநீட
வன்புறையழிந்தவண் மனமழுங்கியது.

வந்தாய் பவரையில் லாமயில் முட்டை இளையமந்தி
பந்தா டிரும்பொழிற் பல்வரை நாடன்பண் போவினிதே
கொந்தார் நறுங்கொன்றைக் கூத்தன்றென் றில்லை தொழார்குழுப்போல்
சிந்தா குலமுற்றுப் பற்றின்றி நையுந் திருவினர்க்கே. (கக)

**277.** வாய்மைகூறிவருத்தந்தணித்தல்

வேற்றடங் கண்ணியை
ஆற்று வித்தது.

மொய்யென்ப தேயிழை கொண்டவன் என்னைத்தன் மொய்கழற்காட்
செய்யென்ப தேசெய்த வன்றில்லைச் சூழ்கடற் சேர்ப்பர்சொல்லும்
பொய்யென்ப தேகருத் தாயிற் புரிகுழற் பொற்றொடியாய்
மெய்யென்ப தேதுமற் றில்லைகொ லாமிவ் வியலிடத்தே.(கஉ)

**278.** தேருதுபுலம்பல்

தீதறுகண்ணி தேற்றத்தேருது
போதறுகுழலி புலம்பியது.

மன்செய்த முன்னாள் மொழிவழி யேயன்ன வாய்மைகண்டும்
என்செய்த நெஞ்சும் நிறையுநில் லாவென தின்னுயிரும்
பொன்செய்த மேனியன் தில்லையு றாரிற் பொறையரிதாம்
முன்செய்த தீங்குகொல் காலத்து நீர்மைகொல் மொய்குழலே. (கந)

**279.** காலமறைத்துரைத்தல்

காந்தள்கருவுறக் கடவுண்மழைக்கென்
றேந்திழைப்பாங்கி இனிதியம்பியது.

கருந்தினை யோம்பக் கடவுட் பராவி நமர்களிப்பச்
சொரிந்தன கொண்மூச் சுரந்ததன் பேரரு ளாற்றொழும்பிற்
பரிந்தெனை யாண்டசிற் றம்பலத் தான்பரங் குன்றிற்றன்றி
விரிந்தன காந்தள் வெருவரல் காரென வெள்வளையே. (கச)

**230.** தூதுவரவுரைத்தல்

ஆங்கோரு தூதுவரப்
பாங்கிகண் டுரைத்தது.

வென்றவர் முப்புரம் சிற்றம் பலத்துணின் றாடும்வெள்ளிக்
குன்றவர் குன்றா அருடரக் கூடினர் நம்மகன்று
சென்றவர் தூதுகொல் லோவிருந் தேமையும் செல்லல்செப்பா
நின்றவர் தூதுகொல் லோவந்து தோன்றும் நிரைவளையே. ()

**281.** தூதுகண்டழுங்கல்

அயலுற்ற தூதுவரக்
கயலுற்றகண்ணி மயலுற்றது.

வருவன செல்வன தூதுக ளேதில வான்புலியூர்
ஒருவன தன்பரின் இன்பக் கலவிகள் உள்ளுருகத்
தருவன செய்தென தாவிகொண் டேகியென் நெஞ்சிற்றம்மை
இருவின காதலர் ஏதுசெய் வானின் றிருக்கின்றதே. (கரு)

**282.** மெலிவுகண்டுசெவிலிகூறல்

வண்டமர்புரிகுழல் ஒண்டொடிமெலிய
வாடாநின்ற கோடாய்கூறியது.

வேயின மென்றோள் மெலிந்தொளி வாடி விழிபிறிதாய்ப்
பாயின மேகலை பண்டையள் அல்லள் பவளச்செவ்வி
ஆயின ஈசன் அரர்க் கமரன்சிற் றம்பலத்தான்
சேயின தாட்சியிற் பட்டன ளாமித் திருந்திழையே. (கஎ)

**283.** கட்டுவைப்பித்தல்

மால்கொண்ட கட்டுக்
கால்கொண்டது.

சுணங்குற்ற கொங்கைகள் சூதாற் றிலசொல் தெளிவுற்றில
குணங்குற்றங் கொள்ளும் பருவ முருள்குறு காவசுரர்
நிணங்குற்ற வேற்சிவன் சிற்றம் பலநெஞ் சுருதவர்போல்
அணங்குற்ற நோயறி வுற்றுரை யாடுமின் அன்னையரே. (௧௮)

**284.** கலக்கமுற்றுநிற்றல்

தெய்வத்திற் றெரியுமென
எவ்வத்தின் மெலிவுற்றது.

மாட்டியன் றேயெம் வயிற்பெரு நாணினி மாக்குடிமா
சூட்டியன் றேநிற்ப தோடிய வாறிவள் உள்ளமெலாம்
காட்டியன் றேநின்ற தில்லைத்தொல் லோனைக்கல் லாதவர்போல்
வாட்டியன் றேர்குழ லார்மொழி யாதன வாய்திறந்தே. (௧௯)

**285.** கட்டுவித்திகூறல்

கட்டுவித்தி
விட்டுரைத்தது.

குயிலிதன் றேயென்ன லாஞ்சொல்லி கூறன்சிற் றம்பலத்தான்
இயலிதன் றேயென்ன லாகா இறைவிறற் சேய்கடவும்
மயிலிதன் றேகொடி வாரணங் காண்கவன் சூர்தடிந்த
அயிலிதன் றேயிதன் றேநெல்லிற் றோன்றும் அவன்வடிவே. ()

**286.** வேலனையழைத்தல்

வெறியாடிய வேலனைக்கூஉய்
நெறியார்குழலி தாயர்நின்றது.

வேலன் புகுந்து வெறியா டுகவெண் மறியறுக்க
காலன் புகுந்தவி யக்கழல் வைத்தெழிற் றில்லைநின்ற
மேலன் புகுந்தென்கண் நின்றான் இருந்தவெண் காடனைய
பாலன் புகுந்திப் பரிசினின் நிற்பித்த பண்பினுக்கே. (௨௧)

**287.** இன்னலெய்தல்

ஆடியவெறியிற் கூடுவதறியாது
நன்னறுங்கோதை இன்னலெய்தியது.

அயர்ந்தும் வெறிமறி யாவி செகுத்தும் விளர்ப்பயலார்
பெயர்ந்தும் ஒழியா விடினென்னை பேசுவ பேர்ந்திருவர்
உயர்ந்தும் பணிந்தும் உணரான தம்பலம் உன்னலரின்
துயர்ந்தும் பிறிதின் ஒழியினென் னாதும் துறைவனுக்கே.(உஉ)

**288.** வெறிவிலக்குவிக்கநினைதல்

அயறருவெறியின் மயறருமென
விலக்கலுற்ற குலக்கொடிநினைந்தது.

சென்றார் திருத்திய செல்லனின் றார்கள் சிதைப்பரென்றால்
நன்றோ அழகிதன் றேயிறை தில்லை தொழாரினைந்தும்
ஒன்றும் இவட்கு மொழிதல்கில் லேன்மொழி யாதுமுய்யேன்
குன்றார் துறைவர்க் குறுவேன் உரைப்பனிக் கூர்மறையே. ()

**289.** அறத்தொடுநிற்றலையுரைத்தல்

வெறித்தலைவெரீஇ வெருவருதோழிக்
கறத்தொடுநின்ற ஆயிழையுரைத்தது.

யாயும் தெறுக அயலவர் ஏசுக ஊர்நகுக
நீயும் முனிக நிகழ்ந்தது கூறுவல் என்னுடைய
வாயும் மனமும் பிரியா இறைதில்லை வாழ்த்துநர்போல்
தூயன் நினக்குக் கடுஞ்சூள் தருவன் சுடர்க்குழையே. (உச)

**290.** அறத்தொடுநிற்றல்

செய்தவெறியின் எய்துவதறியாது
நிறத்தொடித்தோழிக் கறத்தொடுநின்றது.

வண்டலுற் றேமெங்கண் வந்தொரு தோன்றல் வரிவளையீர்
உண்டலுற் றேமென்று நின்றதொர் போழ்துடை யான்புலியூர்க்
கொண்டலுற் றேறுங் கடல்வர எம்முயிர் கொண்டுதந்து
கண்டலுற் றேர்நின்ற சேரிச்சென் றானோர் கழலவனே. (உரு)

**291.** ஐயந்தீரக்கூறல்

விலங்குதல்விரும்பும் மேதகுதோழி
அலங்கற்குழலிக் கறியவுரைத்தது.

குடிக்கலர் கூறினுங் கூறு வியன்றில்லைக் கூத்தனதாள்
முடிக்கல ராக்குமொய் பூந்துறை வற்கு முரிபுருவ
வடிக்கலர் வேற்கண்ணி வந்தன சென்றுநம் மாயறியும்
படிக்கல ராமிவை யென்னும் மறைக்கும் பரிசுகளே. (உகு)

**292.** வெறிவிலக்கல்

அறத்தொடுநின்ற திறத்தினிற்பாங்கி
வெறிவிலக்கிப் பிறிதுரைத்தது.

விதியுடை யாருண்க வேரி விலக்கலம் அம்பலத்துப்
பதியுடை யான்பரங் குன்றினிற் பாய்புனல் யாமொழுகக்
கதியுடை யான்கதிர்த் தோணிற்க வேறு கருதுநின்னின்
மதியுடை யார்தெய்வ மேயில்லை கொல்லினி வையகத்தே. (உஎ)

**293.** செவிலிக்குத்தோழியறத்தொடுநிற்றல்

சிறப்புடைச் செவிலிக்
கறத்தொடு நின்றது.

மனக்களி யாயின்றி யான்மகிழ் தூங்கத்தன் வார்கழல்கள்
எனக்களி யாநிற்கும் அம்பலத் தோனிருந் தண்கயிலைச்
சினக்களி யானை கடிந்தார் ஒருவர்செவ் வாய்ப்பசிய
புனக்கிளி யாங்கடி யும்வரைச் சாரற் பொருப்பிடத்தே. (உஅ)

**294.** நற்றாய்க்குச்செவிலியறத்தொடுநிற்றல்

கற்பினின்வழாமை நிற்பித்தெடுத்தோள்
குலக்கொடிதாயர்க் கறத்தொடுநின்றது.

இளையா ளிவளையென் சொல்லிப் பரவுதும் ஈரெயிறு
முளையா அளவின் முதுக்குறைந் தாண்முடி சாய்த்திமையோர்
வளையா வழுத்தா வருதிருச் சிற்றம் பலத்துமன்னன்
திளையா வருமரு விக்கயி லைப்பயில் செல்வியையே. (உகூ)

**295.** தேர்வரவுகூறல்

மணிநெடுந்தேரோன் அணிதினின்வருமெனை
யாழியன்மொழிக்குத் தோழிசொல்லியது.

கள்ளினம் ஆர்த்துண்ணும் வண்கொன்றை யோன்றில்லைக் கார்க்கடல்
புள்ளினம் ஆர்ப்பப் பொருதிரை ஆர்ப்பப் புலவர்கடம் [வாய்ப்
வள்ளினம் ஆர்ப்ப மதுகரம் ஆர்ப்ப வலம்புரியின்
வெள்ளினம் ஆர்ப்ப வரும்பெருந் தேரின்று மெல்லியலே. (௩0)

**296.** மணமுரசுகேட்டுமகிழ்ந்துரைத்தல்

நிலங்காவலர் நீண்மணத்தின்
நலங்கண்டவர் நயந்துரைத்தது.

பூரண பொற்குடம் வைக்க மணிமுத்தம் பொன்பொதிந்த
தோரண நீடுக தூரியம் ஆர்க்கதொன் மாலயற்கும்
காரணன் ஏரணி கண்ணுத லோன்கடற் றில்லையன்ன
வாரண வும்முலை மன்றலென் றேங்கும் மணமுரசே. (௩க)

**297.** ஐயுற்றுக்கலங்கல்

நல்லவர்முரசுமற் றல்லவர்முரசெனத்
தெரிவரிதென அரிவைகலங்கியது.

அடற்களி யாவர்க்கும் அன்பர்க் களிப்பவன் துன்பவின்பம்
படக்களி யாவண் டறைபொழிற் றில்லைப் பரமன்வெற்பின்
கடக்களி யானை கடிந்தவர்க் கோவன்றி நின்றவர்க்கோ
விடக்களி யாநம் விழுநகர் ஆர்க்கும் வியன்முரசே. (௩௨)

**298.** நிதிவரவுகூறுநிற்றல்

மகிழ்தருமனத்தோடு வண்புகழ்த்தோழி
திகழ்நிதிமடந்தைக்குத் தெரியவுரைத்தது.

என்கடைக் கண்ணினும் யான்பிற ஏத்தா வகையிரங்கித்
தன்கடைக் கண்வைத்த தண்டில்லைச் சங்கரன் தாழ்கயிலைக்
கொன்கடைக் கண்டரும் யானை கடிந்தார் கொணர்ந்திறுத்தார்
முன்கடைக் கண்ணிது காண்வந்து தோன்றும் முழுநிதியே. (

## கக. மணஞ்சிறப்புரைத்தல் :

**299.** மணமுரசுகூறல்

வரைவுதோன்ற மகிழ்வுறுதோழி
நிரைவளைக்கு நின்றுரைத்தது.

பிரசந் திகழும் வரைபுரை யானையின் பீடழித்தார்
முரசந் திகழும் முருகியம் நீங்கும் எவர்க்குமுன்றும்
அரசம் பலத்துநின் றாடும் பிரானருள் பெற்றவரிற்
புரைசந்த மேகலை யாய்துயர் தீரப் புகுந்துநின்றே. (க)

**300.** மகிழ்ந்துரைத்தல்

மன்னியகடியிற் பொன்னறுங்கோதையை
நன்னுதற்றோழி தன்னின்மகிழ்ந்தது.

இருந்துதி யென்வயிற் கொண்டவன் யானெப் பொழுதுமுன்னும்
மருந்து திசைமுகன் மாற்கரி யோன்றில்லை வாழ்த்தினர்போல்
இருந்து திவண்டன வாலெரி முன்வலஞ் செய்திடப்பால்
அருந்துதி காணு மளவும் சிலம்பன் அருந்தழையே. (உ)

**301.** வழிபாடுகூறல்

மணமனைகாண வந்தசேவிலிக்குத்
துணைமலர்க்குழலி தோழிசொல்லியது.

சீரிய லாவியும் யாக்கையும் என்னச் சிறந்தமையால்
காரியல் வாட்கண்ணி யெண்ணக லார்கம லங்கலந்த
வேரியும் சந்தும் வியறந் தெனக்கற்பின் நிற்பரன்னே
காரியல் கண்டர்வண் டில்லை வணங்குமெங் காவலரே. (ங)

**302.** வாழ்க்கைநலங்கூறல்

மணமனைச்சென்று மகிழ்தருசேவிலி
அணிமணைக்கிழத்திக் கதன்சிறப்புரைத்தது.

தொண்டினம் மேவுஞ் சுடர்க்கழ லோன்றில்லைத் தொன்னகரில்
கண்டின மேவுமில் நீயவள் நின்கொழு நன்செழுமென்
தண்டின மேவுதிண் டோளவன் யானவள் தற்பணிவோள்
வண்டின மேவுங் குழலாள் அயன்மன்னும் இவ்வயலே. (ச)

**303.** காதல்கட்டுரைத்தல்

சோதி வேலவன்
காதல்கட் டுரைத்தது.

பொட்டணி யானுதல் போயிறும் பொய்போல் இடையெனப்பூண்
இட்டணி யான்றவி சின்மல ரன்றி மிதிப்பக்கொடான்
மட்டணி வார்குழல் வையான் மலர்வண் டுறுதலஞ்சிக்
கட்டணி வார்சடை யோன்றில்லை போலிதன் காதலனே. (ரு)

**304.** கற்பறிவித்தல்

விற்போலி நுதலி
கற்பறி வித்தது.

தெய்வம் பணிகழ லோன்றில்லைச் சிற்றம் பலமனையாள்
தெய்வம் பணிந்தறி யாளென்றும் நின்று திறைவழங்காத்
தெவ்வம் பணியச்சென் றாலுமன் வந்தன்றிச் சேர்ந்தறியான்
பௌவம் பணிமணி யன்னார் பரிசின்ன பான்மைகளே. (சா)

**305.** கற்புப்பயப்புரைத்தல்

கற்புப் பயந்த
அற்புதம் உரைத்தது.

சிற்பந் திகழ்தரு திண்மதிற் றில்லைச்சிற் றம்பலத்துப்
பொற்பந்தி யன்ன சடையவன் பூவண மன்னபொன்னின்
கற்பந்தி வாய்வட மீனுங் கடக்கும் படிகடந்தும்
இற்பந்தி வாயன்றி வைகல்செல் லாதவன் ஈர்ங்களிறே. (எ)

**306.** மருவுதலுரைத்தல்

இருவர் காதலும்
மருவுதல் உரைத்தது.

மன்னவன் தெம்முனை மேற்செல்லு மாயினும் மாலரியே
றன்னவன் தேர்புறத் தல்கல்செல் லாது வரகுணனாந்
தென்னவன் ஏத்துசிற் றம்பலத் தான்மற்றைத் தேவர்க்கெல்லாம்
முன்னவன் மூவலன் னாளுமற் றோர்தெய்வம் முன்னலளே. (அ)

**307.** கலவியின்பங்கூறல்

நன்னுதன்மடந்தை தன்னலங்கண்டு
மகிழ்தூங்குளத்தோ டிகுவளைகூறியது.

ஆனந்த வெள்ளத் தழுந்துமொ ராருயிர் ஈருருக்கொண்
டானந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத் தறைகழ லோனருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம்வற் றாதுமுற் றாதிவ் வணிநலமே. (கூ)

## உ௦. ஓதற்பிரிவு :

**308.** கல்விநலங்கூறல்

கல்விக்ககல்வர் செல்வத்தவரெனச்
செறிகுழற்பாங்கிக் கறிவறிவித்தது.

சீரள வில்லாத் திகழ்தரு கல்விச்செம் பொன்வரையின்
ஆரள வில்லா அளவுசென் றாரம் பலத்துணின்ற
ஓரள வில்லா வொருவன் இருங்கழல் உன்னினர்போல்
ஏரள வில்லா அளவின ராகுவர் ஏந்திழையே. (க)

**309.** பிரிவுநினைவுரைத்தல்

கல்விக்ககல்வர் செல்வத்தவரெனப்
பூங்குழன்மடந்தைக்குப் பாங்கிபகர்ந்தது.

வீதலுற் றார்தலை மாலையன் றில்லைமிக் கோன்கழற்கே
காதலுற் றார்நன்மை கல்விசெல் வீதரும் என்பதுகொண்
டோதலுற் றாருற் றுணர்தலுற் றார்செல்லன் மல்லழற்கான்
போதலுற் றார்நின் புணர்முலை யுற்ற புரவலரே. (உ)

**310.** கலக்கங்கண்டுரைத்தல்

ஓதற்ககல்வர் மேதக்கவரெனப்
பூங்கொடிகலக்கம் பாங்கிகண்டுரைத்தது.

கற்பா மதிற்றில்லைச் சிற்றம் பலமது காதல்செய்த
விற்பா விலங்கலெங் கோனை விரும்பலர் போலவன்பர்
சொற்பா விரும்பின ரென்னமெல் லோதி செவிப்புறத்துக்
கொற்பா இலங்கிலை வேல்குளித் தாங்குக் குறுகியதே. (ங)

**311.** வாய்மொழிகூறித்தலைமகள்வருந்தல்

தீதறுகல்விக்குச் செல்வன்செல்லுமெனப்
போதுறுகுழலி புலம்பியது.

பிரியா மையுமுயி ரொன்ற வதும்பிரி யிற்பெரிதுந்
தரியா மையுமொருங் கேநின்று சாற்றினர் தையன்மெய்யிற்
பிரியாமை செய்துநின் றேன்றில்லைப் பேரிய லூரரன்ன
புரியா மையுமிது வேயினி யென்னும் புகல்வதுவே. (சு)

## உக. காவற்பிரிவு:

**312.** பிரிவறிவித்தல்

இருநிலங்காவற் கேகுவர்நமரெனப்
பொருசுடர்வேலோன் போக்கறிவித்தது.

மூப்பான் இளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்
வீப்பான் வியன்றில்லை யானரு ளால்விரி நீருலகம்
காப்பான் பிரியக் கருதுகின் றார்நமர் கார்க்கயற்கண்
பூப்பால் நலமொளி ரும்புரி தாழ்குழற் பூங்கொடியே. (க)

**313.** பிரிவுகேட்டிரங்கல்

மன்னவன்பிரிவு நன்னுதலறிந்து
பழங்கணெய்தி அழுங்கல்சென்றது.

சிறுகட் பெருங்கைத்திண் கோட்டுக் குழைசெவிச் செம்முகமாத்
தெறுகட் டழியமுன் உய்யச்செய் தோர்கருப் புச்சிலையோன்
உறுகட் டழலுடை யோனுறை யம்பலம் உன்னலரின்
துறுகட் புரிகுழ லாயிது வோவின்று சூழ்கின்றதே. (உ)

## உஉ. பகைதணிவினைப்பிரிவு:

**314.** பிரிவுகூறல்

துன்னுபகைதணிப்ப மன்னவன்பிரிவு
நன்னறுங்கோதைக்கு முன்னிமொழிந்தது.

மிகைதணித் தற்கரி தாமிரு வேந்தர்வெம் போர்மிடைந்த
பகைதணித் தற்குப் படர்தலுற் றார்நமர் பல்பிறவித்
தொகைதணித் தற்கென்னை யாண்டுகொண் டோன்றில்லைச் சூழ்
முகைதணித் தற்கரி தாம்புரி தாழ்தரு மொய்குழலே. [பொழில்வாய் ()

**315.** வருத்தந்தணித்தல்

மணிப்பூண்மன்னவன் தணப்பதில்லை
அஞ்சல்போயெ வஞ்சியைத்தணித்தது.

நெருப்புறு வெண்ணெயும் நீருறும் உப்பும் எனவிங்ஙனே
பொருப்புறு தோகை புலம்புறல் பொய்யன்பர் போக்குமிக்க
விருப்புறு வோரைவிண் ணோரின் மிகுத்துநண் ணார்கழியத்
திருப்புறு சூலத்தி னோன்றில்லை போலுந் திருநுதலே. (உ)

## உகூ. வேந்தற்குற்றுழிப்பிரிவு:

**316.** பிரிந்தமைகூறல்

விறல்வேந்தர் வெம்முனைக்கண்
திறல்வேந்தர் செல்வரேன்றது.

போது குலாய புனைமுடி வேந்தர்தம் போர்முனைமேல்
மாது குலாயமென் னோக்கிசென் றார்நமர் வண்புலியூர்க்
காது குலாய குழையெழி லோனைக் கருதலர்போல்
ஏதுகொ லாய்வினை கின்றதின் றென்னார் இடுமதிலே. (க)

**317.** பிரிவாற்றாமைகார்மிசைவைத்தல்

வேந்தற்குற்றுழி விறலோன்பிரிய
ஏந்திழைபாங்கிக் கேடுத்துரைத்தது.

பொன்னி வளைத்த புனல்சூழ் நிலவிப் பொலிபுலியூர்
வன்னி வளைத்த வளர்சடை யோனை வணங்கலர்போல்
துன்னி வளைத்தநந் தோன்றற்குப் பாசறைத் தோன்றுங்கொலோ
மின்னி வளைத்து விரிநீர் கவரும் வியன்முகிலே. (உ)

**318.** வானோக்கிவருந்தல்

மானோக்கி வடிவுநினைந்தோன்
வானோக்கி வருந்தியது.

கோலித் திகழ்சிற கொன்றின் ஒடுக்கிப் பெடைக்குருகு
பாலித் திரும்பனி பார்ப்பொடு சேவல் பயில்விரவின்
மாலித் தனையறி யாமறை யோனுறை யம்பலமே
போலித் திருநுத லாட்கென்ன தாங்கொலென் போதரவே.()

**319.** கூதிர்கண்டுகேவறல்

இருங்கூதிர் எதிர்வுகண்டு
கருங்குழலி கவலையுற்றது.

கருப்பினம் மேவும் பொழிற்றில்லை மன்னன்கண் ஆரருளால்
விருப்பினம் மேவச்சென் றூர்க்குஞ்சென் றல்குங்கொல் வீழ்பனிவாய்
நெருப்பினம் மேய்நெடு மாலெழில் தோன்றச்சென் றுங்குநின்ற
பொருப்பினம் ஏறித் தமியரைப் பார்க்கும் புயலினமே. (ச)

**320.** முன்பனிக்குநோந்துரைத்தல்

ஆன்றபனிக் காற்றுதழிந்
தீன்றவளை ஏழைநோந்தது.

சுற்றின வீழ்பனி தூங்கத் துவண்டு துயர்கவென்று
பெற்றவ ளேயெனைப் பெற்றாள் பெடைசிற காலொடுக்கிப்
புற்றில வாளர வன்றில்லைப் புள்ளுந்தம் பிள்ளைதழீஇ
மற்றினஞ் சூழ்ந்து துயிலப் பெறுமிம் மயங்கிருளே. (ரு)

**321.** பின்பனிநினைந்திரங்கல்

இரும்பனியின் எதிர்வுகண்டு
சுரும்பிவர்குழலி துயரநினைந்தது.

பிரமன் றயரப் பொருப்புவில் லேந்திப்புத் தேளிர்நாப்பண்
சிரமன் றயனைச்செற் றோன்றில்லைச் சிற்றம் பலமனையாள்
பரமன் றிரும்பனி பாரித்த வாபரந் தெங்கும்வையம்
சரமன்றி வான்றரு மேலொக்கும் மிக்க தமியருக்கே. (சு)

**322.** இளவேனில்கண்டின்னலெய்தல்

இன்னிளவேனில் முன்னுவதுகண்டு
மென்னகைப்பேதை இன்னலெய்தியது.

வாழும் படியொன் றுங் கண்டிலம் வாழியிம் மாம்பொழிற்றேன்
சூழும் முகச்சுற் றும் பற்றின வாற்றொண்டை யங்கனிவாய்
யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பல மாதரியாக்
கூழின் மலிமனம் போன்றிரு ளாநின்ற கோகிலமே. (எ)

**323.** பருவங்காட்டிவற்புறுத்தல்

*கார்வருமெனக் கலங்குமாதரைத்*
*தேர்வருமெனத் தெளிவித்தது.*

*பூண்பதென் றேகொண்ட பாம்பன் புலியூ ரரன்மிடற்றின்*
*மாண்பதென் றேயெண வானின் மலரும் மணந்தவர்தேர்*
*காண்பதன் றேயின்று நாளையிங் கேவரக் கார்மலர்த்தேன்*
*பாண்பதன் தேர்குழ லாயெழில் வாய்த்த பனிமுகிலே. (அ)*

**324.** பருவமன்றென்றுகூறல்

*காரேனக்கலங்கும் ஏரேழிற்கண்ணிக்*
*கின்றுவணத்தோழி அன்றென்றுமறுத்தது.*

*தெளிதரற் காரெனச் சீரனம் சிற்றம் பலத்தடியேன்*
*களிதரக் கார்மிடற் றோனட மாடக்கண் ணார்முழவம்*
*துளிதரற் காரென வார்த்தன ஆர்ப்பத்தொக் குன்குழல்போன்*
*றளிதரக் காந்தளும் பாந்தளைப் பாரித் தலர்ந்தனவே. (கூ)*

**325.** மறுத்துக்கூறல்

*பருவமன்றென்று பாங்கிபகர*
*மருவமர்கோதை மறுத்துரைத்தது.*

*தேன்றிக் கிலங்கு கழலழல் வண்ணன்சிற் றம்பலத்தெங்*
*கோன்றிக் கிலங்குதிண் டோட்கொண்டற் கண்டன் குழையெழிலுண்*
*போன்றிக் கடிமலர்க் காந்தளும் போந்தவன் கையனல்போல்*
*தோன்றிக் கடிமல ரும்பொய்ம்மை யோமெய்யிற் றோன்றுவதே.*

**326.** தேர்வரவுகூறல்

*பூங்கொடி மருளப்*
*பாங்கி தெருட்டியது.*

*திருமால் அறியாச் செறிகழற் றில்லைச்சிற் றம்பலத்தெம்*
*கருமால் விடையுடை யோன்கண்டம் போற்கொண்டல் எண்டிசையும்*
*வருமால் உடன்மன் பொருந்தல் திருந்த மணந்தவர்தேர்*
*பொருமால் அயிற்கணல் லாயின்று தோன்றுநம் பொன்னகர்க்கே. (கக)*

**327.** வினைமுற்றிநினைதல்

பாசறைமுற்றிப் படைப்போர்வேந்தன்
மாசறுபூண்முலை மதிமுகநினைந்தது.

புயலோங் கலர்சடை யேற்றவன் சிற்றம் பலம்புகழும்
மயலோங் கிருங்களி யானை வரகுணன் வெற்பின்வைத்த
கயலோங் கிருஞ்சிலை கொண்டுமன் கோபமுங் காட்டிவரும்
செயலோங் கெயிலெரி செய்தபின் இன்றோர் திருமுகமே.(கஉ)

**328.** நிலைமைநினைந்துகூறல்

பொற்றொடிநிலைமை மற்றவனினைந்து
திருந்துதேர்ப்பாகற்கு வருந்துபுபுகன்றது.

சிறப்பிற் றிகழ்சிவன் சிற்றம் பலஞ்சென்று சேர்ந்தவர்தம்
பிறப்பிற் றுனைந்து பெருகுக தேர்பிறங் கும்மொளியார்
நிறப்பொற் புரிசை மறுகினிற் றுன்னி மடநடைப்புள்
இறப்பிற் றுயின்றுமுற் றத்திரை தேரும் எழினகர்க்கே.(கங)

**329.** முகிலொடுகூறல்

முனைவற்குற்றுழி வினைமுற்றிவருவோன்
கழுமலெய்திச் சேழுமுகிற்குரைத்தது.

அருந்தே ரழிந்தனம் ஆலமென் றோல மிடுமிமையோர்
மருந்தே ரணியம் பலத்தோன் மலர்த்தாள் வணங்கலர்போல்
திருந்தே ரழிந்து பழங்கண் தருஞ்செல்வி சீர்நகர்க்கென்
வருந்தே ரிதன்முன் வழங்கேல் முழங்கேல் வளமுகிலே. (கச)

**330.** வரவெடுத்துரைத்தல்

வினைமுற்றிய வேந்தன்வரவு
புனையிழைத்தோழி பொற்றொடிக்குரைத்தது.

பணிவார் குழையெழி லோன்றில்லைச் சிற்றம் பலமனைய
மணிவார் குழன்மட மாதே பொலிகநம் மன்னர்முன்னுப்
பணிவார் திறையும் பகைத்தவர் சின்னமும் கொண்டுவண்டேர்
அணிவார் முரசினொ டாலிக்கு மாவோ டணுகினரே. (கரு)

**331.** மறவாமைகூறல்

பாசறைமுற்றிப் பைந்தொடியோடிருந்து
மாசறுதோழிக்கு வள்ளலுரைத்தது.

கருங்குவ ளைக்கடி மாமலர் முத்தங் கலந்திலங்க
நெருங்கு வளைக்கிள்ளை நீங்கிற் றிலணின்று நான்முகனே
டொருங்கு வளைக்கரத் தானுண ராதவன் றில்லையொப்பாய்
மருங்கு வளைத்துமன் பாசறை நீடிய வைகலுமே. (கசு)

## உச. பொருள்வயிற்பிரிவு :

**332.** வாட்டங்கூறல்

பிரிவுகேட்ட அரிவைவாட்டம்
நீங்கலுற்றவன் பாங்கிக்குரைத்தது.

முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னான் முடியுமெனப்
பனிவருங் கண்பர மன்றிருச் சிற்றம் பலமனையாய்
துனிவரு நீர்மையி தென்னென்று தூநீர் தெளித்தளிப்ப
நனிவரு நாளிது வோவென்று வந்திக்கும் நன்னுதலே. (க)

**333.** பிரிவுநினைவுரைத்தல்

பொருள்வயிற்பிரியும் பொருவேலவனெனச்
சுருளுறுகுழலிக்குத் தோழிசொல்லியது.

வறியார் இருமை யறியார் எனமன்னு மாநிதிக்கு
நெறியா ரருஞ்சுரஞ் செல்லலுற் றார்நமர் நீண்டிருவர்
அறியா அளவுநின் றோன்றில்லைச் சிற்றம் பலமனைய
செறிவார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் திருநுதலே. (உ)

**334.** ஆற்றாதுபுலம்பல்

பொருட்பிரியும் அருட்குபவனெனப்
பாங்கிபகரப் பூங்கொடிபுலம்பியது.

சிறுவாள் உகிருற் றுறுமுன்னஞ் சின்னப் படுங்குவளைக்
கெறிவாள் கழித்தனள் தோழி எழுதிற் கரப்பதற்கே
அறிவாள் ஒழிகுவ தஞ்சனம் அம்பல வர்ப்பணியார்
குறிவாழ் நெறிசெல்வர் அன்பரென் றம்ம கொடியவளே. (ங)

**335.** ஆற்றாமைகூறல்

ஏழை அழுங்கத்
தோழி சொல்லியது.

வானக் கடிமதிற் றில்லையெங் கூத்தனை யேத்தலர்போல்
கானக் கடஞ்செல்வர் காதல ரென்னக் கதிர்முலைகள்
மானக் கனகந் தருமலர்க் கண்கண்முத் தம்வளர்க்கும்
தேனக்க தார்மன்னன் என்னோ இனிச்சென்று தேர்பொருளே. (ச)

**336.** திணைபெயர்த்துரைத்தல்

துணைவன்பிரியத் துயருறுமனத்தோடு
திணைபெயர்த்திட்டுத் தேமொழிமொழிந்தது.

சுருடரு செஞ்சடை வெண்சுட ரம்பல வன்மலயத்
திருடரு பூம்பொழில் இன்னுயிர் போலக் கலந்திசைத்த
அருடரு மின்சொற்க ளத்தனை யும்மறந் தத்தஞ்சென்றோ
பொருடரக் கிற்கின் றதுவினை யேற்குப் புரவலரே. (ரு)

**337.** பொருத்தமறிந்துரைத்தல்

பொருள்வயிற்பிரிவோன் பொருத்தநினைந்து
சுருளுறுகுழலிக்குத் தோழிசொல்லியது.

மூவர்நின் றேத்த முதலவன் ஆடமுப் பத்துமும்மைத்
தேவர்சென் றேத்துஞ் சிவன்றில்லை யம்பலஞ் சீர்வழுத்தாப்
பாவர்சென் றல்கு நரக மனைய புனையழற்கான்
போவர்நங் காதலர் என்னும் உரைப்பது பூங்கொடியே. (சு)

**338.** பிரிந்தமைகூறல்

எதிர்நின்றுபிரியிற் கதிர்நீவாடுதற்
குணர்த்தாதகன்றான் மணித்தேரோனென்றது.

தென்மாத் திசைவசை தீர்தரத் தில்லைச்சிற் றம்பலத்துள்
என்மாத் தலைக்கழல் வைத்தெரி யாடும் இறைதிகழும்
பொன்மாப் புரிசைப் பொழிற்றிருப் பூவண மன்னபொன்னே
வன்மாக் களிற்றொடு சென்றனர் இன்றுநம் மன்னவரே. (எ)

**339.** இரவுறுதுயரத்திற்கிரங்கியுரைத்தல்

அயிறருகண்ணியைப் பயிறருமிரவினுள்
தாங்குவதரிதெனப் பாங்கிபகர்ந்தது.

ஆழியொன் றீரடி யும்மிலன் பாகன்முக் கட்டில்லையோன்
ஊழியொன் றாதன நான்குமைம் பூதமும் ஆறொடுங்கும்
ஏழியன் றாழ்கட லும்மெண் டிசையும் திரிந்திளைத்து
வாழியன் றேவருக் கன்பெருந் தேர்வந்து வைகுவதே. (அ)

**340.** இகழ்ச்சிநினைந்தழிதல்

உணர்த்தாது பிரிந்தாரென
மணித்தாழ்குழலி வாடியது.

பிரியா ரெனவிகழ்ந் தேன்முன்னம் யான்பின்னை எற்பிரியின்
தரியா ளெனவிகழ்ந் தார்மன்னர் தாந்தக்கன் வேள்விமிக்க
எரியா ரெழிலழிக் கும்மெழி லம்பலத் தோனெவர்க்கும்
அரியான் அருளிலர் போலன்ன என்னை அழிவித்தவே. (கூ)

**341.** உருவுவெளிப்பட்டுநிற்றல்

பொருள்வயிற்பிரிந்த ஒளியுறுவேலவன்
ஓங்கழற்கடத்துப் பூங்கொடியைநினைந்தது.

சேணுந் திகழ்மதிற் சிற்றம் பலவன்றெண் ணீர்க்கடனஞ்
சூணுந் திருத்த மொருவன் திருத்தும் உலகினெல்லாம்
காணுந் திசைதொறும் கார்க்கய லுஞ்செங் கனியொடுபைம்
பூணும் புணர்முலை யுங்கொண்டு தோன்றுமொர் பூங்கொடியே. (க0)

**342.** நெஞ்சொடுநோதல்

வல்லழற்கடத்து மெல்லியலைநினைந்து
வெஞ்சுடர்வேலோன் நெஞ்சொடுநொந்தது.

பொன்னணி யீட்டிய வோட்டரு நெஞ்சமிப் பொங்குவெங்கா
னின்னணி நிற்குமி தென்னென்ப தேயிமை யோரிறைஞ்சும்
மன்னணி தில்லை வளநக ரன்ன வனநடையாள்
மின்னணி நுண்ணிடைக் கோபொருட் கோநீ விரைகின்றதே. (கக)

**343.** நெஞ்சொடுபுலத்தல்

அழற்கடத் தழக்கமிக்கு
நிழற்கதிர்வேலோன் நீடுவாடியது.

நாய்வயி னுள்ள குணமுமில் லேனைநற் றொண்டுகொண்ட
தீவயின் மேனியன் சிற்றம் பலமன்ன சின்மொழியைப்
பேய்வயி னும்மரி தாகும் பிரிவெளி தாக்குவித்துச்
சேய்வயிற் போந்தநெஞ் சேயஞ்சத் தக்கதுன் சிக்கனவே. ()

**344.** நெஞ்சொடுமறுத்தல்

நீணெறிசென்ற நாறிணர்த்தாரோன்
சேணெறியஞ்சி மீணெறிசென்றது.

தீமே வியநிருத் தன்றிருச் சிற்றம் பலமனைய
பூமே வியபொன்னை விட்டுப்பொன் தேடியிப் பொங்குவெங்கான்
நாமே நடக்க ஒழிந்தனம் யாநெஞ்சம் வஞ்சியன்ன
வாமே கலையைவிட் டோபொருள் தேர்ந்தெம்மை வாழ்விப்பதே.(கரு)

**345.** நாளெண்ணிவருந்தல்

சென்றவர்திறத்து நின்றுநனிவாடுஞ்
சூழ்குருங்கூந்தற்குத் தோழிநனிவாடியது.

தெண்ணீர் அணிசிவன் சிற்றம் பலஞ்சிந்தி யாதவரின்
பண்ணீர் மொழியிவ ளைப்பையு ளெய்தப் பனித்தடங்க
ணுண்ணீர் உகவொளி வாடட நீடுசென் றார்சென்றநாள்
எண்ணீர் மையினில னுங்குழி யும்விரல் இட்டறவே. (கச)

**346.** ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தல்

நீடியபொன்னின் நெஞ்சநெகிழ்ந்து
வாடியவன் வரவுற்றது.

சுற்றம் பலமின்மை காட்டித்தன் தொல்கழல் தந்ததொல்லோன்
சிற்றம் பலமனை யாள்பர மன்றுதிண் கோட்டின்வண்ணப்
புற்றங் குதர்ந்துநன் றுகொடும் பொன்னார் மணிபுலம்பக்
கொற்றம் மருவுகொல் லேறுசெல் லாநின்ற கூர்ஞ்செக்கரே. ()

**347.** பருவங்கண்டிரங்கல்

மன்னியபருவம் முன்னியசெலவின்
இன்னலெய்தி மன்னனேகியது.

கண்ணுழை யாதுவிண் மேகங் கலந்து கணமயிறூக்
கெண்ணுழை யாத்தழை கோலிநின் றூலும் இனமலர்வாய்
மண்ணுழை யாவும் அறிதில்லை மன்னன தின்னருள்போல்
பண்ணுழை யாமொழி யாளென்ன ளாங்கொன்மன் பாவியற்கே.(கசு)

**348.** முகிலோடுகூறல்

எனைப்பலதுயரமோ டேகாநின்றவன்
துனைக்காரதற்குத் துணிந்துசொல்லியது.

அற்படு காட்டினின் றாடிசிற் றம்பலத் தான்மிடற்றின்
முற்படு நீண்முகில் என்னின்முன் னேன்முது வோர்குழுமி
விற்படு வாணுத லாள்செல்லல் தீர்ப்பான் விரைமலர்தூய்
நெற்படு வான்பலி செய்தய ராநிற்கும் நீணகர்க்கே. (கஎ)

**349.** தேர்வரவுகூறல்

வேந்தன்பொருளோடு விரும்பிவருமென
ஏந்திழைப்பாங்கி இனிதியம்பியது.

பாவியை வெல்லும் பரிசில்லை யேமுகில் பாவையஞ்சீர்
ஆவியை வெல்லக் கறுக்கின்ற போழ்தத்தின் அம்பலத்துக்
காவியை வெல்லு மிடற்றோன் அருளிற் கதுமெனப்போய்
மேவிய மாநிதி யோடன்பர் தேர்வந்து மேவினதே. (கஅ)

**350.** இளையரெதிர்கோடல்

செறிகழலவன் திருநகர்புகுதர
எறிவேலிளைஞர் எதிர்கொண்டது.

யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பலத் தானமைத்த
ஊழின் வலியதொன் றென்னை ஒளிமே கலையுகளும்
வீழும் வரிவளை மெல்லிய லாவிசெல் லாதமுன்னே
சூழுந் தொகுநிதி யோடன்பர் தேர்வந்து தோன்றியதே.(கசு)

**351.** உண்மகிழ்ந்துரைத்தல்

பெருநிதியோடு திருமணபுகுந்தவன்
வளமனைக்கிழத்தியோ டுளமகிழ்ந்துரைத்தது.

மயின்மன்னு சாயலிம் மானைப் பிரிந்து பொருள்வளர்ப்பான்
வெயின்மன்னு வெஞ்சுரஞ் சென்றதெல் லாம்விடை யோன்புலியூர்க்
குயின்மன்னு சொல்லிமென் கொங்கையென் அங்கத் திடைக்குளிப்பத்
துயின்மன்னு பூவணை மேலணை யாமுன் துவளுற்றதே. (உ௰)

## உரு. பரத்தையிற்பிரிவு :

**352.** கண்டவர்கூறல்

உரத்தகுவேலோன் பரத்தையிற்பிரியத்
திண்டேர்வீதியிற் கண்டோருரைத்தது.

உடுத்தணி வாளர வன்றில்லை யூரன் வரவொருங்கே
எடுத்தணி கையே றினவளை யார்ப்ப இளமயிலேர்
கடுத்தணி காமர் கரும்புரு வச்சிலை கண்மலரம்
படுத்தணி வாளிளை யோர்சுற்றும் பற்றினர் மாதிரமே. (க)

**353.** பொறையுவந்துரைத்தல்

கள்ளவிழ்கோதையைக் காதற்றோழி
உள்ளவிழ்பொறைகண் டுவந்துரைத்தது.

சுரும்புறு கொன்றையன் தொல்புலி யூர்ச்சுருங் கும்மருங்குல்
பெரும்பொறை யாட்டியை யென்னின்று பேசுவ பேரொலிநீர்க்
கரும்புறை யூரன் கலந்தகன் றானென்று கண்மணியும்
அரும்பொறை யாகுமென் ஆவியும் தேய்வுற் றழிகின்றதே.(உ)

**354.** பொதுப்படக்கூறிவாடியழுங்கல்

பொற்றிகழரவன் மற்றிகழ்தில்லைப்
பிரிந்தவூரனோ டிருந்துவாடியது.

அப்புற்ற சென்னியன் றில்லை யுறாரின் அவருறுநோய்
ஒப்புற் றெழினலம் ஊரன் கவரவுள் ளும்புறம்பும்
வெப்புற்று வெய்துயிர்ப் புற்றுத்தம் மெல்லணை யேதுணையாச்
செப்புற்ற கொங்கையர் யாவர்கொல் ஆருயிர் தேய்பவரே.(௩)

**355.** கனவிழந்துரைத்தல்

சினவிற்றடக்கைத் தீம்புனலூரனைக்
கனவிற்கண்ட காரிகையுரைத்தது.

தேவா சுரரிறைஞ் சுங்கழ லோன்றில்லை சேரலர்போல்
ஆவா கனவு மிழந்தேன் நனவென் றமளியின்மேற்
பூவா ரகலம்வந் தூரன் தரப்புலம் பாய்நலம்பாய்
பாவாய் தழுவிற்றி லேன்விழித் தேனரும் பாவியனே. (௪)

**356.** விளக்கொடுவெறுத்தல்

பஞ்சவணைத்துயின்ற பஞ்சின்மெல்லடி
அன்பனோடழுங்கிச் செஞ்சுடர்க்குரைத்தது.

செய்ம்முக நீல மலர்தில்லைச் சிற்றம் பலத்தரற்குக்
கைம்முகங் கூம்பக் கழல்பணி யாரிற் கலந்தவர்க்குப்
பொய்ம்முகங் காட்டிக் கரத்தல் பொருத்தமன் றென்றிலையே
நெய்ம்முக மாந்தி யிருண்முகங் கீழும் நெடுஞ்சுடரே. (௫)

**357.** வாரம்பகர்ந்துவாயின்மறுத்துரைத்தல்

வார்புனலூரன் ஏர்திகழ்தோள்வயிற்
கார்புரைகுழலி வாரம்பகர்ந்தது.

பூங்குவ ளைப்பொலி மாலையும் ஊரன்பொற் றோளிணையும்
ஆங்கு வளைத்துவைத் தாரேனுங் கொள்கநள் ளாரரணம்
தீங்கு வளைத்தவில் லோன்றில்லைச் சிற்றம் பலத்தயல்வாய்
ஓங்கு வளைக்கரத் தார்க்கடுத் தோமன் உறுவரையே. (௬)

**358.** பள்ளியிடத்தூடல்

பீடிவர்கற்பின் தோடிவர்கோதை
ஆடவன்றன்னோ டூடியுரைத்தது.

தவஞ்செய்தி லாதவெந் தீவினை யேம்புன்மைத் தன்மைக்கெள்ளா
தெவஞ்செய்து நின்றினி யின்றுனை நோவதென் அத்தன்முத்தன்
சிவன்செய்த சீரரு ளார்தில்லை யூரநின் சேயிழையார்
நவஞ்செய்த புல்லங்கண் மாட்டேம் தொடல்விடு நற்கலையே. (௭)

**359.** சேவ்வணிவிடுக்கவில்லோர்கூறல்

பாற்சேலுமொழியார் மேற்சேலவிரும்பல்
போல்லாதேன்ன இல்லோர்புகன்றது.

தணியுறப் பொங்குமிக் கொங்கைகள் தாங்கித் தளர்மருங்குல்
பிணியுறப் பேதைசென் றின்றெய்து மாலர வும்பிறையும்
அணியுறக் கொண்டவன் றில்லைத்தொல் லாயநல் லார்கண்முன்னே
பணியுறத் தோன்று நுடங்கிடை யார்கள் பயின்மனைக்கே. (அ)

**360.** அயலறிவுரைத்தவளழுக்கமேய்தல்

உலகியலறியச் சேலவிடலுற்ற
விழுத்தகைமாதர்க் கழுக்கஞ்சேன்றது

இரவணை யும்மதி யேர்நுத லார்நுதிக் கோலஞ்செய்து
குரவணை யுங்குழ லிங்கிவ ளாலிக் குறியறிவித்
தரவணை யுஞ்சடை யோன்றில்லை யூரனை ஆங்கொருத்தி
தரவணை யும்பரி சாயின வாறுநந் தன்மைகளே. (கூ)

**361.** சேவ்வணிகண்டவாயிலவர்கூறல்

மணிக்குழைபூப்பியல் உணாத்தவந்த
ஆயிழையைக்கண்ட வாயிலவருரைத்தது.

சிவந்தபொன் மேனி மணிதிருச் சிற்றம் பலமுடையான்
சிவந்தவந் தாளணி யூரற் குலகிய லாறுரைப்பான்
சிவந்தபைம் போதுமஞ் செம்மலர்ப் பட்டுங்கட் டார்முலைமேற்
சிவந்தவஞ் சாந்தமுந் தோன்றின வந்து திருமனைக்கே. (கo

**362.** மனைபுகல்கண்டவாயிலவர்கூறல்

கடனறிந்தூரன் கடிமனைபுகுதர
வாய்ந்தவாயிலவர் ஆய்ந்துரைத்தது.

குராப்பயில் கூழை யிவளின்மிக் கம்பலத் தான்குழையாம்
அராப்பயில் நுண்ணிடை யாரடங் காரெவ ரேயினிப்பண்
டிராப்பகல் நின்றுணங் கீர்ங்கடை யித்துணைப் போழ்திற்சென்று
கராப்பயில் பூம்புன லூரன் புகுமிக் கடிமனைக்கே. (கக

**363.** முகமலர்ச்சிகூறல்

பூம்புனலூரன் புகமுகமலர்ந்த
தேம்புனைகோதை திறம்பிறருரைத்தது.

வந்தான் வயலணி யூரன் எனச்சின வாண்மலர்க்கண்
செந்தா மரைச்செவ்வி சென்றசிற் றம்பல வன்னருளான்
முந்தா யினவிய ளேக்கெதிர் நோக்க முகமடுவிற்
பைந்தாட் குவளைகள் பூத்திருள் சூழ்ந்து பயின்றனவே. (கஉ)

**364.** காலநிகழ்வுரைத்தல்

இகழ்வதேவன்கோல் நிகழ்வதிவ்வாறெனச்
சேழமலர்க்கோதை உழையருரைத்தது.

வில்லிகைப் போதின் விரும்பா அரும்பா வியர்களன்பிற்
செல்லிகைப் போதின் எரியுடை யோன்றில்லை யம்பலஞ்சூழ்
மல்லிகைப் போதின்வெண் சங்கம்வண் டேவிண் டோய்பிறையோ
டெல்லிகைப் போதியல் வேல்வய லூரற் கெதிர்கொண்டதே ()

**365.** எய்தலெடுத்துரைத்தல்

சீரியலுலகில் திகழ்தரக்கூடி
வார்புனலூரன் மகிழ்வுற்றது.

புலவித் திரைபொரச் சிறடிப் பூங்கலஞ் சென்னியுய்ப்பக்
கலவிக் கடலுட் கலிங்கஞ்சென் றெய்திக் கதிர்கொண்முத்தம்
நிலவி நிறைமது ஆர்ந்தம் பலத்துநின் றோனருள்போன்
றுலவிய லாத்தனம் சென்றெய்த லாயின ஊரனுக்கே. (கச)

**366.** கலவிகருதிப்புலத்தல்

மன்னியவுலகில் துன்னியவன்போடு
கலவிகருதிப் புலவியெய்தியது.

செவ்வாய் துடிப்பக் கருங்கண் பிறழச்சிற் றம்பலத்தெம்
மொய்வார் சடையோன் அருளின் முயங்கி மயங்குகின்றாள்
வெவ்வா யுயிர்ப்பொடு விம்மிக் கலுழ்ந்து புலந்துநைந்தாள்
இவ்வா றருள்பிறர்க் காகும் எனநினைந் தின்னகையே. (கரு)

**367.** குறிப்பறிந்துபுலந்தமைகூறல்

குறிப்பினிற்குறிப்பு நெறிப்படநோக்கி
மலர்நெடுங்கண்ணி புலவியுற்றது.

மலரைப் பொருவடி மானும் தமியண்மன் னன்னொருவன்
பலரைப் பொருதென் றிழிந்துநின் ருள்பள்ளி காமனெய்த
அலரைப் பொருதன் றழல்விழித் தோனம் பலம்வணங்காக்
கலரைப் பொருச்சிறி யாளென்னை கொல்லோ கருதியதே. ()

**368.** வாயிலவர்வாழ்த்தல்

தலைமகனது தகவுடைமை
நிலைதகுவாயில் நின்றோருரைத்தது.

வில்லைப் பொலிநுதல் வேற்பொலி கண்ணி மெலிவறிந்து
வல்லைப் பொலிவொடு வந்தமை யானின்று வான்வழுத்துந்
தில்லைப் பொலிசிவன் சிற்றம் பலஞ்சிந்தை செய்பவரின்
மல்லைப் பொலிவய லூரன்மெய் யேதக்க வாய்மையனே. (கஎ)

**369.** புனல்வரவுரைத்தல்

புனலாடுகவெனப் புணைந்துகொண்டு
மணைபுகுந்தவணை வையமுரைத்தது.

சூன்முதிர் துள்ளு நடைப்பெடைக் கிற்றுணைச் சேவல்செய்வான்
தேன்முதிர் வேழத்தின் மென்பூக் குதர்செம்ம லூரன்றிண்டோள்
மான்முதிர் நோக்கினல் லார்மகி ழத்தில்லை யானருளே
போன்முதிர் பொய்கையிற் பாய்ந்தது வாய்ந்த புதுப்புனலே.()

**370.** தேர்வரவுகண்டுமகிழ்ந்துகூறல்

பயின்மணித்தேர்செலப் பரத்தையர்சேரிக்
கயன்மணிக்கன்னியர் கட்டுரைத்தது.

சேயே யெனமன்னு தீம்புன லூரன்றிண் டோளிணைகள்
தோயீர் புணர்தவந் தொன்மைசெய் தீர்சுடர் கின்றகொலம்
தீயே யெனமன்னு சிற்றம் பலவர்தில் லைந்நகர்வாய்
வீயே யெனவடி யீர்நெடுந் தேர்வந்து மேவினதே. (கசு)

**371.** புனல்விளையாட்டிற்றம்முளுரைத்தல்

தீம்புனல்வாயிற் சேயிழைவருமெனக்
காம்பனதோளியர் கலந்துகட்டுரைத்தது.

அரமங் கையரென வந்து விழாப்புகும் அவ்வவர்வான்
அரமங் கையரென வந்தணு கும்மவள் அன்றுகிராற்
சிரமங் கையனைச்செற் றோன்றில்லைச் சிற்றம் பலம்வழுத்தாப்
புரமங் கையரினை யாதைய காத்துநம் பொற்பரையே. (உ௦)

**372.** தன்னைவியந்துரைத்தல்

அரத்தத்துவர்வாய்ப் பரத்தைத்தலைவி
முனிவுதோன்ற நனிபுகன்றது.

கனலூர் கணைதுணை யூர்கெடச் செற்றசிற் றம்பலத்தெம்
அனலூர் சடையோன் அருள்பெற் றவரின் அமரப்புல்லும்
மினலூர் நகையவர் தம்பா லருள்விலக் காவிடின்யான்
புனலூ ரனைப்பிரி யும்புன லூர்கணப் பூங்கொடியே. (உக)

**373.** நகைத்துரைத்தல்

வேந்தன்பிரிய ஏந்திழைமடந்தை
பரத்தையைநோக்கி விரித்துரைத்தது.

இறுமாப் பொழியுமன் றேதங்கை தோன்றினென் எங்கையங்கைச்
சிறுமான் தரித்தசிற் றம்பலத் தான்றில்லை யூரன்றிரண்டோள்
பெறுமாத் தொடுந்தன்ன பேரணுக் குப்பெற்ற பெற்றியினே
டிறுமாப் பொழிய இறுமாப் பொழிந்த இணைமுலையே. (உஉ)

**374.** நாணுதல்கண்டுமிகுத்துரைத்தல்

மன்னவன்பிரிய நன்மனக்கிழத்தியை
நாணுதல்கண்ட வாணுதலுரைத்தது.

வேயாது செப்பின் அடைத்துத் தமிவைகும் வீயினன்ன
தீயாடி சிற்றம் பலமனை யாடில்லை யூரனுக்கின்
றேயாப் பழியென நாணியென் கண்ணிங்ங னேமறைத்தாள்
யாயா மியல்பிவள் கற்புநற் பால இயல்புகளே. (உ௩)

**375.** பாணன்வரவுரைத்தல்

இகல்வேலவனகல் வறியாப்பாணனைப்
பூங்குழன்மாதர்க்குப் பாங்கிபகர்ந்தது.

விறலியும் பாணனும் வேந்தற்குத் தில்லை யிறையமைத்த
திறலியல் யாழ்கொண்டு வந்துநின் றூர்சென் றிராத்திசைபோம்
பறலியல் வாவல் பகலுறை மாமரம் போலுமன்றே
அறலியல் கூழைநல் லாய்தமி யோமை அறிந்திலரே. (உச)

**376.** தோழியியற்பழித்தல்

தலைமகனைத் தகவிலனெனச்
சிலைநுதற்பாங்கி தீங்குசெப்பியது.

திக்கின் இலங்குதிண் டோளிறை தில்லைச்சிற் றம்பலத்துக்
கொக்கின் இறகு தணிந்துநின் றூடிதென் கூடலன்ன
அக்கின் நகையிவள் நைய அயல்வயின் நல்குதலான்
தக்கின் றிருந்திலன் நின்றசெவ் வேலெந் தனிவள்ளலே. (உரு)

**377.** உழையரியற்பழித்தல்

அரத்தவேலண்ணல் பரத்தையிற்பிரியக்
குழைமுகத்தவளுக் குழையருரைத்தது.

அன்புடை நெஞ்சத் திவள்பே துறவம் பலத்தடியார்
என்பிடை வந்தமிழ் தூறநின் றூடி இருஞ்சுழியல்
தன்பெடை நையத் தகவழிந் தன்னம் சலஞ்சலத்தின்
வன்பெடை மேற்றுயி லும்வய லூரன் வரம்பிலனே. (உசு)

**378.** இயற்படமொழிதல்

வரிசிலையூரன் பரிசுபழித்த
உழையர்கேட்ப எழினகையுரைத்தது.

அஞ்சார் புரஞ்செற்ற சிற்றம் பலவரந் தண்கயிலை
மஞ்சார் புனத்தன்று மாந்தழை யேந்திவந் தாரவரென்
நெஞ்சார் விலக்கினும் நீங்கார் நனவு கனவுமுண்டேல்
பஞ்சார் அமளிப் பிரிதலுண் டோவெம் பயோதரமே. (உஎ)

**379.** நினைந்துவியந்துரைத்தல்

மெல்லியற்பரத்தையை விரும்பிமேவினேன்
அல்லியங்கோதையை அகனமர்ந்துரைத்தது.

தெள்ளம் புனற்கங்கை தங்குஞ் சடையன்சிற் றம்பலத்தான்
கள்ளம் புகுநெஞ்சர் காணு இறையுறை காழியன்னாள்
உள்ளும் புகுமொரு காற்பிரி யாதுள்ளி யுள்ளுதொறும்
பள்ளம் புகும்புனல் போன்றகத் தேவரும் பான்மையளே. ()

**380.** வாயில்பெறாது மகன்றிறநினைதல்

பொற்றொடிமாதர் நற்கடைகுறுகி
நீடியவாயிலின் வாடினன்மொழிந்தது.

தேன்வண் டுறைதரு கொன்றையன் சிற்றம் பலம்வழுத்தும்
வான்வண் டுறைதரு வாய்மையன் மன்னு குதலையின்வா
யான்வண் டுறைதரு மாலமு தன்னவன் வந்தணையான்
நான்வண் டுறைதரு கொங்கையெவ் வாறுகொல் நண்ணுவதே.

**381.** வாயிற்கணின்று தோழிக்குரைத்தல்

பெருந்தகைவாயில் பெறாதுநின்
றருந்தகைப்பாங்கிக் கறியவுரைத்தது.

கயல்வந்த கண்ணியர் கண்ணிணை யான்மிகு காதரத்தான்
மயல்வந்த வாட்டம் அகற்று விரதமென் மாமதியின்
அயல்வந்த ஆடர வாடவைத் தோனம் பலநிலவு
புயல்வந்த மாமதிற் றில்லைநன் னாட்டுப் பொலிபவரே. (௩௦)

**382.** வாயில்வேண்டத்தோழிகூறல்

வைவேலண்ணல் வாயில்வேண்டப்
பையரவல்குற் பாங்கிபகர்ந்தது.

கூற்றா யினசின ஆளியெண் ணீர்கண்கள் கோளிழித்தால்
போற்றான் செறியிருட் பொக்கமெண் ணீர்கன் றகன்றபுனிற்
றீற்றா எனநீர் வருவது பண்டின்றெம் ஈசர்தில்லைத்
தேற்றார் கொடிநெடு வீதியிற் போதிரத் தேர்மிசையே. (௩௧)

**383.** தோழிவாயில்வேண்டல்

வாயில்பெறுது மன்னவனிற்ப
ஆயிழையவட்குத் தோழிசொல்லியது.

வியந்தலை நீர்வைய மெய்யே யிறைஞ்சவிண் டோய்குடைக்கீழ்
வயந்தலை கூர்ந்தொன் றும் வாய்திற வார்வந்த வாளரக்கன்
புயந்தலை தீரப் புலியூ ரரனிருக் கும்பொருப்பின்
கயந்தலை யானை கடிந்த விருந்தினர் கார்மயிலே. (ருஉ)

**384.** மனையவர்மகிழ்தல்

கன்னிமாதுக்கி கனன்றுநோக்க
மன்னியமனையவர் மகிழ்ந்துரைத்தது.

தேவியங் கண்டிகழ் மேனியன் சிற்றம் பலத்தெழுதும்
ஓவியங் கண்டன்ன ஒண்ணுத லாடனக் கோகையுய்ப்பான்
மேவியங் கண்டனை யோவந் தனனென வெய்துயிர்த்துக்
காவியங் கண்கழு நீர்ச்செவ்வி வெளவுதல் கற்றனவே. (ருரு)

**385.** வாயின்மறுத்துரைத்தல்

மடவரற்றுழ் வாயில்வேண்ட
அடல்வேலவன் ஆரருளுரைத்தது.

உடைமணி கட்டிச் சிறுதே ருருட்டி யுலாத்தருமிந்
நடைமணி யைத்தந்த பின்னர்முன் நான்முகன் மாலறியா
விடைமணி கண்டர்வண் டில்லைமென் றூகையன் னூர்கண்முன்னம்
கடைமணி வாணகை யாயின்று கண்டனர் காதலரே. (ருசு)

**386.** பாணனொடுவெகுளுதல்

மன்னியாழ்ப்பாணன் வாயில்வேண்ட
மின்னிடைமடந்தை வெகுண்டுரைத்தது.

மைகொண்ட கண்டர் வயல்கொண்ட தில்லைமல் கூரர்நின்வாய்
மெய்கொண்ட அன்பின ரென்பதென் விள்ளா அருள்பெரியர்
வைகொண்ட ஊசிகொற் சேரியின் விற்றெம்மில் வண்ணவண்ணப்
பொய்கொண்டு நிற்கலுற் றோபுலை யாத்தின்னி போந்ததுவே. (ருரு)

**387.** பாணன்புலந்துரைத்தல்

கருமலர்க்கண்ணி கனன்றுகட்டுரைப்பப்
புரியாழ்ப்பாணன் புறப்பட்டது.

கொல்லாண் டிலங்கு மழுப்படை யோன்குளிர் தில்லையன்னாய்
வில்லாண் டிலங்கு புருவ நெரியச்செவ் வாய்துடிப்பக்
கல்லாண் டெடேல்கருங் கண்சிவப் பாற்று கறுப்பதன்று
பல்லாண் டடியேன் அடிவலங் கொள்வன் பணிமொழியே. ()

**388.** விருந்தொடுசேல்லத் தணிந்தமைகூறல்

பல்வளை பரிசுகண்
டில்லோர் இயம்பியது.

மத்தக் கரியுரி யோன்றில்லை யூரன் வரவெனலும்
தத்தைக் கிளவி முகத்தா மரைத்தழல் வேன்மிளிர்ந்து
முத்தம் பயக்குங் கழுநீர் விருந்தொடென் றுதமுன்னம்
கித்தக் கருங்குவ ளைச்செவ்வி யோடிக் கெழுமினவே. (ங௭)

**389.** ஊடறணிவித்தல்

தோன்றலைத்துணையோடு தோழிகண்டு
வான்றகைமடந்தையை வருத்தந்தணித்தது.

கவலங்கொள் பேய்த்தொகை பாய்தரக் காட்டிடை யாட்டுவந்த
தவலங் கிலாச்சிவன் தில்லையன் னாய்தழு விம்முழுவிச்
சுவலங் கிருந்தநந் தோன்றற் றுணையெனத் தோன்றுதலால்
அவலங் களைந்து பணிசெயற் பாலை அரசனுக்கே. (ங௮)

**390.** அணைந்தவழியூடல்

தெளிபுனலூரன் சென்றணைந்தவழி
ஒளிமதிநுதலி ஊடியுரைத்தது.

சேறான் திகழ்வயற் சிற்றம் பலவர்தில் லைநகர்வாய்
வேறான் திகழ்கண் ணிணையார் வெகுள்வர்மெய்ப் பாலன்செய்த
பாறான் திகழும் பரிசினம் மேவும் படிறுவவேம்
காறான் தொடரேட ரேல்விடு தீண்டலெங் கைத்தலமே. (ங௯)

**391.** புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல்

ஆங்கதனுக் கழக்கமெய்தி
வீங்குமென்முலை விட்டுரைத்தது.

செந்தார் நறுங்கொன்றைச் சிற்றம் பலவர்தில் லைநகரோர்
பந்தார் விரலியைப் பாய்புன லாட்டிமன் பாவியெற்கு
வந்தார் பரிசுமன் றுய்நிற்கு மாறென் வளமனையிற்
கொந்தார் தடந்தோள் விடங்கா லயிற்படைக் கொற்றவரே. ()

**392.** கலவிகருதிப்புலத்தல்

கலைவளரல்குல் தலைமகன்றன்னொடு
கலவிகருதிப் புலவிபுகன்றது.

மின்றுன் னியசெஞ் சடைவெண் மதியன் விதியுடையோர்
சென்றுன் னியகழற் சிற்றம் பலவன்றென் னம்பொதியில்
நன்றுஞ் சிறியவ ரில்லெம தில்லநல் லூரமன்னோ
இன்றுன் திருவருள் இத்துணை சாலுமன் எங்களுக்கே. (சக)

**393.** மிகுத்துரைத்தூடல்

நாடேழுரும் இல்லுஞ்சுட்டி
ஆடற்பூங்கொடி ஊடியுரைத்தது.

செழுமிய மாளிகைச் சிற்றம் பலவர்சென் றன்பர்சிந்தைக்
கழுமிய கூத்தர் கடிபொழி லேழினும் வாழியரோ
விழுமிய நாட்டு விழுமிய நல்லூர் விழுக்குடியீர்
விழுமிய அல்லகொல் லோவின்ன வாறு விரும்புவதே. (சஉ)

**394.** ஊடனீடவாடியுரைத்தல்

வாடா வூடல்
நீடா வாடியது.

திருந்தேன் உயநின்ற சிற்றம் பலவர்தென் னம்பொதியில்
இருந்தேன் உயவந் திணைமலர்க் கண்ணினின் நோக்கருளிப்
பெருந்தே னெனநெஞ் சுகப்பிடித் தாண்டநம் பெண்ணமிழ்தம்
வருந்தேல் அதுவன் றிதுவோ வருவதொர் வஞ்சனையே. (சங)

**395.** துனியொழிந்துரைத்தல்

தகுதியினூரன் மிகுபதநோக்கிப்
பனிமலர்க்கோதை துனியொழிந்தது.

இயன்மன்னும் அன்புதந் தார்க்கென் னிலையிமை யோரிறைஞ்சும்
செயன்மன்னுஞ் சீர்க்கழற் சிற்றம் பலவர்தென் னம்பொதியில்
புயன்மன்னு குன்றிற் பொருவேல் துணையாப்பொம் மென்னிருள்வாய்
அயன்மன்னும் யானை துரந்தரி தேரும் அதரகத்தே. (சச)

**396.** புதல்வன்மேல் வைத்துப்புலவிதீர்தல்

புதல்வனது திறம்புகன்று
மதரரிக்கண்ணி வாட்டந்தவிர்ந்தது.

கதிர்த்த நகைமன்னுஞ் சிற்றவ்வை மார்களைக் கண்பிழைப்பித்
தெதிர்த்தெங்கு நின்றெப் பரிசளித் தானிமை யோரிறைஞ்சும்
மதுத்தங் கியகொன்றை வார்சடை யீசர்வண் டில்லைநல்லார்
பொதுத்தம் பலங்கொணர்ந் தோபுதல் வாவெம்மைப் பூசிப்பதே. (சரு)

**397.** கலவியிடத்தூடல்

சீறடிக்குடைந்த நாறிணர்த்தாரவன்
தன்மைகண்டு பின்னுந்தளர்ந்தது.

சிலைமலி வாணுதல் எங்கைய தாகம் எனச்செழும்பூண்
மலைமலி மார்பின் உதைப்பத்தந் தான்றலை மன்னர்தில்லை
உலைமலி வேற்படை யூரனிற் கள்வரில் என்னவுன்னிக்
கலைமலி காரிகை கண்முத்த மாலை கலுழ்ந்தனவே. (சசா)

**398.** முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தல்

முன்னிகழ்ந்தது நன்னுதற்குரைத்து
மன்னுபுனலூரன் மகிழ்வுற்றது.

ஆறார் சடைமுடி யம்பலத் தண்டரண் டம்பெறினும்
மாறார் மழவிடை யாய்கண் டிலம்வண் கதிர்வெதுப்பு
நீறார் கொடுநெறி சென்றிச் செறிமென் முலைநெருங்கச்
சீறார் மரையத ளிற்றங்கு கங்குற் சிறுதுயிலே. (சஎ)

**399.** பரத்தையைக்கண்டமைகூறிப்புலத்தல்

பரத்தையைக்கண்ட பவளவாய்மாதர்
அரத்தநேர்வேல் அண்ணற்குரைத்தது.

*ஐயுற வாய்நம் மகன்கடைக் கண்டுவண் டேருருட்டும்
மையுறு வாட்கண் மழலைத் தழுவமற் றுன்மகனே
மெய்யுற வாமிதுன் னில்லே வருகென வெள்கிச்சென்றுள்
கையுறு மான்மறி யோன்புலி யூரன்ன காரிகையே.* (சஅ)

**400.** ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்தல்

இரும்பரிசில் ஏற்றவர்க்கருளி
விரும்பினர்மகிழ மேவுதலுரைத்தது.

*காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் தக்கோர்தஞ் சங்க நிதிவிதிசேர்
ஊருணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே.* (சக)

## திருக்கோவையார்

*முற்றிற்று.*



# திருவாசகம்:

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

முற்றிற்று.

# திருக்கோவையார்:

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

முற்றிற்று.

